REGISTERED No. 61.

# TANJORE DISTRICT GAZETTE SUPPLEMENT




# MUNICIPAL PROCEEDINGS.

## NEGAPATAM MUNICIPALITY.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



சைவ-எல்லப்பநாவலரியற்றிய

# அருணாசலபுராணம்.



இதற்கு

மழவை - மகாலிங்கையரவர்கள்

செய்த உரையுடன்.

திருத்தணிகை.

விசாகப்பெருமாளையரவர்கள்

பரிசோதித்தப் பிரதிக்கிணங்க

சிதம்பரம்-காரியம்

குருசாமிநாயக்கரவர்களால்

பார்வையிடப்பட்டு

கொ-மாணிக்கமுதலியாரவர்க

ளது சென்னை,

மநோன்மணிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1893.

உ

சிவமயம்

# விளம்பரம்.

இதனால் யாவருக்குந் தெரிவிப்பது யாதெனில் சென்னை சிரங்கப்பட்டணம் சுப்பிரமணியமுதலியார் வீதி 28 - வது வீட்டில் ஸ்தாபித்திருக்கும். மநோன்மணி விலாச அச்சுக் கூடத்தில் நானாவிதமான தமிழ், தெலுங்கு, கிரந்தம், பலவித துலுக்குப புத்தகங்களும், நன்குமதிக்கத் தகுந்த வெள்ளை கடிதத்தில் வசிட்டமுனிவர் ஸ்ரீராமருக்கு உபதேசித்தருளிய ஞானவாசிட்ட வமலராமாயணத்தைவெகு திருத்தமாக வித்துவான்களைக் கொண்டு ஆங்காங்குள்ள எழுத்துப் பிழைகளைத் திருத்தி அச்சிட்டு முடிவுபெற்றிருக்கிறது; ஆகையால் விருப்பமுடையவர்கள் அடியிற் கைகாட்டியிருக்கும் எனதிடம் விலைசரசமாய் பெற்றுக்கொள்ளவும், யாவரேனும் எனக்கு கடிதம் எழுதும் பக்ஷத்தில் பதில்கிடைப்பதற்கு அரை அணா லேபிலனுப்பினாலொழிய பதில் கிடைப்பது அரிது.

இப்படிக்கு,

☞ கொ - மாணிக்கமுதலியார்

28-நெ. சிரங்கப்பட்டணம் சுப்பிரமணியமுதலியார் வீதி - சென்னை.

உ

சிவமயம்.

## புராணச் சருக்கங்களின் அட்டவணை.



—*—

## படங்களின் அட்டவணை



ஆக பதினாறுபடங்கள் அடங்கி யிருக்கின்றன.

—*—

இதில் தலபுராணத்தின் வருத்தின்படி

விசேடமாய் திபக்சரித்திரச் சுருக்கம்.

சேர்ந்திருக்கின்றது.

உ

சிவமயம்.

# திருவண்ணாமலைத்

# தீபதரிசனச் சரித்திரச் சுருக்கம்.



அகண்டாகார சச்சிதானந்த பரிபூரண சுயம்பிரகாசப் பொருளாகிய ஸ்ரீகைலாசபதியானவர் இந்த உலகத்திலுள்ள ஆங்காங்கிருக்கும் ஆத்மகோடிகளுய்யும்பொருட்டுத் திருக்கோயில் கொண்டிருக்கிற பல தலங்களுள் ஆளுடைய பிள்ளையாராகிய திருஞானசம்பந்தசுவாமிகள் ஆளுடைய வரசுகளாகிய திருநாவுக்கரசுசுவாமிகள், ஆளுடையநம்பிகளாகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், ஆளுடைய வடிகளாகிய மாணிக்கவாசக சுவாமிகள் என்னும் இந்நாலவர்களருளிச்செய்த பாடல்களை உடையனவாய்ச் சோழதேசமுதலான தேசங்களில இன்ன இன்ன நாட்டில இத்தனை இத்தனை ஸ்தலங்களென்று முன்னோர்களேற்படுத்தின கிரமப்படியே நடுநாட்டுக்குளளிருக்கும் ஸ்தலங்களுள் விசேடமாகிய திருவண்ணாமலையென்னுந் திருப்பதி கிரேதாயுகத்தில அக்கினி மலையாகவும் திரேதாயுகத்தில மாணிக்க மலையாகவும் துவாபரயுகத்தில் பொன்மலையாகவும் கலியுகத்தில் கல்மலையாகவும் திருவுருக்கொண்டு, அருணாசலம சோணாசலம கௌரிநகரம் தேசுநகரம் முத்திநகரம் ஞானநகரம் சிவலோகம் என்று இவ்வாறு பலபெயர்களை யுடையதும் சிவபெருமானே கிரிரூபமாயிருப்பதும், பார்வதியார் திருவவதாரமானதும், திருக்கண்புதைத்ததும், மகிடாசுர மாத்தனஞ்செய்ததும், இடபாகம்பெற்றதும சந்திரவம்சத்தனாகியவச்சிராங்கதபாண்டியன பேறுபெற்றதும் கலாதரன காந்திசாலி தவஞ்செய்து பேறுபெற்றதும், அக்கினி வம்சத்தனாகிய வல்லாளராஜன் புத்திரசோகந் தீர்ததும், இந்திரதீர்த்தமுதலாகிய அனேக தீர்த்தங்களும் அன்பர்கள் திருமலை வலம்புரிதலும் ஆதித்தனுக்கு தரிசனங்கொடுத்ததும், சூரியவம்சத்தனாகிய பிரதத்தராஜனால அநேககாணிக்கைகள் பெற்றதும் அஷ்டவசுக்களும் பிரமன் முதலானவர்கள்பாவந்தீர்ததும் புளகாதிபன் பேறுபெறறதும் நினைக்க முத்தி தரும்ஸ்தலமென்பதும் ஆகமபுராணத்திற் சொலலப்படுகின்றது.

பரமசிவம் மலையுருவானதற்குக் காரணம் யாதெனில் ஒருகற்பத்தில மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் தாம்தாம் பிரமமென்று வாதித்து போரிட்டதைத் தீர்க்கும்பொருட்டு சிவபெருமான் அக்கினி மலையாய் அவர்கள் மத்தியில் நின்று கலக்கத்தைத் தீர்த்தருளி அவர்

கள் வேண்டுதலினால் ஒருசிறியமலையா யுருக்கொள்ள அதைக்கண்ட பிரமதேவனும் மகாவிஷ்ணுவும் சுவாமியைநோக்கி இம்மலையினுச்சியில் ஒருஜோதி எந்நாளுந்தெரியும்படி கிருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.

அதற்குச் சிவபெருமான் வாரும் பிரம விஷ்ணுக்களே கார்த்திகைமாதத்தில் வரும் கார்த்திகை நட்சத்திரத்தில் இம்மலையினுச்சியில் ஒருசோதிகாண்பிப்போம் அச்சோதியைத் தரிசித்தவர்களின் தரித்திரமும் வியாதியும்நீங்கி இஷ்டகாமியங்களைப் பெற்று வாழ்வார்கள். இவையலலாமல் அரசர்களும் தவசிகளும் தரிசிப்பார்களானால் இடையூறின்றி வாழ்வார்களை அலலாமலும் இதைத்தொழுதவர்களுக்கும் தரிசித்தவர்களுக்கும் அவர்மட்டில்லாமல் அவர்களுடையகோத்திரத்தில் இருபத்தொருதலைமுறைக்கும் மோட்சங்கொடுப்போமென்று திருவாயமலர்ந்தருளினார்.

மேலும் இம்மலை சனனமரணமென்னும்வியாதிக்குமருந்துபோல இருப்பதினால் மலைமருநதென்றும் அழல்வண்ணமாயிருப்பதினால் அருணாசலமென்றும் பெயருள்ளது இதை ஒருதரஞ் சொன்னவாக்குப் பஞ்சாட்சரத்தை மூன்றுகோடிதரம் உச்சரிததபலன் வருமென்றும் அருளிச்செயதார்.

அதற்குப் பிரமதேவனும் மகாவிஷ்ணுவும் ஆனந்தமடைந்துசிவபெருமானைப பார்த்துத்தேவரீர் மலைக்கோலமாயிருநதால் அடியேங்கள் எப்படி பூசைசெயயககூடும் ஆகையால் இந்த மலையின்கீழ்சிவலிங்கமூர்த்தியா யெழுநதருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள் சிவபெருமான் அப்படியே சிவலிங்கமூர்த்தமாகின்றோமென்று அந்தமலையினுள்ளேமறைய, உடனே அம்மலையினிடத்தில் சிவலிங்கந்தோன்றியது, அதைக்கண்டு பரமானநதமாய் மயனென்னுந்தேவதச்சனால் ஓராலயங்கட்டுவித்தார்கள், அப்போதவ்விடத்திலவளப்பம்பொருநதிய நகரமும் மூந்நூறுதீர்த்தங்களும் உண்டாயின, அல்லாமலும் ஆகாயகங்கை கிணறுகளாகவும் கற்பவிருட்சங்கள் மரங்களாகவும் வநதிருந்தன, தேவர்களும் ரிஷிகளும் மனிதர்களாகவந்துபிறந்தார்கள், அரம்பாஸ்திரீகள் தாசிகளாகப் பிறந்தார்கள், ஆகையால் கைலாஸ்தலங்களும் உடலென்றும் அருணாசலஸ்தலம் முகமென்றுமஅதில் சிவபெருமான் கண்ணென்றும் இத்தலத்தின்பெருமையை அளவிட்டுச் சொல்லுதற் கருமையென்றும் நமது பெருமானாகிய நந்திகேசுவரர்மார்க்கண்டேயமுனிவருக்குஅநுக்கிரகஞ்செய்தார்அக்காலத்தில் சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளியபடிஅம்மலையின்மேல் கார்த்திகைமாதத்தில் வருகின்றகார்த்திகை நட்சத்திரத்தில்சோதிதரிசனமாகிக்கொண்டுவந்தபாவனையாகஇப்போதும்அந்தமலையின்மேல

தீபதரிசனமாகின்றமையால் அத்தினத்தில் இந்திரதீர்த்தமுலாகிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து கிரியைவலம்வந்து அவரவர்கள் சத்திக்குத்தக்கபடி தருமங்கள்செய்து அருணாசலேஸ்வரரைத்தொழுது தீபதரிசனஞ்செய்துமதிப்பவர்கள் அளவில்லாச் சம்பத்தையும் மோட்சத்தையு மடைவார்கள்.

ஆதிவாரத்தில் அந்தமலையை வலஞ்செய்தவர்கள் சூரியமண்டலத்தைப்பிளந்து சிவபதத்தை தமக்கு இடமாகச் சேர்த்துக்கொள்வார்கள் சோமவாரத்தில் வலம்வந்தவர்கள் இந்திரனைப்போல் ஏழுலகத்தையுமாண்டு சிவசாரூபியத்தை அடைவார்கள், மங்களவாரத்தில வலஞ்செய்பவர்கள் தங்கள்கடமையும் தரித்திரத்தையும் சங்கிலிதொடர்போல் வருகின்ற ஏழுபிறப்பையும் நீக்குவார்கள் புதவாரத்தில்சிவபெருமானைப் பிரதட்சணஞ் செய்பவர்கள் நாலுவேதங்களையும் ஆறு சாஸ்திரங்களையும் அறுபத்துநான்குகலைகளையும்தெளிந்து முத்திக்கு நெருங்கினவராய்த் தேவர்களாவார்கள் குருவாரத்தில் வலமாய்வந்தவர்கள்திருமூர்த்திகளும் புகழத்தேவர்களுக்கும்முனிவர்களுக்கும்மேலாவார்கழ்,சுக்கிரவாரத்தில்வலஞ்செய்தவர்கள்விஷ்ணுபதத்திற் சேர்வார்கள் சனிவாரவுதயத்தில் வலம்வந்தவர்களுக்கு நவக்கிரகங்களும் பதிரைராமிடத்தின் நற்பலனைகொடுக்கும் சிவராத்திரியிலும், வருஷப்பிறப்பிலும், ஐப்பசிமுதலாகிய மூன்றுமாதங்களிலும் வலம் வந்தவர்களுக்கு மேற்சொன்ன பலன்களிலும் அதிகமானபலன் சித்திக்கும்.

உருவந்தெரியாமல் சித்தரும் தேவரும் இத்திருமலையை வலஞ்செய்வதால் மற்றவர்கள் கிரிப்பிரதட்சணஞ் செய்யும்போது வாகனத்தின்மே லேறிக்கொண்டுவராமலும்,போர்வைபோர்த்துக்கொள்ளாமலும், குடைபிடித்துக் கொள்ளாமலும், பாதரட்சை தொடுத்துக் கொள்ளாமலும், தாம்பூலந்தரிக்காமலும், அருணாசலேசரையே சிந்தித்துக்கொண்டு மிகுந்த பயபக்தியுள்ளவர்களாயிருத்தல் வேண்டுமென்றும், அந்நாளில் விரதமிருந்து சிவதரிசனஞ்செய்யஆலயத்திற்போகின்றவர்களுள் அனுக்கரல்லாதவர்கள் அவ்விடத்திலிருக்கும் ஆதிசைவாசாரியர்களைக்கொண்டு வில்வார்ச்சனை முதலியவைகளைச் செய்வித்தால் தங்கள்கையினாற்செய்த பேறுகிடைக்குமென்றும் பிரமதேவர்சனகரிஷிக்குச்சொன்னார்.

சர்வாலய தீபதரிசனச் சரித்திரச்சருக்கம்.

ஸ்ரீகைலாசத்தில் உலகமாதாவாகிய பார்வதியாரோடு சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும்போது அவ்விடத்தில் ஏற்றியிருந்த நெய்த்தீபங்களில் ஓர்தீபம் அணைந்துபோகின்றதருணத்தில்ஓரெலியான

து அதிலிருந்தநெய்யை உண்ணப்போனபோது அவ்வெலியின்முகமான து அணைந்துபோகிறவத்தியைத் தூண்டியமாத்திரத்தில் பிரகாசம் அதிகரித்ததிஞல சிவபெருமாஞனவர் கிருபைகூர்ந்து அவ்வெலிக்கு மானிடசரீரமும் அரசும் மற்றப்பேருநதந்து பூமியில்பிறக்கும்படி கட்டளையிட்டார், அவ்வெலியானது மாபலிசக்கிரவர்த்தியாய்ப்பிறந்து சகலஐசுவரியத்தையும் அநுபவித்திருக்குங்காலத்தில் ஒருநாள் சிவதரிசனததுக்குப்போக எத்தனித்துத் தன்இராசசின்னமுதலிய சகலஆடம்பர விபவத்துடன் சிவாலயத்துக்குட்பிரவேசித்துப் பிரதட்சணம்வருகையில அவ்விடத்தில ஏற்றியிருந்ததீபநெய்யின்ஓர்துளிஇந்த சக்கிரவர்த்தியின்தேகத்தில ஒழுகினவுடனே அந்தச்சக்கிரவர்த்தியின் தேகமுழுமையும் இரணங்கண்டு வெகுகாலம் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கும்போது ஒருநாள் சிவபெருமான் கிருபைகூர்ந்து சக்கிரவர்த்தியே நீமிகவும் அகங்காரியாகையால நம்மாலுனக்குண்டாயிற்று நீ இன்றுமுதல உத்தேசித்து நெய்முதலிய பொருள்களால் ஆலயங்களுக்குத் தீபமேற்றுவையேயாஞல்உனக்கு இந்தவிரணநீர்ந்துசாயுச்சியபதங் கிடைக்குமென்று அசரீரியாய்த் திருவுளம்பற்றியதைக் கேளவியுற்றசக்கரவர்த்தியானவர் ஆனந்தமடைந்துஅந்தக்கட்டளையின்படியே அன்றுமுதல் சிவாலயங்களிலும் மற்ற இருள்சூழ்ந்த ஆரணியங்களிலும் தீபம்ஏற்றிக்கொண்டு வருங்காலங்களில் ஒருநாள் ஸ்ரீகைலாசபதியாகிய சிவபெருமாஞனவர் திருவுளமிறங்கிக்கார்த்திகைமாசம் பூர்வபட்சம் கார்த்திகை நட்சத்திரததில் தேசோமயமாயெழுந்தருளி அச்சக்கிரவர்த்திக்குச் சாயுச்சியபதமளித்தருளிஞர்.

அக்காலத்தில் சிவதரிசனத்துக்கு வந்திருந்த தேவர்களெல்லாம் அந்தச்சோதியைக்கண்டு பயந்து துதிசெய்து சுவாமியினுடையவுஷ்ணாதணியும்பொருட்டுப் பொரியவல் நிவேதனம் செய்தார்கள் இவ்வாறு கைலாசபதியான சிவபெருமான் மாபலிச் சக்கரவர்த்திக்குச் சோதிசொரூபமாகத் தரிசனங்கொடுத்த காரணமாகச் சிவாலயங்கடோறும் கார்த்திகைமாசம் பூர்வபட்சம் கார்த்திகை நட்சத்திரத்தில் தீபமவைக்கவும் * சுட்கப்பனைகட்டவும் ஆயிற்று.

கார்த்திகைநட்சத்திரத்திற்கு முன்ஞல் பரணிநட்சத்திரஞ்சாயங்காலே அதிவாசதீபத்தில் அக்கினிசாரிய முதலியவைகளின் மூலமாய்மகாலிங்கமூர்த்தியை ஆவாகனம்பண்ணி அந்ததீபத்தைச் சுவாமிசந்நிதானத்திற்ருனே பூசித்து வைக்கவேண்டும்.

மறுநாள் சாயங்காலே அர்த்தசூரிய மண்டலத்தில் தென்னமரம் பனைமரம், பாக்குமரம் வாழைமரம், மூங்கில் என்னும் இந்தமரங்

* சுட்கப்பனையென்பது சொக்கப்பானையென்றுவழங்குகின்றது,

களில் ஓர்விதமரத்தை ஆலயத்திற்கும் இந்திரதிக்குக்கும் மத்தியதா னமாகிய பிரமஸ்தானத்தில் நாட்டவேண்டும், இந்தமரத்துக்குத் தீப தண்டமென்றும் பெயராம்,

தண்டவுன்னதப் பிரமாணம்.

சுவாமிகெர்ப்பகிரகத்துவிமானம் எவ்வளவுஉயரமோ அவ்வளவு உயரமானது அந்தவிமானக் கழுத்தளவாவது இருக்கவேண்டும், இவ் விதமான தீபதண்டத்துடன் உலர்ந்த தென்னோலையாவது, பனையோ லையாவது, பாக்கோலையாவது, வாழைச்சருகாவது, தாழஞ்சருகாவ து, அசோகச்சருகாவது, விமானம்போல் கட்டவேண்டும்.

மேற்சொன்ன பரணிநட்சத்திர மறுநாளாகிய கார்த்திகைநட்ச த்திரத்தில் பஞ்சமூர்த்தி சமேதமாய்ச் சோமஸ்கந்த மூர்த்தியை உச் சவாலங் காரத்துடன் எழுந்தருளச்செய்து மேற்படி தீபம் சுவாமிக் குமுன்னே வரும்படியாகச்செய்து தீபதண்டத்தை நமஸ்காரப்படுத் திக்கொண்டு அத்தீபத்தை அத்தண்டத்தின்மேல் வைத்துச் சருகுக ளைக்கொளுத்திவிட்டு அந்தச்சருகுகள் எரிந்தபின்பு மேற்படிதண்ட த்தைச் சோதித்துவிடவேண்டும் அச்சோதியைச் சிவபெருமானாகப் பாவனைசெய்து தரிசிப்பவர்களுக்கு இம்மையில் செல்வமும் மறு மையிலமோட்சமும்கிடைக்குமென்று ஆகமங்களிற்சொல்லுகின்றது

தண்டவிதி.

உத்தமம் தென்னமரம் மத்திமம் பனைமரம் அதமம் பாக்குமர ம் அதமா அதமம் வாழையும் மூங்கிலுமாம்.

தண்டவுன்னதப் பிரமாணம்.

உத்தமம் உயர்வு மத்திமம் அதன் கழுத்தளவு.

மலையைச்சேர்ந்த ஸ்தலங்களில் நட்சத்திரம் பிரதானமாகவும் சமூத்திரத்தைச்சேர்ந்த ஸ்தலங்களில் பௌர்ணிமிதிதி பிரதானமாக வும் தீபம்வைக்கவேண்டியதென்று ஆகமங்களில் சொல்லுகின்றது.

தீபதரிசனச் சரித்திரச் சருக்கம்

முற்றிற்று.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அருணாசல புராணம்.

## மூலமும் - உரையும்.

### பாயிரம்.

### விநாயகர் காப்பு.

கலிவிருத்தம்.

மிக்க வேத வியாசர் விளம்பிய
விக்க தைக்கிணை யின்றருள் செய்திட
மூக்கண்வெற்பினை மும்மதவாரியை
கைக் களிற்றினைக் கைதொழு தேத்துவாம்.

இ-ள் அநேகவேதங்களை இயல்பாகவே உணர்ந்த வியாசரால் அருளிச்செய்யப்பட்ட ஸ்காந்த புராணத்தில் உருத்திர சங்கிதையி லிருக்கும் இந்த அருணாசலசரித்திரத்தை இக்காலத்தில் தமிழினாற்செய்ய இதற்கு இணையில்லையென்று சொல்லும்படி அனுக்கிரகம் செய்தற்கு மூன்றுகண்களையுடைய மலைபோன்றவரைச் சமுத்திரம்போன்ற மும்மதத்தையும் தும்பிக்கையினையுடைய யானைமுகம்பொருந்திய விநாயகரைக் கையினாற்றொழுது தோத்திரஞ்செய்வோம். எடுத்தநூல் இடை யூரில்லாமல் முடிதற்பொருட்டு-எ-று

(க

## சபாபதிதுதி.

### சந்தக்கலிவிருத்தம்.

முதிருஞ்சுவை மதுரம்பெற மொழியுந்தமிழ் விரகன்புகழ்
பதிகம்புனை பவனம்பினர் பவபஞ்சன னமலன்கதி
ருதிரும்படி பகிரண்டமு முடையும்படி யிலகும்படி
பதிரும்படி நடனப்புரி யதிருங்கழ லதிருங்கழல்

இ-ள் மிகுந்த மதுரரசமுண்டாகப் பாடுகின்ற திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளால செய்யப்பட்ட பதிகமாகிய மாலையைத் தரிக்கி றவராகியும், தம்மை யடைந்தவர்கள் பிறவியைக் கெடுப்பவராகியு ம், மலரகிதராகியும் விளங்கிகுரியனுதிரவும், பகிரண்டமுடையவும்வி ளங்கி பூமியதிரவும், நடனத்தைச்செய்யாநின்ற மிகவுஞ் சப்திக்கின் ற வீரகண்டையைத்தரித்த சபாபதியினுடைய பாதத்தை வணங்கு வோம்-எ-று. (௨)

இச்செய்யுளுக்குப் பயனிலைவருவிக்கப்பட்டது.

## இத்தலமகிமை

### அறுசீர்க்கழிநெடிலாசிரியச் சந்தவிருத்தம்.

இரவிகள் சந்திரர் வயிரவர் விஞ்சைய ரிமையவ ரெண்டிசையோர், ருரகருந்தவர் முனிவரர் பங்கய ருவணனெடுங் கொடியோர், பரவி நெருங்கலி னுலகநிறைந்தவர் பணியுமிடங்கிடையா, தாகரவென்பது கடலின்முழங்கிய தருணைவளம்பதியே.

இ-ள். சூரியரும் சந்திரரும் வயிரவரும் வித்தியாதரரும் தேவரும் அஷ்டதிக்குப்பாலகரும் நாகலோகத்தாரும் அரியதபசிகளும் முனிவ ரும் பிரம்மாக்களும் கருடக்கொடியை யுடைய விஷ்ணுக்களும் பரந் து நெருங்குதலினால் உலகநிறைந்து அவாகள் வணங்குதற்கு இடங்கி டையாத தாலவர்களாலே சொல்லப்பட்ட அரகரவென்கிற சப்தமா னது சமுத்திரததிலும் அதிகமாக முழங்கும் வளப்பத்தையுடையது அருணசலமென்னும் தலமாம்-எ-று. ௩

இளமுலை மங்கையர் முகமுநெருங்கிய விருகுழை யும்பகலே, யொளியொருசந்திர னுடனிருசெங்கதி ருதயமெனுந்தனியீர், தளைய விழுந்தொடை மகபதிதன்பதி தனபதிதன்பதியா, மளகைவளம்பதி தனினும்வளம்பதி யருணைவளபதியே.

இ-ள். இளமையாகிய தனங்களையுடைய பெண்கள் முகங்களும்அ வர்களணிந்தஇரண்டுஇரத்நகுண்டலங்களும்பகலிலேபிரகாசிக்கின்ற ஒருசந்திரருடனே இரண்டுசூரிய ருதயமானார்களென்று சொல்லும் படியாகவப்பற்ற முறுக்கவிழ்ந்த கற்பகமாலையைத் தரித்த தேவேந்தி ரனுடைய பட்டணமாகிய நகரமாகிய அளகாபுரியைப்பார்க்கிலும், வளப்பத்தையுடையது, அருணசலமென்னும் தலமாம்,

காலனெதிர்த்திட மார்பிலுதைத்தவர் காமனுருப்பொடியா
ராலமிரட்டினர் மாலைமதிகுறை யாடலவப்பணியார்
நான்முகத்தவன் ஞாலமளிப்பவ னும்மதற்கரியார்
சூலமெடுப்பவர் மேவுதிருப்பதி சோணகிரிப்பதியே.

இ-ள். எமனெதிர்க்க மார்பில் உதைத்தவராகியும், மன்மதனுடையதேகத்தைப் பொடியாகச் செய்தவராகியும், விஷத்தைக் கண்டத்தில் தரித்தவராகியும்,. மூன்றாம்பிறையைத் தரித்தவராகியும், ஆடுகின்றசர்ப்பத்தை ஆபரணமாகப் பூண்டவராகியும்பிரம்மாவும் விஷ்ணுவும்தேடுதற் கரியவராகியும், சூலத்தைக் கையிலெடுத்தவராகியும், விளங்குகின்ற பரசிவன் வாசஞ்செயகின்ற அழகாகியபதி அருணாசலமென்னும் ஸ்தலமாம்-ஏ-று ௫

பரமசிவவணக்கம்.

சந்தக் கலிவிருத்தம்.

உறலொடுபகையறு மொருமுத லெவனள
வி றுதியிலுலகரு ளிறைபவனெவனவன்
மறைமுடிவினினடம் வளர்பவனெவனவ
னறிவினிலறிபவனடியிணை தொழுதனம்.

இ-ள. உறவும் பகையுமில்லாத ஒப்பற்றமுதன்மை யானவனெவன்,சருவசங்காரமான பின்புஉலகத்தைஉண்டாககிறவனெவன், வேதமுடிவிலே நடனஞ் செய்கின்றவனெவன்,தன்னியற்கை யறிவினாலே சகலத்தையு மறிகின்றவனெவன், அப்படிப்பட்ட தன்மையையுடைய பரமசிவனது திருவடிகளை யாமவணங்கினோம்-எ று. ௬

அருணாசலேசர் துதி

கலிநிலைத்துறை.

மணிகொண்ட நெடுங்கடலில விழிவளருந் திருமாலு மறைமினும், பணிகொண்ட பாதலத்தும் பூதலத்து மீதலத்தும் பரிந்து தேட, வணிகொண்டபிர்மாண்ட கோளகைபோற் கோளகையா யழகுகாட்டக், கணிகொண்ட வொருவரையா மொருவரையா மகலாது கருத்துட்சேர்ப்பாம்.

இ-ள். இரத்நங்களுக்கிருப்பிடமாகிய நீண்டகடலிலே நித்திரைசெய்கின்ற விஷ்ணுவும் பிரமனும் நாகங்கள வாசஞ்செய்கின்ற பாதாளத்திலும் பூமியிலும்மேலுலகத்திலும வருந்திததேடஅவர்களால எட்டப்படாமல் அழகாகிய பிரமாண்டகோளகையானது பொன்னாற்செய்யப்பட்ட கோளகையாகிய அழகுகாண்பிக்க யெண்ணங்கொண்டஒப்பற்ற அக்கினிமலையாகிய பரமசிவத்தை நீங்காது இருதயகமலத்திற சேர்த்துக் கொளவோம்-எ-று. ௭

ஒருமானைக்கரத்தினில்வைத் தொருமானைச்சிரத்தினில்வைத்து லகமேழுந், தருமானையிடத்தினில்வைத் தருள்வானைப் பவளநெடுஞ் சயிலம்போல, வருமானைமுகத்தானை யளித்தானைப்பெருமானை மகிழ வேறும், பெருமானையருணகிரிப் பெம்மானையடிபணிந்து பிறவி தீர்ப் பாம்.

இ - ள், தாருகாவனரிஷிகள் வரவிட்டமானைக் கையிலேவைத்தும் ஒருமான்போன்றகங்கையை முடியில்வைத்தும், ஏழுலகத்தையும் பெற்ற உமாதேவியை வாமபாகத்தில்வைத்தும், அடியார்க் கருள்செய்கிறவரும், பவளம்போல்வருகின்ற ஆனைமுகத்தையுடைய கணபதியைப்பெற்றவரும்போர்செய்கிற இடபவாகனத்தில் எழுந்தருளுகின்ற ஆண்டவருமாகிய அருணசலத்தலத்தில் வீற்றிருக்கின்ற பரமசிவனுடைய ஜீவபாதத்தைவணங்கி இனிமேல்வரும்பிறப்பைத் தீர்த்துக்கொள்ளுவோம்-எ-று எ

உண்ணாமுலையம்மை துதி.

காரொழுகுங்குழலாளைக் கருணைவழிந்தொழுகுமிரு கடைக்கணாளை, நூரவிளநிலமொழுகப் புழுகொழுகவழகொழுகு முகத்தினாளை, வாரொழுகுந்தனத்தாளை வடிவொழுகித்தெரியாத மருங்குலாளைச், சீரொழுகும்பதத்தாளை யருணையுண்ணாமுலையாளைச் சிந்தைசேர்ப்பாம்.

இ-ள், மேகம்போன்ற கூந்தலையும் கிருபைவழிந் தொழுகுகின்ற இரண்டுகடைக்கண்களையும் தந்தங்களின்காந்தி இளமையாகிய சந்திரிகைபோல் பிரகாசிக்கப்புழுகுவசிக்கின்ற அழகுபொருந்திய முகத்தையும், கச்சணிந்ததனங்களையும், அதிகவழகையுடையதாய் ஒருவருக்குந்தெரியாத இடையையும் சிறப்புப்பொருந்திய பாதங்களையுமுடைய அருணசலத்தலத்தில்வீற்றிருக்கின்ற உண்ணாமுலையம்மையை மனதில் நினைத்துக்கொள்ளுவோம்-எ-று அ

யானைதிறைகொண்ட விநாயகர்துதி.

மதமூன்றுமாறுக வருங்களிற்றுமுகத்தானை மனதிலேதான், பதமூன்றுமழிந்தவற்குப் பதமூன்றுகடந்தபதப் பாலிப்பானை, விதமூன்றுபுரங்கடிந்தா ரளித்தருளுமொருமுதலைவேரோடேசஞ், சிதமூன்றுபிறப்பொழிக்குமானைதிறைகொண்டவனைச் சிந்தைசேர்ப்பாம்.

இ-ள், மும்மதங்களும் ஆறாகி ஓடிவருகின்ற யானைமுகமுள்ளவரும், மனத்தில் தம்முடைய சீர்பாதங்களைச் சிந்திக்கின்ற அரியதவத்

தையுடையவர்களுக்கு நான்காம்பதமாகிய சாயுச்சியத்தைக் கொடுப் பவரும் முப்புரத்தைநீறுசெய்த சிவபிரானாலே பெறப்பட்டவரும் ஓ ப்பற்றமுதலாகிய சஞ்சிதவினையையுடைய பிரப்பைக்கெடுக்கின்ற வருமாகிய யானைநிறைகொண்டவரென்னும் விநாயகரை மனத்திற் சேர்த்துக்கொள்வோம்-எ-று.

சிவசுப்பிரமணியர் துதி.

கொந்தாருமலர்சோலை யருணைநெடுங்கோபுரத்திற்குமரவேளை, வந்தாரைவாழ்விக்க வடவீதிதனிலுறைய மயிலினானைக், கந்தாருங்க டக்களிற்று மகவாற்குத்தருநிழலுங் கனகநாடுந், தந்தானைமலர்கடப் பந் தாரானைப்பணிபவர்தா டலைமேற்கொள்வாம.

இ-ள், பூங்கொத்துகளையுடைய சோலைசூழ்ந்த அருணாசலத்துக்கி ழக்குக் கோபுரவாசலுக்கடுத்த மேற்புரமண்டபத்திலிருக்கின்றவரு ம் தம்மையடைந்தவர்களைப் பிழைப்பிக்கச்செய்யவட வீதியிலேவாச ஞ்செய்கின்ற மயில்வாகனக்கடவுளும் தறியிற்கட்டப்பட்ட மதம்பொ ருந்திய ஐராவதத்திலேறுகின்ற தேவேந்திரனுக்குத தெய்வலோகத் தையும் கற்பகவிருட்சத்திநிழலைக்கொடுத்தவரும் கடப்பமாலையைத் தரித்தவருமாகிய எமதுசிவசுப்பிரமணியக்கடவுளை வணங்குகிற அடி யார்களுடையபாதங்களைத் தலைமேல்வைத்துக்கொள்வோம்-எ-று ௰

தேவாரம் பாடியருளிய மூவர்துதி.

வாதுகொண்டபரசமய கோளரியையடிவணங்கி வன்கற்றுணை ற், மீதுகொண்டகருங்கடலைக கடந்தசெழுந்தமிழ்க்கடலின் றிருத்தா ள்போற்றி, காதுகொண்டவிழிப்பரவை திருமனைக்கெம்பெருமானைக் கால்கணைவத், தூதுகொண்டசுந்தரனைத தம்பிரான்றோழனையாந்து திசெய்வோமே,

இ-ள், வாதுகொண்டு ஜயிக்கவந்த சமணர்களாகிய யானைகளுக்கு சிங்கமாகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுடைய பாதத்தைவ ணங்கி வலியகருங்கல்லோடு சேர்த்துக்கட்டிச் சமணர்கள்சமுத்திரத் திற்போட அக்கல்லினாலேதானே அச்சமுத்திரத்தைக்கடந்த செந்த மிழ்க்கடலென்றுசொல்லப்பட்ட அப்பர்சுவாமிகளுடைய பாதத்தை வணங்கி காதளவுந்தாவிய கண்களையுடைய பரவைநாச்சியாருடைய திருமனைக்கு இரண்டுபாதங்களும்நோக தமதாண்டவரைத் தூதா வனுப்பிய தம்பிரான்றோழராகிய சுந்திரமூர்த்திசுவாமிகளை வணங்கு வோம்-எ-று. ௰௧

திருவாதவூரடிகள்துதி.
தரவுக்-கொச்சகக்கலிப்பா.

அத்தனூர்பெருந்துறைபுக் கரியவினைக்கடல்கடந்து
... பனிதமாகியசிவன்

முத்தனார்மாணிக்கவாசகனார்முத்திக்கு
வித்தனார்வாதவூர் வித்தகனார்தாள்போற்றி

இ-ள், பரமசிவன் குருமூர்த்தமாக எழுந்தருளியிருந்த திருப்பெருந்துறைக்கும்போய் அச்சுவாமியினுடைய அனுக்கிரகம்பெற்று அரிதாகிய தீவினைக்கடலைத்தாண்டி அந்தக்காலத்தில் வியாபித்திருந்தபுத்தர்களுடையமதத்தைக் கண்டனஞ்செய்துபரிசுத்தமாகிய சீவன்முத்தித் திசையடைந்தவரும் அம்முத்தியாகிய நிலத்திற்கு விதையாகியும் திருவாதவூரிற்பிறந்த ஞானசொரூபியாகியுமிருக்கின்ற மாணிக்கவாசகசுவாமிகளுடைய பாதத்தைவணங்குவோம்-எ-று. ௰௨

திருத்தொண்டர்கள் துதி.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

மனையாளையாற்களித்து மனக்களித்தவியற்பகையார் மலர்த்தாள்போற்றித், தனையாளும்பெருமானுக கெச்சிலிடுங்கண்ணப்பர்சரணம்போற்றி, வினையாளரறியாத திருநீலகண்டரடிவிரும்பிப்போற்றி, எனையாளுமிளையான்றன் குடிமாரரிணையடியை யிறைஞ்சுவோமே.

இ-ள், பரமசிவன் அடியாரவேடம்பூண்டுவந்து பெண்சாதியையெனக்குக் கொடுத்துவிடென றுகேட்க அதற்காகசந்தோஷத்தை யடைந்து சுவாமிக்குத்தன்மனைவியரையுங்கொடுதது அதனால் அதிகமகிழ்ச்சியடைந்த இயற்பகைநாயனருடைய மலர்போன்றபாதங்களைவணங்கித் தன்னையாட்கொண்ட சுவாமிக்குத் தான்தின்றுருசிபார்த்த எச்சிலைக்கொடுத்த கண்ணப்பதேவரது பாதத்தைவணங்கி வினையையுடையவர்கள் அறியாத திருநீலகண்ட நாயனருடைய பாதத்தைமகிழ்ந்துவணங்கி அடியேனை ஆட்கொணடருளுமஇளையான்றன்குடிமாரநாயனருடைய பாதத்தைவணங்குவோம்-எ-று. ௰௩

ஐயடிகள்காடவர்கோ னீரடியைவணங்கிமக வறுத்தெம்மாற்கு, மெய்க்கறிசிலுடன்படைத்தார் திருவடியைத்தொழுதுதிருநீற்றுச்சேரமன், மெய்யடியைப்புகழ்ந்துதெய்வ வுலாச்சொன்னசேரனடி விரும்பியேத்திப், பொய்யடிமையில்லாத புலவர்முதலனைவரையும் போற்றுவோமே.

இ-ள், ஐயடிகள் காடவர்கோன்நாயனரது இரண்டு பாதத்தையும் வணங்கி எமதுசுவாமிக்குப் பிள்ளையை அறுத்துச்சமைத்த கறியை மெய்விட்ட அன்னத்துடன்படைத்த சிறுத்தொண்டநாயனருடைய

மெய்மையாகிய பாதத்தைவந்தித்துத் தெய்வீகம்பொருந்திய திருவுலாப்பிரபந்தம்பாடிய சேரமான்பெருமான் நாயனாருடையபாதத்தை ஆசையுற்றுப்பணிந்து மெய்யடிமையையுடைய புலவர்கள் முதலாகிய சகலரையும் வணங்குவோம்-எ-று. ௰௪

நந்திகேசுரர்-துர்க்கை-கௌதமர்-சண்டேசுரர்-துதி.

நந்திதிருவடியிறைஞ்சி விந்தையடிபுகழ்ந்துமறை நான்கிற்கைக்தாய், வந்தருளுங்கௌதமனார்மலரடியென்முடிக்குமுடி மாலையாக்கித், தந்தையிருபதஞ் சிதைத்துச் சிதையாதபதத்திருந்த தண்டித்தாளைச், சிந்தைமிசைக்குடியிருத்தி யருணகிரிநினைபவர்தாள் சென்னிசேர்ப்பாம்.

இ-ள், நந்திகேசுரருடைய அழகிய பாதங்களைத்தொழுது துர்க்காதேவியினுடைய பாதத்தைவணங்கி நான்குவேதத்தினின்றும் ஐந்தாமவேதசொரூபமென்று சொல்லப்பட்ட கௌதமருடைய தாமரைபோன்றபாதத்தை என்சிரத்துக்குத் தரிக்கப்பட்ட மாலையாகச்செய்து தம்முடையதகப்பனாரது இரண்டுபாதங்களையும்வெட்டி அதனால் கெடாத மோக்ஷபதத்திருந்த சண்டேசருடையபாதத்தை இருதயத்திற் குடியிருக்கச்செய்து அருணசலத்தலத்தை நினைப்பவருடையபாதத்தைச் சிரத்திற்சேர்த்துக்கொள்ளுவோம்-எ-று. ௰௫

அவையடக்கம்.

தேறுகின்றபலகலையுந் தெளிந்தசுவையிருநான்குந் திகழும்பாடல், கூறுகின்றபுலவர்முன்னேதமியேனுஞ் சிலபுகலக்குறித்தவாறு, வீறுகின்றமறைவிரிஞ னேறிவருமனத்தின்முன்னும் விரிஞ்சன்றாதை, யேறுகின்றகருடன்முன்னு மொருமசகம்பறவையெனத் திரிதல்போலும்.

இ-ள், பலநூல்களையுங் குறைவறக்கற்று எட்டுச்சுவையும் பொருந்திய தமிழ்பாடல்களைச்சொல்லுகின்ற வித்துவான்கள்முன்னே ஒன்றுமறியாத யானுஞ்சிலபாடல்களைப்பாட நினைத்தவிதம் விளங்கியநாலுவேதங்களையுடைய பிரமனேறிநடத்தும் அன்னவாகனத்தின்முன்னும் அவன்தகப்பனாகியவிஷ்ணு ஏறும்படியானகருடன்முன்னும் ஒருசிறியகொசுகுதானுமொரு பறவையெனப்பறத்தல்போலும்-எ-று.

எட்டுச்சுவையாவன சிங்காரம், வீரம், பெருநகைகருணை-ரௌத்திரம், குற்சை, அற்புதம், பயம்.

நீரிருக்குதெனைப்பழித்து விடுவரோவதுபாலி னிகழுமானல், நாரிருக்குதெனக்கழித்து விடுவரோவதுமலரி னண்ணுமானு, லாரிருக்

குஞ்சடைமுடியார் விடமிருக்குந்திருடற்று ருணாதர், பேரிருக்கு ந்தகைமையினு லெனதுரையையிகழுவரோ பெருமையோரே.

இ-ள். பாலோடுகலந்திருக்கின்ற நீரைச் சகவாசயோக்கியத்தால் த ள்ளாமலெடுத்துக்கொள்ளுவார்கள் புட்பமாலையோடுசேர்ந்தநாரையு ம் அப்படியேகொள்ளுவார்கள் ஆத்திமாலையைச்சூடிய சடைமுடி யையும் ஆலகாலமிருக்குங் கண்டத்தையுமுடைய அருணசலேசுரரு டைய நாமமிருக்கிறபெருமையினுலே என்னுற்செய்யப்பட்டபுன் பா டலையும் பெரியோர்கள் ஒப்புக்கொள்வார்களேயன்றி இகழார்கள்

அழகுதரக்கனிந்தநச்சு மரம்பழயதெனினுமதி லமுதுண்டா மோ, விழைவுதருசுவைக்கரும்பு புதியதுவேயெனினுமதன் விரதம் போமோ, இழிவுருபாடலுமுயர்வு தங்கியசெய்யுளுமவைபோ லிருக் குமாகில், பழமையென நலந்தருமோ புதுமையென விகழ்ந்திடுமோ பயன்கொள்வோர்க்கே.

இ-ள், அழகிய சிவப்புநிறம்பொருந்தப் பழம்பழுத்த எட்டிமரம் வெகுநாள் மரமாயிருந்தபோதிலும் அதிமாதுரியமுண்டாகாது யாவ ராலும் இச்சிக்கப்பட்ட இனிதாகியகரும்பு கொஞ்சநாளையதாயிருந் தாலும அதிலகசப்புண்டாகாது அதுபோல் குற்றத்தோடு கூடியசெ ய்யுள் பழமையாயிருந்ததினுலேயே ஒருநன்மையைக் கொடுக்காதுயா தொருதோஷமுமில்லாத உயர்வானபாடல் சிலநாளைக்கு முன் உண் டாயிருந்ததினுலேயே இகழப்படாது பிரயோசனத்தைக் கொள்வோ ர்களுக்கு-எ-று. ௰௮

திணையளவுந் தமிழ்மிடியற்றதிமதுரம் பிறந்தகல்வித்திறமையோ ரும், நிணையுமிடற்சுவையறியாமூடர்பரு உவறிவின்முன்னே நிற்கலா மோ, விணையடங்குவணைவிழிய னிச்சமலரணையதிரு மேனிமாஞர், பு ணைவில்மதன்மலர்க்கணையைய பொருப்பதல்லாலமரினம்பு பொருத்தி டாரே.

இ-ள், கொல்லுந்தொழிலடைகிற நீலோற்பலம்போன்ற கண்களை யும் அனிச்சப்பூவொத்தவுடம்பினை யுடையபெண்கள் கருப்புவில்லை த்தரிக்கின்ற மன்மதனுலேவிடப்பட்ட புட்பபாணத்தைப் பொறுப் பார்களேயல்லாமல கொடிதாகிய யுத்தத்தில்விடுகிற அம்பைப்பொ ருக்கார்கள் அதுபோல் திணையளவுகூடச்செந்தமிழ்த்தரித்திரம் இன் றி அதிகமதுரம்பிறந்த கல்வியல்லவர்களும்இலக்கணரசமே யறியாத மூடர்களுடைய மிகுந்த அறிவையுடைய கல்விப்பிரசங்கத்தின் முன் னிற்கார்கள்-எ-று ௰௯

## நூல்வரலாறு.

கருத்துருகவிறைவணங்கிக் கருள்புரியுநந்தியுமார்க் கண்டம்கோத, விருத்திமறைவியாகமுனிக் கவனுரைக்கச்சூதனுக்கு வியாசன் சொல்லப், பொருத்தமனவிருடியருக் கருட்சூதனமொழிந்தசிவ புராணங்கோடி, யுருத்திரசங்கிதையுரைத்த வருணகிரிவளத்தினையா னுரைக்கலுற்றேன்,

இ-ள், மனமுருகப் பரமசிவன் நந்திகேசுரருக்கு அருள்புரியநந்திகேசுரரும் மார்க்கண்டேயருக் கருள்செய்ய, மார்க்கண்டேயர் வேதங்களையொழுங்குசெய்த வியாசருக்கருள்செய்ய வியாசர் சூதமுனிவருக்குச்சொல்ல, சூதர் ஒருவழிப்பட்ட மனமுடைய சௌனகாதிரிஷிகளுக்கருள்செய்த சிவபுராணங்கோடியாகும் அவைகளில் முக்கியமாகியஸ்காந்தத்தில் உருத்திரசங்கிதையிற்சொல்லிய அருணாசலத்தலமகிமையைச் சொல்லத்தொடங்கினேன்-எ-று ௨௰

அருணைநகர்வளமையுமா லயனகந்தைவிடவழல்வெற் பானவாறும், பொருவின்மகமழித்ததுவு மரனுமையையமணந்ததுங்கண்புதைத்தவாறும், வருமகிடற்செற்றலைத்ததுவுமிறைவியிடங்கலந்ததுவுமவயிரப்பூணு, னிருவினையையகற்றியது மற்றுமுளசரிதையெலா மியம்புவேனே.

இ-ள், அருணாசலத்தலமகிமையும் பிரமவிஷ்ணுக்களுடைய கர்வமடங்கஅக்கினிமலையானதும் ஒப்பில்லாத தக்கனுடைய யாகத்தை அழித்துப்போட்டதும் பரமசிவன் பார்வதியைக் கலியாணஞ்செய்ததும் அப்பார்வதி சுவாமியினுடைய கணகளைமூடியதும்மகிடாசுரனை உமாதேவிகொன்றதும், அப்பார்வதிவாமபாகத்திற்சேர்ந்ததும் வச்சிராங்கதபாண்டியனுடைய பாவத்தைநீக்கினதும மற்றுமுள்ளதுஞ்சொல்வேன்-எ-று. ௨௧

அங்கிகுலமோங்கவரு வல்லாளபூபன்ற னரியதொண்டுந், துங்கமிகுந்தீர்த்தமுடன் திருமலையைவலம்புரியுஞ்சுடரோனபேறும், பொங்குபிரதத்தனொடு வினைதீர்த்தவாறுபுள காதியாவு, மிங்கிதஞ்சேர்வடகலையி லிருந்ததனைத்தென்கலையா லியமபலுற்றேன்.

இ-ள், உலகின்கண் ஓங்கு முக்குலவேந்தருள் அக்கினிகுலோதது ங்கனென்றுவழங்குஞ் சேரகுலாதிபனாகிய வல்லாள ராஜனுக்குப்பின்னைகலிநீக்கி முத்தியளித்ததும் அத்தலததிலோங்கும் தீர்த்தங்களின் பெருமையும் அவ்வருணாசலத்தை வலஞ்செய்பவாகள் பெறும்பேரு

ம் ஆதித்தனென்னுங் கதிரவனுடைய கர்வத்தையடக்கி முத்தியளித்தவாறும் பிரதாபம்பொருந்திய பிரதத்தனென்னும் வேந்தனது சரிதையும் பாவந்தீர்த்தசரிதையும்புழுகுபூசையாகவிருந்து மூன்றுலோகங்களுஞ்சஞ்சரித்துவந்த புளகாதிபனென்னு மரக்கனுடைய சரிதமும் இங்கிதமிகுந்த வடமொழியென்னுங் கிரந்தத்திலிருந்ததைத்தென்மொழியாகிய தமிழினாற்சொல்லத்தொடங்கினேன்-எ-று. ௨௨

பாயிரம்- முற்றிற்று.

ஆக- திருவிருத்தம்-௨௨.

——(*)——

சிவமயம்

திருக்கைலாசநாத

திருநந்திசருக்கம்.

—— (*) ——

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்

தூங்கமழுவுமழைபிரம்பு கரிணையகலாதகையான றங்கிச்சுன்றுரோ- திங்களுமிழ்நிலவனைய வெண்பொடியானசடைமுடியான் செறிமுக்கண் ணான், நிகரைத்திருவையானகலாப்புலித்தோலன் புயநான்கான் புரிமுந்நூலா ன், கங்கைமதிதவழ்சடையான் றிருவாணைசெலுத்திவெள்ளிக் கயிலைகாப் பான.

இ-ள். உயர்வாகியமழுவும் மானும்பிரம்பும் உடைவாளும்நீங்காத கையையுடையவர்பவளமலையில் சந்திரன்பொழிகின்றநிலவுபோலத் தேகத்தில்அணிந்த விபூதியையுடையவர், சடைமுடியையுடையவர், நெருங்கிய மூன்றுகண்களையுடையவர், விளங்குகின்ற இடுப்பில்என்றும்நீங்காத புலித்தோலையுடையவர், நான்குபுயங்களையுமுடையவர், மூன்றுபுரியாகிய பூணூலையுடையவர், கங்கையுஞ்சந்திரனுந்தவழ்கின்ற சடையையுடைய பரமசிவனது கட்டளையைச் செலுத்திக்கொண்டு கைலாயகிரியைக் காக்கின்றவர் எ-று. க

கொய்யணைமலர் விரத்தான் மைவளருந்திருமிடற்றான் குலவெள்ளேற்றான், சைவமெனும்பயிர்தழைக்கக் கருணைமழைபொழிமேகந்தன்னையொப்பா, னைவரையுமகத்தடக்குஞ் சிலாதரற்குப்புறத்துலவுமாவி போல்வான், மெய்ம்மைமெலாங்கொழுச்சிறந்த மலர்ப்பதத்தானந்தியெனு ங்

கான்

யாகிய கைலாசத்திரியில் எழுந்தருளியிருந்து முயலகன்மேல் வலப்பாத
த்தைவைத்து அரிதாகிய வேதப்பொருளை முனிவர்களுக்குத்திருவாய்ம
லர்ந்தருளிய பரமசிவம்போல் இருந்தார் அந்தவேளையில்-எ-று. ௫

குற்சனுரே மன்குமுதன்குமுதாக்கன் சகடாயன் கும்பசாதன், வ
ற்சர்வைசம் பாயனர் கஞ்சிமுனிபலிக்காலன் வாமதேவன், சற்சனகன்ச
னற்குமரன் வாதராயணன்மதங்க னடனத்தானை, யர்ச்சனைசெய்யனந்த
முனி முதலனந்த முனிவரர்தம் மருகிற்சூழ.

இ-ள். குற்சர்-உரோமசர்-குமுதர்-குமுதாட்சர் சகடாயர்-அகத்திய
ர்-வற்சர்-வைசம்பாயனர்-கஞ்சி-வியாக்கிரபாதர்-வாமதேவர்-சனகர் சன
ற்குமாரர் வியாசர்-மதங்கர்-சுவாமியினுடையநடனம் பொருந்தியதிருவ
டிகள் அர்ச்சனைசெய்கின்ற பதஞ்சலிமுதலாகிய அனந்தமுனிவர்கள் த
ம்முடைய பக்கத்திற்சூழ-எ-று. ௬

மன்னியமார்க்கண்டமுனி யுடனெழுந்துடணிந்துயிர்கண்மழைமி
ன்போல, விந்நிலத்திற்பிறப்பதுவு மிறப்பதுவுமிருவினையு மெமக்குத்
தோன்றச், சொன்னவொருதனிமுதலேமுத்திபெரும்பரிசெமக்குச சொ
ல்வாயென்று, னன்னவுரைசெவிப்புகலு நந்தியருள்சுரந்துமுனிக ருள்
ளுதானன்.

இ-ள். நிலைபெற்றவயதினையுடைய மார்க்கண்டேய முனிவர் சீக்கிர
த்தில் எழுந்திருந்து நந்திதேவரை வந்தனஞ்செய்து சுவாமிமேகத்தில்
தோன்றி அதிசீக்கிரத்தில் அழியமின்னல்போல உயிர்கள் இவ்வுலகத்
திற்பிறப்பதும் இறப்பதும் இவைகளுக்குக்காரணமாகிய நல்வினை தீவி
னைகளாகிய இரண்டும் எங்களுக்குவிளங்கும்படியாக அருளிச்செய்த ஒ
ப்பற்றகடவுளே நாங்கள மோக்ஷத்தையடைவதற்குத்தக்கவழியைக் கி
ருபைசெய்ய வேண்டுமென்றுகேழ்க்க, அந்தவார்த்தையைக்கேட்டவுட
னே மிகுந்தகிருபை உடையவராகி நந்திதேவர் மார்க்கண்டேயருக்கு
அருளிச்செய்யத்தொடங்கினர்-எ-று. ௭

கம்பந்திகும்பந்தி காவிரிகோதாவேரி கண்ணவேணி, பம்பைந்தி
வேகந்தி வேதவதிசரயுநதி பரமாங்கங்கை, பொன்முகிநல்யமுனைநதிநரு
மதைமேற் செப்புஞ்சோணை, யம்புவியின்மிகவெளவங்காடினர்தம் வினை
யகற்று மதுவல்லாமல்.

இ-ள். கம்பந்தி-கும்பந்தி-காவேரி கோதாவிரி கிருஷ்ணவேணி-பம்
பைந்தி-வேகவதி-சாயுநதி எல்லாநதிகளுக்கு மேலாகியகங்காநதி சாமி
ரவர்ணி-பொன்முகி யமுனைநதி-நருமதைநதி மேன்மையாகச்சொல்லப்
பட்ட சோணநதியென்று அழகான பூவுலகத்தில் அனேகநதிகளுண்டு
அவைகள் தம்மிடத்தில் ஸ்நானஞ்செய்தவர்களுடைய பாபத்தைநீக்கும
அதுவன்றாமல்-எ-று. ௮

பொய்யாது புனல்பெருகுங் காவேரிநதிக்கரையிற் பூந்தாராயு,மை யாறுமிடை மருதுந் திருக்குடந்தைவளநகரு மானைக்காவு, மையாறுமிட ந்றார்திரிசிரமலையுமாணிக்கமலையுங்கோன்று, மெய்யாகவவற்றினது பெ ருமையெல்லாம் விரித்துரைக்குமவேதந்தானே.

(இ-ள்.) பொய்க்காமல் பெருகிவருகின்ற காவேரிநதி இருகரையிலு ம்சீர்காழி திருவையாறு-திருவிடைமருதூர் வளம்பொருந்திருமடகோண ம-திருவானைக்காவல்-விஷம்பொருந்திய கண்டத்தையுடையமாதுருதே ர்களெழுந்தருளியிருக்கிற திரிசிரபுரம்-இரத்தினகிரி-இவைமுதலானதலங்க ளில்விளங்கிக்கொண்டிருக்கும் அந்தத்திவ்யக்ஷேத்திரங்களுடையபெரு மையெல்லாம்வேதமானதுதானமெய்ம்மையாகவிரித்துச் சொல்லும்-எ-று

பருவரையார்ப்பரிக்கும்வகை நதிக்கரையின்மதுரையறு பத்து நாலு திருவிளையாட்டிறைவனிடற்றியதலமாம்தன்பெருமை செப்பலா மோ, கருவிளையாட்டகற்றுமிராமேசுரந்தென் கடற்கரையிற்காணுமங் கே, செருவிளையாட்டிராகவனுமிராவணனைக்கொலைத்தபழிதீர்த்திட் டாரே.

(இ-ள்.) பெரியசங்குகள் முழங்குகின்ற வைகையாற்றின் கரையில் சோமசுந்தரக்கடவுள் அறுபத்துநாலு திருவிளையாடல் செய்தருளியம துரையென்று ஒருதலமுண்டு அந்தத்தலத்தின்பெருமையாவராலும்சொ ல்லப்படாது தென்சமுத்திரக் கரையில் ஜனனதுக்கத்தைப்போக்குகின் ற இராமேச்சுரமென்று ஒருதலமுண்டு யுத்தத்தைவிளையாட்டாகச்செய் கிற இராமபிரானு இராவணனைக்கொன்றதனால்வந்ததோஷத்தை அந்த த்தலத்தில் சிவனைப் பூசித்துத்தீர்த்துக் கொண்டார்-எ-று. ௰௯

அத்தகையாந்தலங்கடமிற் பிறக்கவுடலிறக்க விழியமையக்காண ச், சுத்தவெளிதனிலாடுஞ் சுடரொளிக்குமனங்களிப்ப தூய்நீராட்டவி த்தமதையெடுத்துரைத்துச் சிவாலயமும்விரிபொழிலு மிகவுண்டாக்க, வுத்தமமாகியபரமகதியுளதென்றுரைகமுனியுரைப்பதானான்.

(இ-ள்.) அப்படிப்பட்டதன்மையையுடை தலங்களிலேயாவராகி லும்பிறந்தாலும் இறந்தாலும் போய்த்தரிசித்தாலும் பரிசுத்தமாகியசுதா காசத்தில் நிருத்தஞ்செய்யும் சுத்தப்பிரகாசமே சொரூபமாகியபரம சி வனுக்குத்திருவுள்ளங்களிக்கும்படி தூய்மையாகியநீரினால் அபிஷேகஞ் செய்தாலும் திரவியங்களைச்செலவுசெய்து சிவாலயங்கட்டுவித்தாலும் விரிந்தபூஞ்சோலை மிகவைத்தாலும் உத்தமமான பரகதியுண்டாமென் று நந்திதேவர் அருளிச்செய்யக்கேட்டு மார்க்கண்டேயர் சொல்லத்தொ டங்கினார்-எ-று. ௨௰

இந்திராகதிகோறுந் தலந்தோறுமிப்படியே யியற்றவென்றுன்மு ன்னியசீராமருக்குஞ் சித்தருக்குமுனிவருக்கு முடிவுறுது, மின்னிதரு

அங்கமெல்லாமயிர்பொடிப்ப நயனங்கள்விழி யிரண்டுமருவிபாய,
செங்கையிணைமலர்குவியமொழிதழறநெஞ்சமேபோதுதெளிவில்லாமற், க
ங்கையணிசடையானே யருணகிரிப்பெருமானே கனற்கண்ணனே, கங்
களையாளுடையானே யெனத்துதித்து விழித்தம்பினிசையபதாலுன்.

(இ-ள்) தேகமெல்லாமயிர்க்கூச்செறியக் கம்பிதங்கொண்டு இரண் டுகண்களிலும்நின்று அருவிபோல் ஆனந்த பாஷ்பம்வர மலர்போன்ற இரண்டுகைகளும் ஒன்றாய்க்குவிய வார்த்தைதடுமாற அனேகநாழிகை ஞாபகமில்லாமல் கங்கையைத்தரித்திருக்கின்ற சடையையுடையவரோ அ ருணகிரியில் எழுந்தருளியவரோ அக்கினிக் கண்களையுடையவரோ எங்க ளையாட்கொண்டவரோ என்றுஸ்தோத்திரஞ்செய்து விழித்துக்கொண்டு அவனியிற்புகழ்சொல்லத்தொடங்கினார் நந்திதேவர்-எ-று உச

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்

சத்தியந்தாமொழிவன் முத்திதருமோராது கணக்குரிய நாமமிகவுண்
டத்தனையுநான்மொழிய வெத்தனைவலோனதிலொரற்பவளவேபுகலுவே
ன், சித்திபுதவுங்கௌரி தேசநகரென்றுபெயர் தென்னருணையெனுமெபெ
யாசிர, வைத்தசிவலோகநக ரென்றுபெயர் நீசேதுர்வாயுநகரொன்று பெய
ரே

(இ-ள்) அப்படி தோத்திரஞ்செய்த பின்பு நந்திதேவர் சொல்வார்கே ளும்மார்க்கண்டேயரே சத்தியமாகச்சொல்லுகிறேன் மோக்ஷத்தைக்கொ டுக்கிறதாமென்றுமெண்ணத்தகாததற்குரியநாமங்களோ அநேகம அத்தனைபெ யரையுஞ்சொல்லுதற்கு நானெவ்வளவுசத்தியுடையவன், ஆனாலும் அவைகளில் சிலநாமமாத்திரஞ்சொல்லுகின்றேன், சித்திகளைக்கொடுக்கி றகௌரிநகரமென்றும், தேசுநகரமென்றும், அழகியஅருணாசலமென்று ம, சிறப்புப்பொருந்திய சிவலோக நகரமென்றும, நாகரீகமிகுந்த வாயு நகரமென்றும், நூல்களில்சொல்லப்பட்ட திருநாமங்களையுடையது எ-று

சத்தபுரியேமுதலெடுத்ததலம்யாவுமொரு தட்டுமொருதட்டதனி
லே, யத்தலமுமிட்டெதிர் நிறுக்கவகைகட்கதிக மானதொளிர்நகநகரம்
முத்திநகரொன்றுபெயர் ஞானநகரொன்றுபெயர் மூந்தியதமேச்சுரமெனு
ம், சுத்தநகரொன்றுபெயர் தெனகயிலையென்றுபெயர் சோணகிரியெனு
பெயரே,

(இ-ள்) பின்னும்நந்திதேவர்சொல்வார் சத்தபுரிகளென்கிற அயோ த்திமதுரை-மாயாபுரி-காசி காஞ்சிபுரி அவந்தி-துவாரகை முதலாகிய எ ல்லாத்தலங்களையும் ஓர்தட்டிலும் அந்தஅருணாசலத்தை ஓர்தட்டிலும வைத்துநிறுக்க அந்தத்தலங்களுக்கெல்லாம் அதிகமானத்தையுடையதா யிருந்து பிரகாசிக்கின்ற அந்தத்தலத்துக்குமுத்திநகரமென்றும்ஞான ந

கரமென்றும், முதன்மையாகிய தலேச்சுரமென்றும், சுத்தநகரமென்று ம, தக்ஷணகைலாசமென்றும், சோணகிரியென்றும் பெயராம்-எ-று.

வாதமித்தகாலவழ லூழியலையேழுபுபல்வாதைபுரியாதநகரஞ், சித முதலானபிணி தீமையிடையூறுபசி சேரவரிதானநகரம், மாதவர்கண் மாதவர்கா பூசைபுரிமாநகரமாதவர்கணு மமலராம், போதிலுறைவேதி யர்தொண் ணூறுபெயரோடுறுவர் பூசைபுரிவேதநகரம்

(இ-ள்.) இறுதிக்காலத்திலுண்டாகிய பிரசண்டவாயுவினாலும் ஊழித்தீயாகிய வடவாமுகாக்கினியினாலும்-பொங்கிவரும் - சமுத்திரபிரளயத்தினாலும்-யுகமுடிவில் பொழிகின்ற ஏழுமேகங்களினாலுட-யாதொரு வேதனையும் அடையாதத்லம், சயித்தியமுதலான பிணிகள்தீமையாகிய இடையூறுகள் பசிநோய்கள்சேராததலம், மகத்தாகியதவசிகள்அனேகம்விஷ்ணுக்கள் பூசைசெய்ததலம, அப்படிப்பட்ட விஷ்ணுக்களுடைய நாபிகளாகியதாமரைமலர்களில் உண்டாகித் தொண்ணூற்றறுபிர்மாக்கள்பூசித்ததெய்வீகம்பொருந்தியதலம்அருணாசலமென்னும் தலமாம் எ-று ௨௭

ஒன்றுளதுபூமிதனி லின்றுபுதிதன்றுலகு மும்பருமுயர்ந்தவெளியு, மென்றுளதந்நாளுளது வேதமுடிமீதினி லிருப்பதக லாமலதிலோர், குன்றுதலிலாதவொரு வெற்புளதுபுண்டரிக கோளகையுமூடுருவியே,வி னறுளதுதென்றிசையி லொணுழியாதுநெடு நீருலவுவாழ்வுபெறவே.

(இ-ள்) இப்படிப்பட்டதன்மையுடைய தலமொன்றுண்டு அந்தத்தலம இன்றைக்குப்புதிதாகவந்ததல்ல, இந்தப்பூவுலகமும மேலுலகமும ஆகாயவெளியும் என்றைக்குஉண்டாயினதோ அந்தநாளிலேதானே உண்டாயிருக்கின்றது நீங்காமல்வேதத்தின்முடிவிலுள்ளது, அந்தத்தலத்தில்கெடுதலில்லாத ஒருமலையுண்டு அதுதென்திக்கில் என்றுமநிலைபெற்றுப் புரமாண்டகோளகையை யூடுருவிநிற்கின்றது நெடியகடல்சூழ்ந்த பூமியிலுள்ளவர்களவாழும்படிக்கு-எ-று. ௨௮

கலிவிருத்தம்.

ஆரிடமிராக்கதசுரந்தேவதந்
தாருடைமானிடஞ் சம்புவென்றுநாம் ·
பேரிடுமிலிங்கமே பிறக்குமெங்கணு
மேருடைப்பருப்பத மிலிங்கமாவது·

(இ-ள்.) ஆரிஷமென்றும்,ராக்ஷசமென்றும்-ஆசுரமென்றும்தைவதமென்றும், மாலையைத்தரிக்கின்ற மானிடமென்றும், நாமங்கள்பெற்றலிங்கங்கள் எந்தத்தலங்களிலும் பிரகாசிக்கும் இந்தத்தலத்திலோ வென்றால்மலையேலிங்கமாயிருக்கின்றது ரிஷிகளாலேபூசைசெய்யப்பட்டதுஆரிஷலிங்கம், ராக்ஷசர்களாலேராக்ஷசலிங்கம், தேவர்களாலேதைவதலிங்கம, மானிடராலே மானிடலிங்கம-எ-று· ௨௯

செங்கனன்முதல்யுகந் திரேதைமாமணி
பொங்கியதுபாரம் பொலிந்தபொன்னிறந்
தங்கியகலியுகந் தன்னிலேசிலை
யங்காமதன்பெய ரணைப்பூதரம்.

இ-ள், முதல்யுகமாகியகிரேதாயுகத்தில்சிலைப்பாகிய அக்கினிமலையாகவும், திரேதாயுகத்தில் மாணிக்கமலையாகவும், துவாபரயுகத்தில்மிகுந்த பிரகாசத்தையுடைய பொன்மலையாகவும், கலியுகத்தில் கல்மலையாகவும் திருவுருக்கொள்ளும அந்தமலைக்கு அருணாசலமென்னுந்திருநாமமாம்-எ-று. ௧௰

கருவியாமுகக்கடைச் சொரியுங்காரினு
முருவமேழன்றியொவ் வொன்றுகோடியாய்ப்
பருவமாயிரந் துளி பனையிற்பெய்யினு
மருவியாயடங்குமவ் வசலமீதினில்.

இ-ள், எல்லாச்சீவராசிகளும் கருவறும்படி யுகாந்தகாலத்தில்பொழிகின்றமேகங்கள்ஏழென்கிற எண்ணிக்கையில்லாமல்ஒவ்வொன்றுகோடியாகி ஆயிரமவருஷம ஒவ்வொருதுளிபனைமரம்போலப்பருமனுகப்பெய்தாலும, அந்தமலையினமேல் சிறியஅருவியாய்ச் சுவறிஅடங்கிப்போமல்லாமல புறத்தில்வரமாட்டாது-எ-று. ௧௧

அரியயனளவிடா தனந்தகாலமாய்த்
திரிதலினதற்கிலை செப்பலாகுமோ
சுரநதி பரவுதிற் சுனையினீருண
விரவிதன்புரவிமே லேறிச்செல்லுமே

இ-ள், விஷ்ணுபன்றியாகியும் பிரமன்அன்னமாகியும் அனேககோடிகாலமாய்த்தேடி அடிமுடிகாணமல் வருந்துவார்களானால் அந்த அருணாசலத்துக்கு ஒனறைச்சமானமாகச் சொல்லக்கூடுமோ, அதுவல்லாமல ஆகாசகங்கைதன்னிலுமுகந்தமென்று துதிசெய்கின்ற அந்தமலையிலிருக்கின்ற சுனையிலேநீருண்ணங் சூரியன்தேறிர் கட்டியகுதிரைகள்ஏறிநடக்கும் எ-று ௧௨

வெண்மைசேர்புயலத னடியின்மேவுக
லெண்மகிழ்கயிலையீ திருப்பதொக்குமா
றன்மைசேர்கார்த்திகை விளக்கையேற்றுதல்
கன்மகணமகுடமா மணியிற்றோன்றுமே,

இ-ள், வெள்ளைநிறமாகிய மேகங்கள் அந்தமலையடிவாரத்திலசேர்ந்தால் யாவராலும எண்ணப்பட்ட கைலாயகிரிமேல் அந்தமலையிருக்கின்றதுபோலாம குளிர்ச்சிபொருந்தியகார்த்திகைமாசத்தில்கார்த்திகைதீபம் அந்தமலைமேலேற்றினால்பூமிதேவியினுடையகிரீடத்தில் இரத்தினம்போலாமென்று. ௧௩

றுஞ்சோதிதாடொழுதும்பணிவிடைசெய்துங் களக்கிலாமுத்திபெற்றி ருந்தார்.

(இ-ள்) முன்சொல்லப்பட்ட இவர்கள் ஆதியாகத்தொடங்கி அன்றுமுதலின்றுவரைக்கும் அனேகம்பேர் அருணாசலத்தைநினைத்தும் ஆசையோடு தோத்திரஞ்செய்தும் கேள்விப்பட்டும் தரிசனஞ்செய்தும் காலாலேபிரதட்சணஞ்செய்தும் அதில்நீதிபொருந்திய வேதமார்க்கத்தை யனுசரித்துக்கொண்டிருந்தும் மகத்துவம்பொருந்திய தீர்த்தங்களிலே முழுகியும் தருமங்களைச்செய்தும் சோதிசொரூபமாகியசிவனைத்தொழுதும் திருப்பணிசெய்தும் கேடில்லாத மோட்சத்தைப் பெற்றிருந்தார்கள்-எ-று.

சஉ

அப்பதிதமிழ்நாட்டுளதிடைபெண்ணை யாறுசெய்யாறுபிங்கலையா ந், செப்பியகமலைநதிசுழுமுனையாஞ்செய்ததொன்றாயிரம்பலமாம், முப்பதுமூன்றுகோடி தேவர்களு முனிவருந்தலஞ்செய்வா ரதற்கோர், ஒப்புவேறிலையிம்பர்நாட்டிடத்து மும்பர்நாட்டிடத்துமென் றுரைத்தார்

(இ-ள்) அவ்வருணாசலத்தலம்தமிழ்நாட்டிலிருக்கிறது அப்பதிக்கு வலப்பக்கத்தில்வருகிற பெண்ணையாறு இடையெனும்நாடியாகும் இடப்பாகத்தில்வருகிறசெய்யாறு பிங்கலையெனும்நாடியாகும் கமலையெனுநதி சுழுமுனையெனும் நாடியாகும், அந்நதிகளில் ஸ்நானஞ்செய்தால் ஒன்றுக்கு ஆயிரம்பங்கு பலன்தரும், முப்பத்துமுக்கோடிதேவர்களும் முனிவர்களும் அத்தலத்தில் தலஞ்செய்வார்கள் அதற்கொப்பு இந்தவுலகத்திலும் மேலுலகத்திலு மில்லையென்றுசொன்னார் நந்திதேவர் எ-று.

சங

அற்றமிலவன்சொலருணையின்சிறப்பாலசைமகிழ்ந்துருகியமுனிவன், மற்றுளதலத்திலதிகமென்றுரைத்தவாய்மையைமனங்கொளாதுரைப்பா ன, சிற்றறிவுடையேனு தலமொன்றுசொற்றெளிந்திலேனெனச்சொன்ன தற்கு, முப்புராமெரித்தானமொழியெனமொழிந்தான் முனிவனும வற்றினைமொழிவான.

(இ-ள்) சிவபத்தியிற் சோர்வில்லாதநந்திதேவராற்சொல்லப்பட்ட அருணாசலத்தின மகாத்மியத்திறலேஇதயமகிழ்ந்துஉருக்கத்தையடைந்தமார்க்கண்டேயர மற்றசிவதலங்களைப் பார்க்கிலும் அருணாசலத்தலம் அதிகமென்றுசொன்னதை மனத்தில் ஒப்புக்கொள்ளாமல்சொல்லுவார் சுவாமீ நானசிறிய அறிவையுடையவனாகலால் நீங்கள்திருவுளம்பற்றியது நன்றாய்த்தோன்றவில்லை என்றுசொல்ல அதுகேட்டு சகலத்தையும் உள்ளத்திற்கொண்டநந்திதேவர் உமக்குண்டான சந்தேகத்தை சொல்லுமென்றுகேட்க மார்க்கண்டேயர்சொல்லுவார்-எ-று.

இல்லையக்காணக் காசியிலிறக்க திருக்குமாரூர்தனிற் பிறக்க, வெல்லையிற்பெருமை யருணையைநினைக்க மெய்தலாமுத்தி யென்று

ம் அதிகமென்றுபிறப்பதற்கு ஆசைப்படுவோர்கள் தெய்வத்தன் மைபொருந்திய அந்தப்பதியில்பிறக்கிறது நூறுயாகஞ்செய்தவர்களு க்கு அல்லாமற் கிடையாது சுவாமியினுடைய கிருபைபெற்றவர்கட்கு கிடைக்கும் அவர்களன்றி மற்றதேவர்கள் முதலான மகத்துவமும் பொருந்திய யாவர்கட்கும் அப்படி பிறக்கிறது கிடைக்கமாட்டாது என்றவாறு. ()

வெற்றிரும்பிடத்தில் செம்பில்வெண்கலத்தில் வெள்ளியில்வெ ள்ளியபொன்னிற், குற்றமொன்றில்லாக் குயிற்றியமணிபோற் குலவி யசிவனிருந்திடுவன், மற்றைபதலத்தி லருணையென்றுரைக்கும் வளம் பதிதனிலெழுந் தருள்வன், பொற்றகட்டிடத்து மணியெனவுரைத்தா க்ன் புனிதனாகியவருணநதி.

இ-ள், சொற்பனிலேபெற்ற இரும்பிலும், செம்பிலும், வெண்கலத் திலும், வெள்ளியிலும், வெள்ளைப்பொன்னிலும், பதிப்பிக்கப்பட்ட யாதொருதோஷமில்லாத மாணிக்கரத்தினம்போல் மற்றத்தலங்களில் எங்கும்நிறைந்த பரமசிவன் எழுந்தருளியிருப்பார், பொன்னாற்செய்த தகட்டில் பதிக்கப்பட்டிருக்கும் அந்த இரத்தினம்போல் அருணா சலமென்றுசொல்லாநின்ற வளம்பொருந்திய தலத்தில் எழுந்தருளி யிருப்பாரென்று பரிசுத்தமாகிய நந்திதேவர் திருவுளம்பற்றினார், ஆத லால் எல்லாத்தலத்திற்கும் இத்தலம் அதிகமாம்-எ-று.

கண்ணினால்விளங்குந் திருமுகமுகத்தாற் கரியகண் விளங்குமவ் விரண்டின், பண்ணினாலவிளங்கு முடலெலா மவைபோற் பரமனால் விளங்குமவ்வருணை, யண்ணலுன்விளங்கு மருணைமாநகரா லமல னோடருணை நாநகரா, லெண்ணரியபதிக ளெவைகளும்விளங்கு மெ வற்றினுஞ் சிறந்ததென் றிசைத்தான்.

இ-ள், கேளும் மார்க்கண்டேயரே கண்களிருப்பதால் முகம்பிரகா சிக்கும், முகத்திடத்திலிருப்பதால் அந்தக்கண்கள் விளங்கிக் கொண் டிருக்கும், இந்த விரண்டினுடைய சேர்க்கையாலேதேகமெல் லாம்விளங்கும், இவைபோல் பரமசிவனாலே அருணாசலம் சிறப்படை ந்திருக்கும் அந்த அருணாசலத்தால் சுவாமியும ... விளங்குகிறார், அத்தலத்தினாலும் அதில் எழுந்தருளி ... சுவா மியினாலும் எண்ணிக்கையில்லாத எல்லாஷேத்திரங்களும் ... ய் விளங்கும் ஆனதினாலே எல்லாத்தலங்களிலும் அது சிறந்த ... று திருவாய்மலர்ந்தருளினார்-எ-று.

இதனுள் எல்லாத்தலங்களும் உடலாகவும் அருணாசலத்தலம்முகமாகவும், அதில்சுவாமி கண்ணாகவும் சொல்லப்பட்டது.

வீசலரிலைமெய் குளிர்ந்திடுங்கொடியின் வேருணீர்சொரிந்திடினதுபோற், பூசனையருணை நகரிலே சிறிதும் புரையற நடக்குமேயாகிற, காசியேமுதலெத் தலமெலாம்பூசை கனம்பெற நடந்ததாயிலையே, வீசர்வாழுந்தத் தலமெலாம்பூசை யியற்றிலே னியற்றிடாதிருந்தேன்.

இ-ள், ஒருகொடியினது வேரில் நீர்வார்த்தால் அக்கொடியும் அதிலிருக்கிற மணம்வீசுகின்ற புட்பங்களும் இலைகளும் குளிர்ச்சியையடையும், அதுபோல் அருணாசலத்தளத்தில் சுவாமிக்கு எவ்வளவாகிலும் பூசைமுறதமில்லாமல் நடக்குமானால் காசிமுதலாகிய எல்லாத்தலங்களிலும் மேன்மையாகப் பூசைநடந்ததாகும் அத்திருவண்ணாமலையில் பூசை நடவாவிட்டால் மற்றதலங்களில் நடந்தாலென்ன நடவாவிட்டாலென்ன ஒருபயனுமில்லை-எ-று.

நிலந்தொழுமருணா சலந்தனிலிருந்து நெஞ்சினிலையமாய் பிரிந்தோர், தலந்தனைவிரும்பி நடந்தர்முன்செய் தவங்களு மறங்களுந் தவறுங், குலந்தனிலுதித்தோ ராயினும்புலையர் குணத்தவராயினுங் கொடிய, ருலந்தவருயிரோ டிருக்கினுமதற்கோ ருவமைசொன்னவர் கருமீதொக்கும்.

இ-ள், உலகத்தார் போற்றுகின்ற அருணாசலத்தலத்திலிருந்து இதைவிட உயர்ந்ததலங்கள் இருக்குமென்று மனதில் சந்தேகங்கொண்டுபிரிந்து ஒருக்ஷேத்திரத்தைநாடி நடந்தவர்களுக்கு அவர்கள் அதற்குமுன்செய்யப்பட்ட தவங்களும் தருமங்களும் பிரயோசனப்படமாட்டாது அவர்கள் நல்லகுலத்திற் பிறந்தவர்களானாலும் நீசராவார்கள் நல்லகுணங்களையுடையவர்களானாலும் கொடியகுணத்தராவார்கள் அவர்கள் உயிரோடிருந்தாலும் இறந்தவர்களாவார்கள் அந்த அருணாசலத்துக்கு வேறொருதலங்களை யொப்பாகச்சொன்னாலும் இந்ததோஷங்களெல்லாம் உண்டாகும்-எ-று.

என்றுதானருணைச் சிறப்பெல முனிவர்க் கேதுவோடெடுத்தினிதியம்பிக், கன்றுமான்மழுவுஞ் சுரிகையுந்தரித்த கடவுணன் கிருந்தனனவனைச், சென்றுசென்றிறைஞ்சி நெக்குநெக்குருகிச் சென்னிமேற்செங்கைவேரோட்டி, ஒன்றுமானந்தப் பெருங்கடலிடைப்புக்குணர்ச்சியாய்முனிவனி துரைப்பான்.

இ-ள், இப்படி அருணாசலத்தின்பெருமையை ஏதுவோடு முனிவர்களுக் கினிதாகவெடுத்து அருளிச்செய்து மான்கன்று மழுஉடைவாள் இவைகளைத்தரித்த நந்திதேவர் களிப்புற்றிருந்தார் அந்த நந்திதேவரைப் பலதரம் வந்தனஞ்செய்து நெக்குவிட்டுருகிச் சிரசின்மேல்சிவந்தகைகளை நெடுநேரங்கூப்பி ஒன்றுபட்டவராய் ஆனந்தசமுத்திரத்தில் முழுகித் தன்னைமறந்தவராகிப்பின்பு ஞாபகம்வந்து இதனை சொல்லுவார் மார்க்கண்டேயர்-எ-று.

முதலாவது திருநகரச்சருக்கம்-முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-எக.

---



உ

சிவமயம்.

இரண்டாவது

# திருமலைச்சருக்கம்.

கலித்திலைத்துறை.

எந்தையேயரு ணந்தியேயடியவர்க்கெளியாய்
சிந்தையானது மகிழ்ந்தனனருணையின்சிறப்பா
லந்தமாநக ரிடத்திலே சிவனழல்வடிவாய்
வந்தவாறுட னதுமலையாகியவகையும்.

இ-ள், அருணாசலத்தலத்தின் மகிமையைக்கேட்ட மார்க்கண்டேயர் சொல்லுவார் எம்முடைய ஆண்டவரே அடியேனுக்கு அருள்செய்த நந்திதேவரே, அடியார்க்கு வெளியவரே நீர் அருளிச்செய்த திருவண்ணமலையென்னும் தலத்தின்மகிமையினால் மனங்களிப்படைந்தேன் அப்படிப்பட்ட தலத்தினிடத்திலே பரமசிவன் அக்கினிசொரூபமாய்த் திருவுருக்கொண்டதும் அதன்பின்பு மலையுருவமானதும்-எ-று.

அம்மலைச்சுட ரடிதலைதெரிகிலா தயன்மால்
விம்மலுற்றது மவர்க்கருள் செய்ததும்விளம்பாய்
கைம்மலைக்கட கரியுரி புனைந்திடுங்கையிலை
செம்மலைத்தொழுஞ் செல்வனே யெனவவன்செப்பும்.

இ-ள், அந்த அக்கினிமலையின் அடியும் முடியும் அறியக்கூடாமல் பிரமனும், விஷ்ணுவும் வருத்தப்பட்டதும் பின்பு சுவாமி அவர்களுக்கு அனுக்கிரகஞ்செய்ததும் திருவுளம்பற்றவேண்டும் கையுள்ளமலையை ஒத்ததாய் மதத்தையுடைய யானையின்தோலைத் தரித்தருளிய கைலாசவாசராகிய பரமசிவனை வணங்கும்படியான செல்வத்தையுடையவரே யென்றுசொல்ல அதற்கு நந்திதேவர் சொல்லத்தொடங்கினர்-எ-று.

பஞ்சபாதக மொருவனப் பதியிலேபண்ண
நெஞ்சினுநினைத் திடுகினு நினைத்ததேபரமாய்த்
தஞ்சமாகிய முத்தியா மெனமறைசாற்று
மஞ்சொலாலது மொழிந்தபேர்க் கென்னபேறரிதே.

இ-ள், ஒருவன் அந்த அருணாசலத்தலத்திலே பஞ்சபாதகங்களைச் செய்யவேண்டுமென்று நினைத்தாலும் அப்படி நினைத்ததே மேற்பட்ட புண்ணியமாகி. அதனால் பற்றுக்கோடாகிய முத்தியுண்டாமென்று வேதங்கள் முறையிடும் அன்மையுண்டாக்கும் நல்லசொற்களினாலே தோத்திரஞ் செய்பவர்களுக்கு என்னபேறு கிடைக்கமாட்டாது என்றவாறு. ௬

ஆகையாலுமக் கன்றியேயெமக்குமுண் டதிகஞ்
சோகமோகங்கள் தவிர்ப்பவனொருபரஞ் சுடராய்
மாகமூடு வளர்ந்ததுமாலயற் காகப்
போகலிங்கமொன் றானதுமொருவகை புகல்வேன்.

இ-ள், ஆனபடியினாலே மாக்கண்டேயரே இந்தமான்மியத்தைக் கேட்கின்ற உமக்கேயல்லாமல் எனக்கும் அதிகபலனுண்டாம் துக்கத்தையும் மோகத்தையும் நீக்கிவிடுகிற சிவபெருமான் ஒப்பற்ற பெரிய சோதிவடிவமாயப் பிரமவிஷ்ணுகளுக்காக ஆகாயம் அளாவிவளர்ந்ததும் யாவருக்கும்போகத்தைக்கொடுக்கின்ற இலிங்கமென்று சொல்லும்படி திருவுருக்கொண்டதும் எனக்குத்தெரிந்தமட்டும் கொஞ்சம் சொல்லுகிறேன் எ-று. ௭

ஒடுங்குநாளினி லயனரியுருத்திரன் மகேச
னொடுஞ்சதாசிவன் விந்துநாதஞ்சத்தி நெறியே
யடங்கிடும்பர சிவத்தினிற்பரசிவ மனைத்தும
கடந்ததத்துவ முடிவிலே நின்றது கருதி.

இ-ள், சர்வசங்காரகாலத்தில் முறைப்படி சகலவுயிர்களும் பிரமனிடத்தில் ஒடுங்கி பிரமன் விஷ்ணுவினிடத்தி லொடுங்குவார் விஷ்ணு உருத்திரனிடத்தி லொடுங்குவார் உருத்திரன மகேசுரனிடத்தி லொடுங்குவார் மகேசுரன் சதாசிவனிடத்தி லொடுங்குவார் சதாசிவம் விந்துவினிடத்திலொடுங்குவார் விந்து நாதத்திலிடத்தி லொடுங்கும் நாதம் சத்தியினிடத்திலொடுங்கும் சத்தி பரமசிவத்தி லொடுங்கும் அங்கப்பரமசிவம் திருவுளங்கொண்டு எல்லாங்கடந்த தத்துவமுடிவிலேநின்றது-எ-று. ௮

பரமசிவத்தினில் வருபராசத்தியாங் குடிலை
விரிவிடும்பர தத்துவமடைவிலே விரிந்த
மருவுமைமலரு மொடுங்கிமுறையிலே வந்தா
னரிமகன்படைத் திடவதுநினைந்தன னகத்தில்.

இ-ள், அப்படியெல்லாம் ஒடுங்கினகாலத்தில் தனியாய்நின்ற பரமசிவம் உலகமுண்டாக்கவேண்டுமென்று திருவுளங்கொண்ட அளவில் அந்தசிவனிடத்திற் றோன்றியபராசத்தியினிடத்தில் குடிலை என்னும் சத்தி தோன்றியது அதில் பெருமையமைந்த மற்றதத்துவங்கள் முறையேயுண்டாயின பஞ்சகிருத்தியங்களினாலும் பிரமன் விஷ்ணு உருத்திரன் மகேசுரன் சதாசிவன்முன்னே ஒடுங்கியமுறையே உண்டானார்கள் விஷ்ணுவினுடைய புத்திரனாகியபிரமன் உலகத்தைசிருட்டிபபதற்கு மனதில் எண்ணினார்-எ-று. ௬

மரீசியங்கிரன் புலத்தியன்புலகனென் மறையோர்
கிருதுவத்திரி சனபதியெழுவருங் கிளைத்தா
ரரியதக்கனும் வலப்பதம்பெருவிர லுதித்தான்
பிருகுமார்பினு மறத்திவறமுகத்தினும் பிறந்தார்.

இ-ள், அப்படிபிரமன் நினைத்தவுடனே மரீசி, ஆங்கிரசர், புலத்தியர் புலகர், கிருது, அத்திரி, சனபதி, எனப்படும் ஏழுரிஷிகளும் பிறந்தார்கள், தக்கன் வலதுகால்பெருவிரலில் பிறந்தான், பிருகு மார்பிடத்திற் பிறந்தான், தருமதேவதை முகத்திற்பிறந்தது-எ-று. ௭

உன்னுமைந்தரின் மரீசிபாற்காசிப னுதித்தான்
பன்னுதக்கனு மைம்பதுபெண்களைப் பயந்தா
னன்னகாசிப திவர்பதின்மூவரை யணைந்தான்
முன்னளாகிய வதிதிபாலிமையவர் முளைத்தார்.

இ-ள், பிரமனிடத்திற்பிறந்த பிள்ளைகளாகிய எழுவரில் மரீசிரிஷியினிடத்தில் காசிபரிஷிபிறந்தார், தக்கனென்பவன் ஐம்பது பெண்களைப்பெற்றான், அந்த ஐம்பதுபெண்களில் பதின்மூன்றுபெண்களைக்காசிபர்விவாகஞ்செய்தார், மூத்தவளாகிய அதிதிவயிற்றில் முப்பத்துமுக்கோடி தேவர்களும் பிறந்தார்கள்-எ-று. ௮

இருமைசேர்த்திதி யிரணியவிரணியாக் கர்களைத்
தெரியவீன்றனள் சிறப்புறுந்திதியெனு மிளையாள்
தருணமைந்தரி லிரணியன் பிரகலாதனனோ
டருமைமைந்தர்களைவரைப்பயந்தன னவருள்.

இ-ள். அதன்பின்பு அதிதிக்கு இளையவளாகிய சிறப்புள்ள திதியென்பவள் இரணியன் இரணியாட்சனென்னும் இரண்டுபேரையும் பிரசித்தமாகப்பெற்றாள் இந்தஇருவரில் இரணியன் பிரகலாதனன்முதல் ஐந்துபிள்ளைகளைப்பெற்றான்-எ-று. ௯

பிறகலாதனன் றவத்தினால்மூவரைப் பெற்றா
னருளுமைந்தரில் விரோசனன்மாவலி யளித்தான்
பரவுமாவலி வாணனென்றொருவனைப் பயந்தா
னரனருச்சனை புரிந்தவனபலொருழ விருகதான்.

இ-ள், அப்பிரகலாதனன் தவத்தினால்மூன்றுபிள்ளைகளைப் பெற்றான் அந்தமூவரில் விரோசனனென்பவன் மாவலி என்பவனைப் பெற்றான் மாவலிவாணாசுரனைப்பெற்றான் அவ்வாணாசுரன் பரமசிவனைப்பூசித்துப் பிரமன்தொழும்படியான வாழ்வுபெறறிருந்தான்-எ-று. ய

தனுவளித்தவன் சம்பரன்முதலினோர் பதின்ம
ரனையதானவர் பெற்றனன் சிங்கிகையணங்கு
பனிபிராகுவே முதலொருநால்வரைப் பயந்தாள்
பினையாளாங்கொரு மூன்றுபேரசுரரைப் பெற்றாள்.

இ-ள், பலைகளினுடைய சிறகையறிவதற்குத் தேவேந்திரனுக்குக்கன் முதுகெலும்பைக்கொடுத்துத் தேகத்தைவிட்டவராகிய ததீசிரிஷி என்பவர் சம்பரன்முதலாகிய பத்து அசுரர்களைப்பெற்றார் அப்பத்துபேரில் சிங்கிகைஎனபவள் இராகுமுதல் நான்குபிள்ளைகளைப்பெற்றாள் அவளுக்கிளையவள் மூன்றுபேரசுரரைப்பெற்றாள்-எ-று. யக

காலகேயர்களறுவரைப்பயந்தனள் காலை
சாலநீள்சிறைக் கருடனுமருணனுந் தவிர
நாலுபாலரைப் புதல்வராவினதையுந பயந்தாள்
ஆலநேர்விழிக் கத்துருபணியெலா மளித்தாள்.

இ-ள், காலைஎன்பவள் காலகேயர்கள் ஆறுபேரையும் பெற்றாள்மிகவும் நீண்டிருக்கிற சிறகினையுடையகருடன் அருணனோடேகூடநான்குபிள்ளைகளை விநதைஎன்பவள்பெற்றாள் விடத்தையொத்தகண்களையுடைய கத்துருஎன்பவள் பாம்புகளைப்பெற்றாள்-எ-று. யஉ

அரிட்டையென்பவ ளிடத்திலேயம்பையே முதலாய்த்
திரட்டிமங்கையர் பிறந்தன ரிலங்கிளை முனிவ
னருட்டவத்திலெண் ணிரட்டிகந்தருவரை யளித்தா
ளுருட்டுவாளவிழிக் கபிலைபாற் பதின்மர்வந் துதித்தார்.

இ-ள், அரிட்டைஎன்பவளிடத்தில் அரம்பைஊர்வசிமுதலான பெண்கள்பிறந்தார்கள் இலங்கிளை எனபவள் முனியினுடைய கிருபையினாலே பதினாறுவகையாகிய கந்தருவர்களைப்பெற்றாள் வாள்போன்ற கண்களையுடைய கபிலையினிடத்தில் பத்துபிள்ளைகள் பிறந்தார்கள். ( )

அங்கிராசனன் பதிகள்காந்தருவரை யளித்தார்
தவகுமகதிரி கதிர்மதிபுலத்தியன் றனையர்
பொங்கிராக்கதர் வானரர்கின்னரர் புகல
னகருணைந்தர்கிம் புருடர்பின்விலங்கையு மளித்தான்.

இ-ள், அங்கிரர் சனபதிஎன்கின்ற இருவரும் காந்தருவரைப்பெற்றார்கள் அத்திரி என்பவர் சூரியசந்திரிருவரையும் பெற்றார் புலத்தியர் இராட்சதர் வானரர் கின்னரர் இவர்களைப்பெற்றார் புலகரிஷியென்பவர் கிம்புருடரையும் மிருகங்களையும்பெற்றார்-எ-று. யச

தருணவராகியவசுக்களைச்சனபதிதந்தான்
பிருவென்பவன்கலியுடன்சவுனனைப்பெற்று
னிருவரோடுசெந்திருவையும்பிறகுபெற்றெடுத்தான்
பருவமைந்தரிற்கலியுமோவெள்ளியைப்பயந்தான்.

(இ-ள்) சனபதியென்பவர்-மின்னும்பொருந்திய அஷ்டவசுக்களைபெற்றார், பிருகுஎன்பவர் கலியெனபவனையும்சவுனகனையும்பெற்றார் இவ்விருவரை பெற்றதுமல்லாமல்பின்பு இலக்குமியையும்பெற்றார், அப்பருவமபொருந்தியபிள்ளைகளில்கலியெனபவர் சுக்கிரனைபெற்றார்-எ-று

பரியதாணதன் றேவிமூக்கிரண்டினும்பரிதி
யுரியவாண்பரி யாகியிந்திரியத்தையூற்ற
வரிசைபற்றிய மருத்துவருரிளிவருமவந்தார்
விரி*சராசரம் பிறந்தனபலவிதமாய்.

(இ-ள்) சூரியன்தன்மனைவியைச்சேருகிறதற்குஎத்தனப்பட்டபோது, அவள்தற்குப்பொருந்தாமல்பெண்குதிரையாயோடினள் சூரியன்ஆண்குதிரையாய்த்தொடர்ந்து அவள்திரும்பிப்பார்த்தாள் அப்போதுசூரியனானதுபெண்சாதியினிரண்டுமூக்கிலும் இந்திரியத்தைஊற்றவரிசையாகியஅசுவினிதேவர்களிருவர்பிறந்தார்கள் அதன்பின்பு விரிந்தசரமும்அசரமும்அனேகவிதமாயுண்டாயின-எ-று. (௰௩)

கலிவிருத்தம்

கண்டுலகெலாநமதாக்கமேகளென்றே
புண்டரீகவேதியன் மகத்தரிபுரத்தில்
தண்டியெதிர்கொண்டுபகை தங்கவிசைவண்டார்
வண்டுளபமாயவனை வைதுரைவழங்கும்

(இ-ள்) இப்படிச்சகலமும்உண்டாகிய பிரமதேவன் இந்தஉலகமெல்லாம் நம்முடையசிருஷ்டியினாலல்லவோ உண்டாயினவென்றகங்காரங்கொண்டு அதனாலவைகுந்தத்தில் வலிய்ப்போயெதிர்த்துப்பகைகொள்ளும்படி சங்கீதம்பாடுகின்ற வண்டுகள்சூழ்ந்த துளபமாலையைத்தரித்தவிஷ்ணுவைபார்த்து அவமதித்துச்சிலவார்த்தைகளை சொல்லத்தொடங்கினார்.

ஏழுலகமேழுபில மேழுபுயலோரே
ழாழியுதலேழுகிரி யாமவகையியற்றி
வாழுமுயிர்யாவையும் வகுத்திடமனத்தார்
பாழிகொண்மரீசிமுதன் மைந்தர்கள்படைத்தேன்.

---

* சரம் நடையுள்ளனவும், அசரம்-நடையில்லனவும்.

(இ-ள்.) விஷ்ணுவே பதினான்குலோகங்களையும், கறுத்தமேகங்களையும், சத்தசமுத்திரங்களையும், முதன்மையாகியசத்மையாகியசத்தகுலபருவதங்களையும், உண்டாகும்படி மனத்தினாற்படைத்து, இப்பொழுதுவாழுகின்றஎல்லாஉயிர்களையும் உண்டாக்கவல்லமையுடையமைந்தமரீசிமுதல்ரிஷிகளைப்பெற்றேன் எ-று. (௰௮)

மைந்தராதுமைந்தர்கள் குருக்களுடன்வானோர்
சந்திரன்முதற்பெரிய தானவர்களானோர்
கந்தருவர்கிம்புருடர் சித்தர்கணநாத
ரிந்திரன்முதற்றிசைக ளெட்டிலுமிருப்போர்.

(இ-ள்.) விஷ்ணுவேஎன்னுடையபிள்ளைகளாகியபிள்ளைகள் குருவாகிய பிரகஸ்பதியுடனே எல்லாத் தேவர் களும சந்திரர் சூரியர்களும அசுரர்களும்கந்தருவர் கிம்புருடர்சித்தர் கணநாதர்களும் தேவேந்திரன் முதலாகியதிக்குப்பாலகர் எட்டுபேருமாயிருக்கிறார்கள் இவர்களெல்லாம என்னாலல்லவோ உண்டானார்களென்றுபின்னுஞ்சொல்வார்பிரமதேவர்-எ-று. (௰௯)

எந்துதலிலாவிறைவ னென்பதனையென்பேர்
கஞ்சனெனுமைந்தனை மறந்திடுகரதா
லஞ்சமில்படைப்பொழியிலெப்படியளிப்பாய்
செஞ்சுவரிலாதெழுதுசித்திரமுமுண்டோ

(இ-ள்.) குறைவில்லாதசகலத்துக்குநானேகர்த்தாவென்பதையும் எனபிள்ளைதானே பிரமனென்பதையும்மறந்துவிடு, நான்கையினாலேஉலகத்தைப்படைக்காவிட்டால்நீஎப்படிகாப்பாற்றுவாய்சுவரில்லாமல் வெறுமெசித்திரமுண்டோவென்றுபின்னுஞ்சொல்லுவார்பிரமதேவர் எ-று

அளித்திடுகளிப்பினை யகத்தினில்விடாயேல்
வெளிப்படவொருத்தனையளித்திடவிதிப்பேன்
குளிர்ச்சியகடற்கிடைகுதித்திடதனுள்ளே
யொளித்திடுகரத்திரனுனைச்சுருவுமுன்னே.

(இ-ள்.) விஷ்ணுவேசகலத்தையும் இரட்சிக்கின்றோமென்கிறமதத்தைவிட்டுவிடு நீவிடாமற்போனால் உன் உத்தியோகத்தைநீக்கி மற்றொருவனையுண்டாக்கி இரட்சிக்குந்தொழிலுக்குநியமித்துப்போடுவேன நாம்புத்திரபௌத்திரர்களாகிய தேவர்கூட்டங்கள்வந்து உன்னைக்கொல்லும்படிவளைத்துக் கொள்ளுவதற்கு முன்னேதிருப்பாற்கடலுக்குள்ளேகுதித்தொளித்துப்போவென்று சொன்னார்பிரமதேவர்-எ-று. (௨௧)

விந்தகமுனிப்பிருகு விட்டமுனிவாமே
பரதுருவெடுத்தனை [illegible]

வந்தனேயுடகற்களு மழைத்தபடியாலென்
கைத்தலமுமிப்படி கறுத்தபடிபாராய்

(இ ள்.) ஞானசொரூபியாகிய பிருகுரிஷியிட்ட சாபத்தினலே பத்தாகாம்பூமியிலேபிறந்தாய் நீ அதைபகுத்தறியவில்லையோஎல்லாம்படைத்து எனகைகள்காப்பேறி எப்படி கறுத்துப்போச்சுதுபாரென்றுபின்னுஞ்சொல்லுவார்-எ-று. (உஉ)

உந்திமலரோனென விகழ்ச்சியுரையாதே
முந்தவொருதூணிடை முளைத்தனேயுனக்குத்
தந்தையெனவோவது தாயதெனவேசொல்
செந்தழல்பிறந்துகழை தீப்பதறியாயோ

(இ ள்.) விஷ்ணுவே நம்முடையநாபிக்கமலத்திலேதான் வளர்ந்தானென்று நிந்தனேசொல்லாதேமுன்னாலேநீஒருதூணினிடத்திலே பிறந்தாயே அந்தத்தூணே உனக்குத்தகப்பனென்றுசொல்லட்டுமா அல்லது தாயென்றுசொல்லட்டுமா அந்தத்தூண்உனக்குத்தந்தையானல் எனக்குநீதந்தையாவாய் செந்நிறம்பொருந்தியநெருப்பு மூங்கிலினிடத்திலே பிறந்துமூங்கிலேத்தானே கொளுத்திப்போடுவதை அறியாயோ அப்படிஉன்னிடத்திலே நான்பிறந்தாலும உன்னே அழித்துப்போடுகிறேனென்றார்பிரமதேவர் எ-று (உ௩)

வேதனிவைசொற்றன கொடும்படைவெதும்பிக்
காதிடைதொளைத்தனல் புகட்டினகடுப்பக்
கோதமொடெழுந்தபுகை கொண்டநகைகொண்டே
மாதவனமதிந்தனன் மறுத்திவையுரைப்பான்.

(இ-ள்.) பிரமன்இப்படிசொன்னவார்த்தைகள் விஷ்ணுவுக்கு இரண்டுகாதிலும் வேலாயுதத்தைப் பழுக்கக்காய்ச்சித்தொளேககவிட்டுஉள்ளேசெலுத்தியநெருப்புப்போல்தகிக்க மிகுந்த கோபங்கொண்டு புகையெழும்படியாக நகைத்துஇவனுக்கு இந்தஅகங்காரம்வந்தது எந்தவிதத்தினலேயென்று ஆலோசித்துச் சிலவார்த்தைகளேச்சொன்னர் விஷ்ணு-எ-று. (உ௪)

வந்தவழிதன்னேயு நினைத்திலைமனத்தென்
னுந்தியுனதன்னேயென வுன்னுதலையில்லாய்
தந்தைசிறுமைந்தர்பிழை தன்னேயுணராரென்
றிந்தவுரைசொல்லினே யிகழ்ந்ததுபொறேனே

(இ ள்) பிரமாவே நீவந்தவழியையும் நினைத்தாயில்லை என்னுடையநாபியைத் தாயென்றுஆலோசிக்கவுமில்லை தந்தைகளாயிருக்கிறவர் பிள்ளைகள்செய்த பிழையைஒருகுற்றமாக நினையார்களென்று இந்தவார்த்தைசொல்லினேயோ இனிமேல இப்படிபொறுக்கமாட்டேனென்று பின்னுஞ்சொல்லுவார்-எ-று. (உ௫)

கன்றுமதவுங்கயிட வப்பகடுதானு
வென்றனையராகவுமிகந்துயிர்குடித்தேன்.
மன்றவொருதீமைசெயின்மைந்தனெனவுண்டோ
வன்றியுடனேயையுமறுத்தெறிகிலாரோ

(இ-ள்) கோபத்தையடையாததுவும் யானைபோன்றதைகடவனும் எனக்குப்பிள்ளைகளல்லவாஎன்னையிகழ்ந்துஎதிர்த்தபடியினாலே கொன்றுவிட்டேன். நிலைபெற்ற ஒருதீங்குசெய்தால் மகனென்று பார்க்கக்கூடுமோ அதுவல்லாமல் தேகத்திலே ஒருகட்டிகண்டால் அதையறுத்தெறிந்து சொஸ்தப்படுத்திக்கொள்ளாமலிருக்கின்றார்களோ மனுஷர்கள்-எ-று.

பித்தனுளதோர்தலை பிடுங்கியெறிபோதி
லத்தனைமக்கென வமைக்கவிதியில்லா
எததலைவனென்பதுனை யித்தகைமைகொண்டோ
பைத்தலையராமுடிகொள் பாரிடம்விதித்தாய்

(இ-ள்) பிரமனே பயித்தியக்காரனாகிய சிவன்உன்னுடையதலைகளிலொன்றைப்பிடுங்கி எறிந்தகாலத்தில் அந்தத்தலையை மறுபடி உண்டாக்கிக்கொள்ளவகையில்லைஉன்னைஎப்படித்தலைவனென்று சொல்லுகின்றதுஇந்தத்தலையைகொண்டுதானோ படத்தையுடையஆதிசேடன்முடியிலிருக்கின்ற பூமியைப்படைத்தாயென்றார்விஷ்ணு-எ-று. (உ௭)

மச்சவுருவக்கொடு மறைத்தொகுதிதந்தே
விச்சையுளானவரை வென்றுயிர்குடித்தே
னச்சுரமாமெனினும்மைவைத்தமரமென்றே
யச்சமுறுகின்றனனழிக்கவரிதென்றே

(இ-ள்) பிரமனே சோமுகாசுரன்உன்னிடத்தில் வேதங்களைப்பிடுங்கிக்கொண்டு போனபோது நான் மச்சாவதாரமெடுத்து அவ்வசுரனைக்கொன்று வேதங்களைவாங்கித்தந்தேன் அதுவல்லாமல் சாமார்த்தியமுள்ள அநேகஅசுரர்களைக்கொன்றுதேவர்களோடு உன்னையுங்காப்பாற்றினேன் எட்டிமரமானாலும் தான்வைத்தமரமாகவிருந்தால் வெட்டார்கள் அதைப்போல்பிள்ளையான உன்னைக் கொல்லக்கூடாதென்று பயப்படுகிறேனென்றார்விஷ்ணு எ-று. (உ௮)

என்றொருவருக்கொருவரெத்தனையுரைத்தார்
கன்றினர்புயத்தின்மிசைகைத்தலமடித்தார்
நின்றுலகுதித்தனர்நெருக்கினைநிமிர்ந்தார்
துன்றியகனற்பொறி சுருக்கெழவிழித்தார்

(இ-ள்.) இப்படிஒருவருக்கொருவர்எத்தனைவார்த்தைகளையோசொல்லிக்கொண்டிருந்தார்கள் கோபித்துக்கொண்டு புஜத்தின்மேல்கைகளாலேஅடித்துக்கொண்டார்கள்நின்றுபூலோகத்தில்குதித்தார்கள்நெருங்கி

ஞர்கள், நிமிர்ந்தார்கள், நெருப்புப்பொறிநெருக்கமாய்விழ சுறுக்கெனக் கண்களைவிழித்தார்கள்-எ-று. (௨௯)

பெற்புகள்பொடித்தன வெடித்ததுசடாகம்
பற்பலசுடர்க்கதிர் பனிக்கதிரொளித்த
சர்ப்பமுநெளித்தது கலைச்சுமைபொறுதே
கற்பமுடிவென்றமரா கணகணையிமைத்தார்.

(இ-ள்.) பிரமனும்விஷ்ணுவும் சண்டைசெய்யும்போது மலைகளெல்லாம் பொடியாய்ப்போயின, அண்டகடாகம்படீரென்றுவெடித்தது, பலகிரணங்களுடையசந்திர சூரியர்கள்ஒளித்தார்கள், ஆதிசேஷன் தலைச்சுமைபொறுக்கமாட்டாமல்உடல்நெளித்துக்கொண்டான், கற்பகாலம்வந்து உலகமழியப்போகின்றதென்றுதேவர்கள் கண்களை இமைத்துக்கொண்டார்கள்-எ-று. (௩௰)

உடுக்கணமுகிற்கண முதிர்ந்தவுலகெல்லா
மிடுக்கணில்விழுந்தன வெழுந்தனபராக
மடக்கினபகிரதிமுன் னணங்கியெல்லாந்
திடுக்கொடுமுழங்கின திசைக்கரிகளெட்டும்.

(இ-ள்) நக்ஷத்திரக் கூட்டங்களும்மேகக்கூட்டங்களும் உதிர்ந்தன உலகமெல்லாந் துன்பமாய்அடுக்குச்குலைந்துவிழுந்து தூளெழும்பின, கங்கைமுதலாகிய நதிகளெல்லாந்தண்ணீரில்லாமல்வற்றிப்போயின, அட்டதிக்கிலுமிருக்கிற யானைகள் திடுக்கிட்டுப்பயந்தன-எ-று. (௩௧)

மேலினிலெதிர்த்தெறிவர் வீழ்வர்கடிதோடிக்
கோலியெதிர்குத்துகென நின்றுநிவர்திக்திச்
சாலமதுகொட்டளவிம சாரிகைதிரிந்தார்
மாலையுமிருட்டும்வல மாய்வருதன்மானே.

(இ-ள்.) ஒருவரைமொருவர்மேலேயெறிக்தெறிவார்கள், கீழேவிழுவார்கள், மறுபடியும்எழுந்துவிரைவில்ஓடிவளைந்துஎதிரேநின்றுகுத்தென்றுசொல்வார்கள், அப்படிக்குத்திக்கொண்டு மிகவும்மடியையப்பிடித்துச்சூறைபோலநேகவிசைசுழன்றுதிரிவார்கள், அந்நேரமும்இருளுமவலமிடமாகவருதலை யொத்திருக்கும்படி-எ-று. (௩௨)

ஊருவனநத்துவன செல்வனவின்னோடே
சேருவனநின்றன திரிந்தனதிரட்டார
காருவகையிற்றன தழைத்ததிருவெளங்கு
மேருவரையுக்கதெழு வேலையளறுக.

(இ-ள்) அவ்வேளையில்உலகத்தில் ஊர்ந்துபோகின்றவைகளும், தவழ்கின்றவைகளும், நடக்கின்றவைகளும்,பறக்குஞ்சிவராசிகள்போல்ஆகாசத்திலேபறந்தன, நிலையாகநின்றவிருக்ஷமுமலைகளுந்திரிந்தன, திரளா

உறைந்த ஐந்துவகையாகிய தேவதாருக்கள் பொடிபொடியாய்ப்போயின எவ்விடமும் அந்தகாரமும் நிறைந்தது மகாமேரு அசைந்தது சமுத்திரம் ஒருங்கேசேர்ந்தன-எ-று. (௬௩)

அக்கடுமிடியெல்லைதனி லஞ்சியிமையோர்தா
மிந்திரனையெய்தினர்த மெய்தியதனைக்கு
முந்தியவனும்முதுயர் யாவையுமொழிந்தா
லந்தவரவேதென வருந்துறைசெய்கின்றார்.

(இ-ள்) சங்காரகாலம் வந்ததென்றுசொல்லும்படி இருவருஞ் சண்டை செய்யும் வேளையில் தேவர்களெல்லாம் பயப்பட்டுத் தேவேந்திரனிடத்திற் போய்ச்சேர்ந்து தங்களுடையதுக்கத்தைச்சொல்லுவதற்கு முன்னேதேவேந்திரன் தான்பட்டதுன்பங்களெல்லாஞ்சொல்லிப்பின்பு நீங்கள்வந்தகாரியம் ஏதென்றுகேட்கத்தேவர்கள்சொல்லுவார்கள். ()

ஆரணனுநாரணனு மானவிருவோருந்
தாரணியிலேமிகு சமர்த்தொழில் விளைத்தா
ரோணியவேறுகதி யில்லையெவருக்கும்
காரணனையேதொழுதல் காரியமிதென்றார்.

(இ-ள்.) பிரமவிஷ்ணுக்களாகியஇருவரும்பூமியில்மிகுந்த யுத்தத்தைச்செய்கிறார்களெங்களுக்குப் பிழைக்கத்தக்கதமாக்கம்வேறே யில்லையெல்லாருக்கும் காரணமாயிருக்கிற பரமசிவனைத்தொழுது இந்தச்செய்தியைச்சொல்வதே காரியமென்று சொன்னார்கள்-எ-று. (௬௫)

நாயகனிசைத்துமினர் நாகவுலகத்தோர்
தூயமலர்போலடி துதித்தகிலபாக
மாயமுடன்மாலயன வருகதாதநிராய்
தாயலதுசேமந்தர் துணை தாரணியிலுண்டோ

(இ-ள்.) இப்படிச்சொல்லத்தேவேந்திரனும் சம்மதித்துப்பின்பு அவனோடுதேவர்களெல்லாரும் போய்ச்சிவனுடைய பரிசுத்தமாகிய தாமரைமலர்போன்ற பாதத்தைத்தொழுது மங்கைபாகனேவஞ்சகங்கொண்டு விஷ்ணுவும்பிரமனும் சண்டைசெய்வதால்வருந் துக்கத்தைத்தீர்க்கவேணும் பிள்ளைகளுக்குத்தாயேதுணையல்லாமல் மற்றொருதுணைபூமியிலுண்டோவென்று சொன்னார்கள்தேவர்கள்-எ-று, (௬௬)

உருட்படுசகட்டைநிக ருற்றுங்கிளமீதே
யிருட்படுபிறப்பினை யிறப்பினையுறாதே
பொருட்பெறவுனக்கடிமை புக்களவிலாவுன
னருட்கடலில்குளித்திட வடைக்கலமநாமே

(இ-ள்.) உருண்டுகொண்டு போகின்றவண்டியினுடைய சக்கரம் போல அஞ்ஞானமபொருந்திய பிறப்பையுமிறப்பையும்மாறிமாறியடைந்துவருத்தத்தையடையாமல் மோக்ஷத்தைப்பெற உனக்கடிமையாக அடுத்தது உன்னுடைய அளவில்லாகிருபைக்கடலில்குளிக்கஅடைக்கலமானோமென்றார்களாந்தேவர்கள்-எ-று. (௬எ)

புழுக்கடையுடற்சுமைபொறுக்கமுடியாத
விழுக்குடையவிச்சைகெட விச்சையருள்வோனே
முழுக்கடலிடைத்தினமுழுக்குறினுமாறா
வழுக்குமடியமற்றிட வடைக்கலமதானோம்

(இ-ள்) அநேகம்புழுக்கள் குடைந்துகொண்டிருக்கின்றவுடற்பாரத்தைப்பொறுக்கமுடியாத இழுக்காகிய அஞ்ஞானங் கெடப்பிரியத்தினலேகிருபைசெய்கின்றசுவாமியே பெரியசமுத்திரத்தினிடத்தில்தினம்முழுகினாலும்போகாதழும்மலமாகிய அழுக்கறும்பேர்க அடைக்கலமாயும்மைச்சேர்ந்தோமென்றார்கள் எ-று. (௩௮)

எண்ணமினிவேறிலையெமக்கருள்செயென்றே
கண்ணுறுதலைப்பிணையவர்கள் கற்றுமொழிபோதி
லெண்ணாவுமுணர்ந்தனனினைத்துரியினுள்ளோ
யெண்ணெய்யெனநிற்குமவனீதறிகிலானோ

(இ-ள்) இனிமேல்வேறே ஆலோசனையில்லை எங்களுக்கு கிருபைசெய்யுமென்று சிவனைத்தேவர்கள்புகழ்ந்து தோத்திரஞ்செய்கையில் சுவாமியும் அவர்களுடையமனக்கருத்தைத்தெரிந்தார் எல்லாவுயிர்களிடத்திலும் எள்ளினிடத்து எண்ணெய்ப்போல் நிற்குஞ்சுவாமி இது அறியமாட்டாரோ அறிவார் எ-று. (௩௯)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நடுக்கமுறுமுனிவரொலாமமரரெலாம் பயந்தவிராநாகமீது,படுக்கை
பரிந்திருமாலும் பங்கயத்தி லுறைபவனும்பகைமைதீர, வடுக்கியிடும்புவன
மெலாமடுக்கழியாதிருக்கமனத்தருள்வகாகித்,தடுக்கரியதழலுருவத்தொ
ருவரையாயிருவரையுந் தடுப்பதானான்

(இ-ள்) நடுக்கமடைந்தமுனிவர்கள் தேவர்களெல்லாரும்பயம் நீங்கும்படிசர்ப்பசயனத்தில் நித்திரைசெய்கின்ற விஷ்ணுவும், தாமரைப்புட்பத்தில்வீற்றிருக்கின்றபிரமனும், ஒருவருக்கொருவர்பகையை நீங்கவும், அடுக்கடுக்காயிருக்கும் அண்டங்களெல்லாம் அடுக்குக்குலையாமலிருக்கவும்கிருபைசெய்யவாய்த் தடுத்தற்கரிய அக்கினிசொரூபத்தோடு கூடியமலையாகி இவ்விருவரையுந்தடுக்கும்படி எழுந்தருளினர் பரமசிவன்-எ-று. (௪௰)

பாதலத்திற் பணிகளெல்லாம் விழுதாகவதன் கீழ்ப்பருவேரோடி
ப்பூதலத்திற்கிளைத்திமையோ ருலகெல்லாமலர்ந்துமலர்ப் புண்டரீகன்,
மீதலத்துமுகடுடைத்துக் காடாகவெளிகடந்துபெருவெளிக்குமேலாமா
தலத்துக்கிதுவுமொரு கனன்மேருவடுத்ததெனவளர்ந்தமாதோ

(இ-ள்) பாதாளலோகத்திலிருக்கும்பாம்புகளெல்லாம் அம்மலைக்குச்சல்லிவேராகவும் அதனகீழ்ப்பருத்தவேரோடி பூமியிற்பெரிதாய் கிளைத்

துத்தேவலோகங்களெல்லாங்கண்டிப்பிரமலோகத்துமுகட்டைடயுடைத்துஅண்டகடாகவெளியைக்கடந்து அதற்கப்பாலிருக்கும்பெரியவெளிக்குமேலாயிருக்கிற இடத்துக்கும் அக்கினிசொரூபமாகிய மகாமேருவுமெத்தென்றுசொல்லலாம் என்றது-எ-று. (சக)

மூலைக்குநெடுநெருஞ்சுடரிரவிபுரவியலைவாவல்கமுழுதுமோடிக்
கிளைக்குமணியுளகற்றவேற்றிவைத்தவிளக்கெனவேவிளர்க்கையாலே
யளக்கவொலாமளப்புரியவடவையழல்பரந்தெனவரத்தமானத்
திளைக்குமெழுகிரிகளெல்லாமதுசொரிந்திபொரிபோற்சிவந்தமாதே

(இ-ள்.) உதயமாகிநெடுந்தூரம்கிரணங்களைவீசுகின்றசூரியனுடையபச்சைக்குதிரைகள் சஞ்சரிக்கக்கூடாத உலகமெல்லாமறைநடிக்கிளைக்கப்பட்ட மணிபோலும் கரியஇருளை ஓட்டுவதற்கு ஏற்றிவைத்தவிளக்குப்போல் பிரகாசிப்பதனாலே சமுத்திரமெல்லாம் சொல்லுதற்கரியவடவாமுகாக்கினிபரந்ததும்போலச்சிவப்புநிறம்பொருந்தியசத்தகுலபர்வதங்களெல்லாம் அந்தப்பிரகாசத்தினாலே அந்த அக்கினிமலைசொரிந்த அக்கினிப்பொறிகள்போலச்சிவந்தன எ-று. (சஉ)

கலித்துறை

வானக்கண்ணனுமலாயதுகண்டமலரோனுங்
கானக்கண்ணனு மஞ்சியகன்றார்களைகாணார்
ஞானக்கண்ணினர் காணுமயல்லாவனைவேசூ
மீனக்கண்ணினருக்கெளியானோ வெம்மானே

(இ-ள்) இப்படி ஆகாசபரியந்தம் அக்கினிசொருபத்தைக்கண்ட பிரமனும், வேணுநாதத்தைச்செய்கின்ற கிருஷ்ணனாகியவிஷ்ணுவும்பயப்பட்டொதுங்கினார்கள், ஞானக்கண்களையுடையவர்கள் காணுவதல்லாமல் குற்றம்பொருந்திய ஊனமாகிய முகத்திற் கண்ணுடையவர் காணுகிறதற்குஎளியவரோ நம்முடைய பரமசிவன் எ-று. (சங)

அறுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.

கண்ணிலளவிடவரியசுடரினைக்கண்டிருவருமாய்க் கலையாறு, தெண்ணிலிதனடிமுடியாயறியவரோபெரியவொன்றிசைத்தாரிந்த, மண்ணிலடியறிவனெனப் பணியிடையிற்றாக்கமிக்கோன் வராகமானான், விண்ணின்முடியறிவலெனவெ ங்கினவடிவெடுத்தயனும் விரைந்துபோனான்.

(இ-ள்.) கண்களாலே இவ்வளவு தூரம இந்தமலைபோலிருக்கிறதென்று அறியக்கூடாத பிரகாசமான மலையைப்பார்த்து இரண்டுபேருந்துணபத்தையுடையவராம் இந்தமலையினது அடியையாவது முடியையாவதுஅறிகிறவரோ பெரியவரென்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டார்கள், அப்பொழுது சர்ப்பத்தில் நித்திரை செய்பவராகிய விஷ்ணு, இந்த மலையின் அடியை காணுகிறது வருகிறேனென்று

வராகவடிவானார், இந்தமலையின்சிகரத்தைக்காணுகிறேனென்றுபிரமனு
ம்அன்னபட்சியாகி ஆகாயத்திற் பறந்தார்-எ-று. (சச)

மெத்துமறைக்கணத் தினுக்காயிரங்காதம்பறந்தயனர் விரைந்துபோனார்
துத்தியராலெடுத்தபுவிகணத்தினுக்கா யிரங்காதந்தொளைத்தும் போனா
ரத்தகையோர்செயலுரைக்கிற் கனகமணிநெடும்பூட்டுக்கருகிலோடு
நித்திலப்பொற்குண்டிகையுநீலமணிக்குண்டிகையுமிகர்த்தமாதோ.

(இ-ள்) சொல்லப்பட்டவுரைக்கணத்தில் பிரமன் ஆயிரங்காதவழிபறந்துமேலாகப்போனார் படத்தையுடைய ஆதிசேடன்சுமந்த பூமியை அரைநொடியிலே ஆயிரங்காததூரம் தொளைத்துக்கொண்டு விஷ்ணுகீழாகப்போனார் அதுஎப்படியிருந்ததென்றால் அம்மலைதங்கமயமாகியராட்டணப்பூட்டைப்போலவும அதில்இறைக்கிறதற்குகட்டிவிட்டிருக்கின்ற நீலரத்தினத்தோண்டிபோலவும் முத்துகளிழைத்திருக்கின்ற அழகிய தோண்டிபோலவுமிருந்தது-எ-று. (சரு)

பூவுலகையரியகன்றுகீழுலகின்முறைமுறையேபுகுந்துபோந்து
காவலுறமாவலிதனபோகவதியெனும்புரமுங்கடந்துமேவித்
தேவர்தொழுமபரஞ்சுடர்வாழாடகேசுரநகரத்துஞ்சிரத்தும்போற்றி
மூவுலகைமுதலளந்தோனேழுலகமளந்துமதன்முடிவுகாணான்.

(இ-ள்.) வராகவடிவமெடுத்த விஷ்ணு பூலோகத்தைகடந்து அதின்கீழிருக்கிற ஏழுலகத்தையும் முறையே தொளைத்துக்கடந்துபோய்மாவலிச் சக்கிரவர்த்தி காவலிலேயிருக்கிற போகவதி பட்டணத்தைத்தாண்டி அப்புறம தேவர்கள் வணங்குமபிரமசொரூபம்விளங்குகின்ற ஆடகேசுரத்தைக்கண்டுகைகளினாலும சிரத்தினாலுமவணங்கிமுன்னேமூன்றுலகத்தையுமளந்தவர் இப்போதேழுலகங்களை அளந்தும்அந்தமலையினடியைக் காணமற்போனார் எ-று. (சசா)

வளர்ப்புடையபிறைபோல வளர்மருப்புந்தேய்பிறைபோல்மழுங்கி
ப்போகக்,குளப்படியுமுமதுனியும் பினைத்தேடுமாசையைப்போற்குறை
ந்துபோக, வளப்பரியதுயரின்விழுந்தொருநாலுண் டொருந்தசற்பினரா
னைவாழ்த்தி, யிளைப்பதுவுஞ்சலிப்பதுமற் றெழுதலமுமிடாக்கடலுமே
றினனே.

(இ-ள்.) அப்படிமகாவிஷ்ணு வராகவடிவங்கொண்டு தேடுகிறபோது வளர்பிறைபோல நாளுக்குநாள் வளர்ச்சியுற்றஇரண்டுகொம்புகளும்தேய்பிறைபோல் குறைந்து மழுங்கிப்போகவும்குளம்புகளும்முகத்தினுனியும் தேடுமாசை பின்புஎப்படிகுறைந்துபோயிற்றோ அப்படித்தேய்ந்து குறையஎண்ணக்கூடாத துக்கசமுத்திரத்தில்விழுந்துநாலுவருஷகாலந் தேடியுங்காணமல் பின்புதெளிவுவந்து இதுசிவனுடையசெயலென்றறிந்து அவரைத்தியானஞ்செய்து இளைப்புஞ்சலிப்பும் நீங்கித்தன்னுடைய துக்கசமுத்திரத்தையும பூலோகத்தையும தாண்டிவந்தார்-எ-று. (சஎ)

தம்போரை முதற்றுக்கத் தழற்பிழம் பாயெழுந்தவந் தத்தலத்தைச் சார்ந்தா, னம்போதனிதன் முடியினளவறியானெனமனத்தினையந்தீர்ந்தா, னம்பாருக்கறியானைச்சேயானைத்தனது விழிநயனத்தோடே, பைம்போதைப் புனைவானைப் பலகாலும் பணிந்துருகிப் பரவி னின்றான்.

(இ-ள்.) தனக்கும் பிரமனுக்கும் வந்த கலகத்தை நீக்கும்படி அக்கினி சொரூபமாக எழுந்ததலத்தைச் சேர்ந்து அழகிய தாமரைப்பூவிலிருக்கிற பிரமன் இந்தமலையின் முடியை அறியமாட்டானென்று நிச்சயஞ்செய்துகொண்டு நம்பர்தமனிதர்களுக்கு அரியவனாளப்படிப்பட்டவர்களுக்கும் தூரமாயிருக்கிறவனை தம்முடைய கண்ணாகியபுட்பத்தோடு அழகிய புட்பங்களைத் தரிக்கின்றவரைப் பலதரமும் வந்தனஞ்செய்து உள்ளமுருகிப் பரவினார் விஷ்ணு-எ-று (௪௮)

கலிவிருத்தம்.

இன்னதா மிவன்செய விருக்க விங்கிதன்
இன்னமே யழற்கிரி முடியைத்தேடவே
யன்னமாய்ப்பறந்தவ னரைக்கணத்திலே
மண்ணுறுமோ ராயிரக் காதமவாவினன.

(இ-ள்) இந்தப்பிரகாரம் இந்த விஷ்ணு விருக்க இதற்குமுன்னே அக்கினிமலையின் முடியைத்தேட அன்னப்பட்சியாகிப் பறந்தபிரமன் அரைக்ஷணத்திலே ஆயிரங்காதவழியாகத் தாண்டினார் எ-று. (௪௯)

கீறிய வண்டகோ ளகையுங்கீழுற
வேறி நூறாயிர மாண்டு மேவினா
னாறு நூறாயிரன் காத நோக்கினு
மீறிலா திருந்தவ் வெயிரின் றாணமே.

(இ-ள்.) அண்டங்கோளகையுங் கீழ்படக் கிழித்துப்பறந்து நூறாயிரம் வருடந்தேடினார் அப்படி அநேகநூறாயிரங்காதங்காண்டிப்போய்ப்பார்த்தாலும் முதல் பார்த்தது போலவே யிருந்தது அக்கினித்தூண்-எ-று

சிறையெலா முதிர்ந்தன விசையுந்தீர்ந்தன
நிறைவதா மிநீக்கணு முயிர்ப்புநீண்டன
குறையெலாம் வளர்ந்திடத் தனிமை கூர்தலான்
மறையினா னிலைவயிலை மனத்தி லெண்ணினான்.

(இ-ள்.) அப்படிபிரமன் அன்னமாய்ப்பறந்துபோகும் போதுசிறகெல்லா முதிர்ந்துபோயின விசைவும் அடங்கிற்றுகுறை வில்லாததுக்கமும் பெருமூச்சும் அதிகப்பட்டனமனக்குறைவளர ஒருவருமில்லாமல் தான் ஒருவனானபடியினாலே பிரமன் சிலவற்றையமனத்திலெண்ணினார்-எ-று.

அரியமாலிகனடி யறிந்து மீளுமோ
தெரிவுறா திடையிலே திரும்புமோவென
வுரியதாகிய துயரூச லாடினன்
னெரியுறு மெழுகுபோ லிளகுஞ் சிந்தையான்

(இ-ள்.) அரியவிஷ்ணு இந்த அக்கினி மலையினுடைய அடியை அறிந்து திரும்புவானோ கொஞ்சந்தூரந்தேடி இனிமேல்தேடக்கூடாதென்று திரும்பிவருவானோ என்கிறதுக்கமாகிய ஊசலிலிருந்தாடினார் நெய்யிலேயிட்டமெழுகுபோல் இளகிய மனமுடையவனாகிய பிரமன்-எ-று.

மற்றிது சிவனென மனத்தி லெண்ணிலே
னுற்றரி தன்னையு முறவு கொண்டிலே
னிற்றைநாள் வரைக்குமிவ் விடர்க்குண் மூழ்கினேன்
சிற்றறி வுடைமையோ செய்த தீமையோ

(இ-ள்.) இந்தமலையைச்சிவனென்று அறியாமற்போனேன் பகைத்துக்கொள்ளப்பட்ட விஷ்ணுவையாவது உறவுகொள்ளாமற்போனேன் அன்று முதலின்றுவரையிலும் வெகு காலமாய்த் துக்க சமுத்திரத்தில மூழ்கினேன் என்னுடைய சிறிய புத்தியினாலேயோ பூர்வகாலத்திலேநான் செய்தபாவத்தினாலேயோவென்றுவிசனத்தையடைந்தான்பிரமன் எ-று

எய்த்தினேன் முடியறிந் தேகிலே னெனும்
பொய்களை யுரைக்கினும் பொருந்தவே யுரை
செய்துணை பிறிதிலை யென்று தேம்பினான்
கைதையின் மடல்வரப் பின்பு கண்டனன்.

(இ-ள்.) இவ்வளவுதூரம் தேடிவந்தும் முடியையறியாமற்போனேன் ஆனாலும் இனிமேற்போய்விஷ்ணுவினிடத்திற்பார்த்தேனென்று பொய் சொன்னாலும் ஒத்தாசையாகப் பார்த்தேனென்று பொய்சாட்சிசொல்வதற்கும் ஒருதுணையுமில்லையேயென்று விசனப்பட்டான் அந்தசமயத்தில தாழம்பூமடலொன்றுமேலேயிருந் திறங்கப்பார்த்தான்பிரமன் எ-று

இம்மட லெங்குற்று வருவ தென்னுமுன்
னம்மட லணைந்ததங் கதனை யேற்றனன்
செம்மறன் முடியில்வீழ் கைதைச்செம்மலர்
மெய்ம்மைசே ருயிர்ப்பதாய் விடுமி னென்றதே

(இ-ள்) இந்தத்தாழைமடல் எங்கேயிருந்து வருகிறதென்று ஆலோசிக்குமுன்னே தாழம்பூ பிரமனுக்குச் சமீபத்தில்வர அதைக் கையினாலே பிடித்தான் அது பரமசிவனுடைய சிரத்திலிருந்து தவறிவிழுந்ததாழம்பூ வாகையால் மெய்ம்மையான பெருமூச்சோடு என்னைச்சீக்கிரத்திலே விட்டுவிடுமாயென்று சொல்லிற்று எ-று. (௫௫)

ஏரணி கைதையே யிங்கு நீவருங்
காரண தெனக் கமலன் கூறினன்
ஆரணனாரண னலைவிடாமுத
னாரணிமுடியினுந் தவறி வீழ்ந்தனன்

(இ-ள்.) அந்தத்தாழம்பூ சொல்லியதைக்கேட்டுஅழகானதாழம்பூவே எங்கேயிருந்து இங்குவந்தாயென்று பிரமன் கேட்கப்பிரமனாலும விஷ்ணுவினாலும் அறியக்கூடாத பரமசிவனுடையசிரத்திலேயிருந்து தவறி விழுந்தேனென்று சொல்லிற்று-எ-று. (ருகு)

தார்ப்பொலி முடியினுந் தவறி வீழ்ந்தபின்
னாற்பதினாயிரம் வருட நண்ணினே
னேற்பது விடுகவென் றிசைடப வெந்தையைப்
பார்ப்பது விடுத்தயன் பகர்வ தாயினன்.

(இ-ள்) கொன்றைமாலைபிரகாசிக்கின்ற சுவாமியின் திருமுடிமேல்நின்றுவிழுந்து நாற்பதினாயிரம் வருஷங்களாகவந்தேன் இன்னும்நான் பூமியிற்போகவில்லை வருத்தத்தோடு வருகிறேன் என்னைப் பிடிக்கவேணடாம் விட்டுவிடென்று தாழம்பூ சொல்லப் பிரமன சுவாமியைத்தேடுவதை வெறுத்துச்சிலவார்த்தை சொல்லத்தொடங்கினார்-எ-று. (ருஎ)

தன்னியகைதையே துணையுமாய்நமக்
கின்னமுமலைவருகிடுக்க ணீக்கினை
யுன்னிலு முயிர்துணை யுறவு வேறிலை
யன்னிய னல்லனை னனமு மல்லவே.

(இ-ள்) என்சமீபத்திலடைந்த தாழம்பூவே நீஎனக்குத்துணையாயிருந்து நானின்னமுந்தேடியலையாமல் என்வருத்தத்தை நீக்கினாய் உனைப்பார்க்கிலும் உயிர்போன்ற துணையும்உறவும் வேறில்லைநானும்அன்னியனல்லஅன்னப்பட்சியு மல்லவென்று சொன்னான் பிரமன்-எ-று. ()

நாமமோ நான்முக னனுமா லுமா
யோமமா மிதற்கள றிசைக்க வெண்ணினேம்
பூமிகீழிடத் தவன் போகினன் மனத்
தீமையேன் றிருமுடி தேடிக் காண்கிலேன்

(இ-ள்.) என்பெயரோ பிரமன் நானும்விஷ்ணுவுங் கூடி அக்கினிசொரூபமாகிய இந்தமலையி னளவைத் தெரிந்துகொள்ள வெண்ணினோம் பூமியின்கீழிடத்தைப் பிளந்துகொண்டு அடியை அவன்தேடப்போனான் பாவியாகியநான் முடியைக்காண வெகுநாள்தேடியுங் காண்கிலன்-எ-று

அடிதலை வரவிது வதுசொ டென்பய
னெடியகின் வரவினா னினைத்த தெய்தினாற்

படியளந் தவனுடன் பறவையா கிவன்
முடியறிந் தானென மொழிதல் வேண்டுமே

(இ-ள்.) ஆதியந்தமாகநடந்தசெய்தியிது அதைமறந்துப் பேசுவது அம்பலனென்ன பெருமை பொருந்தியஉன்னுடை யகல்லாவினைமேவினை த்தகாரியமுடிந்தால்தான்பயன் பூமியையளந்த விஷ்ணுவினுடன் பகை கொண்டு பறவையா யுருவெடுத்துஇப்பிரமன்சிவனுடை ய முடியையறிந் தானென்று நீசொல்லவேண்டு மென்றுபின்னுஞ் சொல்லுவானபிரமன் எ-று. (கூ௰)

வஞ்சமென் றிகழ்ந்திடேல் வருந்து ளாக்குயிர்த்
தஞ்சமா மெனிற் பெரும பொய்யுஞ் சாற்றலா
யஞ்சியே சொலத்தகா மொழியு மன்றிது
நஞ்சமுண் டவைவரோ நண்பு வேண்டினர்.

(இ-ள்) தாழம்பூவே கேள்இது வஞ்சனைத் தொழிலென்றுதள்ளாதே யாதோ ஒருதுன்பத்தை யடைந்தவர்க்குஉயிர்ச்சேதம் வருமானால்அது பிழைத்தற்குப் பெரிதாகிய பொய்யையும் இதுபயப்பட்டுச்சொல்லக் கூடாத வார்த்தையுமல்ல அன்பன்சொன்னால்சினேகத்தைவிரும்பினவர் விஷத்தையுந் தின்ன இசைவார் எ-று. (கூக)

கண்ணுதன் முடியின்வாழ் கைதை யேயிதி
தெண்ணுவ தொழிகென வியைந்து போந்தது
விண்ணினு மிருந்துகீழ் விரைந்து வேதியன்
மண்ணுலக ளந்தமாயன் மருங்கில் நண்ணினான்

(இ-ள்) பரமசிவனுடையமுடியில்வாழ்கின்ற தாழம்பூவே வேறே ஒரு ஆலோசனையுஞ் செய்யவேண்டாம் இதற்குடன் படென்று சொல்லததா ழம்பூவுமதற்கிசைந்து வந்தது ஆகாயத்தில்நின்றுசீக்கிரத்தில்பிரமன்பூமி யையளந்த விஷ்ணுவினிடத்தில் வந்துசேர்ந்தான் எ-று. (கூஉ)

சீதரா கேட்டியென் வாவின் செய்கையைக்
காதநூறாயிரங் கணக்கிலே கடந்
தாதியான முடியறிந் தணுகினேனெனை
வோதினை கைதையு முள்ளதென்றதே.

(இ-ள்.) விஷ்ணுவே என்னுடைய நல்வரவைக்கேள் ஒருநொடியிலே நூறாயிரங்காதம் பறந்து எல்லாருக்கும் ஆதியாகிய சிவனுடையசிரம்பா ர்த்துவந்தேனென்று சொன்னான் தாழம்பூவும் நிஜந்தான் பிரமன்பார்த் தானென்று சொல்லிற்று-எ-று. (கூங)

எழுசீர்க்கழிநெடிலாசிரியசந்தவிருத்தம்.

அக்கணமழற்கிரி வெடித்தது வெடித்துவரவக்கினி லரக்கரிணையோ
ருக்கனர்திசைக்களிறுகக்கினவருக்கனையுருக்கியதெனக்குருகினர் [வாய்
செக்கரொளிமட்டிடமுருக்கிகழ்கறுக்குமெய்சிவப்பொளிவெளுத்த வடி
முக்கணனதற்கிடைமுளைத்தனனமுகத்திலவன்முப்புரமெரித்தநகையே

(இ-ள்) அப்படி பிரமன் சொன்னவுடனே அக்கினிமலை படீரென்று வெடிக்கது சத்தத்தில் இராட்சதர்கள் தேவர்கள் நடுக்கிட்டு உயிர்சோர்ந்தார்கள திக்கில் உள்ளயானைகள் சூரியர்களை உருக்கிச்சாய்ந்தாலெப்படியோ அப்படி இரக்கஜலத்தைக்கக்கின செக்கர்வானத்துப்பிரகாசம்மழுங்கிப்போம்படியாகவும் முருக்கம்பூவிதழ் கறுக்கும்படியாகவும் சிவந்த தமது திருவுருவின் ஒருருவுபொருந்தியசிறம விபூதியினால் வெளுத்தவடிவாய்த் தோன்ற அந்தவெடிப்பில் நின்றுபரமசிவனெழுந்தருளினார் முப்புரத்தை எரித்தநகைப்பு அவர் முகத்திலே வந்தது-எ-று.

முண்டகவதந்தையின் மொழித்தவுளை நன்றெனமொழிந்து நகைகொண்டவளவே அண்டபகிரண்டமுநடுங்கினவொடுங்கினவடங்கின விடுஞ்சுடரொலாய, கொண்டலுமறைந்தனசிறந்தனவிறந்தனகுறைந்தன நிறைந்தனதலா, வெண்டிகை கரிந்தனசரிந்தனபொரிந்தனவெரிந்தன விரிந்தகருவே.

(இ-ள்.) பிரமனேஉன்னுடைய அகங்காரத்தினாலேசொன்னதுநன்றாயிருந்ததென்று சொல்லிநகைத்தபோது அண்டபகிரண்டங்களெல்லாம்நடுங்கின நடுங்கியொடுங்கிப்போயின சூரியசந்திரருடைய பிரகாசமடங்கிபோயின மேகங்கள்மறைந்தனசிறந்து நிலையாயிருக்கினறவைகளெல்லாம் இறந்தன நிறைந்தவைகளெல்லாம் குறைந்துபோயின குறைந்தவைகளெல்லாம நிறைந்தன கூட்டமாகிய திக்குகள் அலைந்தனமரங்களெல்லாம் கரிந்தும் பொரிந்தும் போயின எ-று. (சுரு)

சவி விருத்தம்.

அழிந்தன பயனென வமரரஞ்சினர்
குழிந்தது நிலமெனக் கொள்ளையாய் மலர்
பொழிந்தனர் நெடியவற்கு வகை பூத்தது
கழிந்தது மலரவற் கிடுமைபை கங்குலே.

(இ-ள்.) தேவர்களெல்லாரும்பிரமன் இன்றே அழிந்துபோனானென்று பயப்பட்டார்கள்பூமிபள்ளமாகும்படி கொள்ளைகொள்ளையாக புட்பமாரி பொழிந்தார்கள்விஷ்ணுவுக்குச் சந்தோஷம் வந்து பிரமனுக்குமுன்னைய அகங்காரமென்கிற இருள் நீங்கிப்போயிற்று-எ-று. (சுசு)

பாடினன் பரவினன் பரவசத்தினொ
லாடினு னேடினு னளவிடாமுழுக்
கூடினா னெவ்வரங் கொள்ளுகே னெனத்
தேடினா சிவனையத் தெளிந்த செங்கண்மால்.

(இ-ள்) அப்போது தெளிவைபடைந்தவிஷ்ணு அக்கினிமலையினிடத்திலிருந்துஎழுந்தருளியபரமசிவனைப்பாடினார் வந்தனஞ்செய்தார் பரவச

ங்கொண்டானந்தக் கூத்தாடினார்நான்குதிக்கிலுமோடினார்யாவராலுமளவிடக்கூடாதஇச்சுவாமியைத்தரிசித்துக் கூடினேன் இனிநானெவ்வரங்கேட்பேனென்றுலோசனை சொல்வார்-எ-று. (௬௮)

ஆசையாலுருகுமவ் வரிதனன்புகண்
டீசனும் பலவர மினிது நல்கினன்
வாசமாமலரவனுக்கு மண்ணின்மேல்
பூசையுங் கோயிலும் போகவென்றனன்

(இ-ள்.) இப்படியிருந்த பத்தியினாலே தேகம் உருகாநின்ற விஷ்ணுவினுடையஅடிமைத்திறத்தைப் பார்த்துக் கேட்டவரங்களெல்லாஞ்சிவன் அருளிச்செய்துபிரமனைப்பார்த்து உனக்குப் பூமியிலேகோயிலும் பூசையுமில்லாமற்போகக் கடவதெனறுதிருவுளம்பற்றினார்சுவாமி எ-று.

கைதவமே யிவனொடு கரவுநீருனை
செய்ததாழ் நீண்டிலே யென்று தீர்த்தன
னெய்திய முனிவுகண் டேங்கி நான்முகன்
மெய்தளையுறப்பதம் வீழ்ந்து போற்றினான்

(இ-ள்.) தாழம்பூவே இப்பிரமனோடே சேர்ந்து பொய்சாட்சிசொன்னபடியினாலேஉன்னை இதுமுதற்கொண்டு தீண்டேனென்று தள்ளினார்அதன்பின்புசுவாமிக்கு இப்படிப்பட்ட கோபம் வந்ததைப்பார்த்து ஏக்கமெடுத்துப் பிரமன் தன்னுடைய தேகம்பூமியிலேநன்றாய்ப்படியவிழுந்து வந்தனஞ்செய்தார்-எ-று. (௬௯)

பொடிமூடிய தழலேநிகர் புலையாணவ மலமாஞ்
செடிமூடிகை யாலேயுழல் சிறியேனொரு பொருளோ
வடிவேயொரு வெளியேசதுர் மறையேசதுர்மறையின்
முடிவேதனி முதலேயெனை முனியேலெனை முனியேல்

(இ-ள்) நீறுமூடி நெருப்பையொத்த சுவாமியே சண்டாளத்துவமாகிய ஆணவமலமென்கிறசெடிமூடிக்கொண்டிருப்பதனால் அவிவேகியாய்த் திரியாநின்ற சிறியேனொருபொருளோ உருவமானவரே அகண்டவெளியானவரே நான்குவேதமானவரே நான்குவேதத்தினுடையஅந்தத்திலிருக்கின்றவரே ஒப்பற்றமுதலாகியவரே கோபித்துக்கொள்ள வேண்டாம்கோபித்துக்கொள்ளவேண்டாம் எ-று. (௭௰)

எந்நீர்களு மொன்றாகிய வெழுவாரியு மறுகி
வெந்நீரது வானாலுடன் விளாப்புன லுண்டோ
நின்னீர்மையி தென்றாலுல குயிரெப்படி நிகழும்
முந்நீர்விட முண்டோயெனை முனியேலெனை முனியேல்.

(இ-ள்.) எல்லாநதிகளினீரும் விழுந்து ஒன்றாகியஏழுசமுத்திரங்காய்ந்து வெந்நீராய்ச் சுட்டால் அதையாற்றுவதற்கு வேறே சலமுண்டோ

உமக்கேயிப்படிப்பட்ட கோபம்வந்தால் உலகத்திலிருக்கிற சீவராசிகளெப்படி பிழைக்கும் முன்னே சமுத்திரத்திலே பிறந்த ஆலகால விஷத்தை யுண்டமூர்த்தி கோபஞ்செய்யவேண்டாம் கோபித்துக்கொள்ள வேண்டாம்-எ-று. (எக)

பிறைபோழு மதியேயுமை பெண்ணே பிறவானே
நறையேமறு மலரோயென நானுவித மானை
பொறையேதிரு வருளேபொழி யியலேவிய விசையே
மறையேபல் முறையேயெனை முனியேலெனை முனியேல்

(இ-ள்.) மூன்றாம் பிறையாயும் பூரணசசந்திரனும் பெண்ணாகியும் ஆணாகியும்தேனாகியும்புட்பமாகியும் மலைகளாகியும் கிருபாசமுத்திரமாய்ப் பொழிகின்ற மேகமாகியும் சொல்லாகியும்நாதமாகியும்மற்றுமநானாவித ரூபமாகியுமிருக்கின்ற மூர்த்தியேஉமக்குமுறையோமுறையோ என்னை கோபிக்கவேண்டாம் கோபிக்கவேண்டாம(அடியேனைக்ஷமிக்கவேண்டு மென்றவனே) எ-று. (எஉ)

வெம்மைச்சா மலராகிய வில்வேடனு வன்றே
கொம்மைத்தலை மதவாரெழு கோபக்களிறன்றே
செம்மைக்கன வனறேகொலை செயுமந்தகனன்றே
மும்மைப்புர மனறேயொரு பொருளாயெனை முனியேல்.

(இ-ள்.) மிருந்த வெப்பத்தைக்கொடுக்கின்ற புஷ்பபாணங்களையுடையமன்மதன் தேகமல்லவே தாருகாவனத்து ரிஷிகள் விட்டஎழும்பினதலையும் ஆறுபோன்ற மதத்தையுடைய கோபமாகியயானையல்லவேஅந்த ரிஷிகள்பின்புவிட்ட சிவப்பாகிய அக்கினியல்லவேகொலை செய்யுந்தொழிலையுடைய எமனல்லவே திரிபுரமல்லவே நான்எவ்வளவுஉமக்கு என்னைஒருபொருளாகக்கோபஞ்செய்யவேண்டாம்-எ-று. (எங)

அங்கதங்கரிகா முன்னம யறிவேனெனு மளவே
பறவைப்படி வானேனினி மேலேவிடர்படுவேன்
சிறுமைப்படு மெனபாலருள் செய்யென்றுரைசெய்தான்
மறுகிக்குளி ரனல்போலிறை மகிழ்வாயிவைமொழிவான்

(இ-ள்.) யாவராலுமறியக்கூடாத உம்முடையமுடியை யறிகிறேனென்கிற மாத்திரத்திலேபறவை யுருவமானேன் இனிமேலே துக்கத்தையடைவேன் சிறுமையையடைந்த என்னிடத்தில் கிருபை செய்யுமென்று சொல்லி விசனப்பட்டபோது மறுகக்காய்ந்து குளிர்ந்தஜலம்போலச் சிவபிரான சந்தோஷமாய் திருவாய்மலர்ந்து சிலமொழிகளை அருளிச்செய்தார் எ-று. (எச)

அமபோருகா ஞ்சேவினி யவனித்தல் மறையோர்
தம்பூசனையும்பூசனை யாகித்தமனிபமாய்ந்
சம்பூர்ந்த வுலகேழையும் விதியிதென்றருள் செய்தான்
காம்பூர்கடல் விடமுண்ட ...

இ-ள். பிரமனே இனிமேல் நீ பயப்படாதை பூமியில் பிராமணர்களுக்குச்செய்கிற பூசை உன்பூசையாகக்கொண்டு பொன்னுருவமாயுண்டாகிய மகாமேருமலைதாங்கும் ஏழுலகத்தையும் எப்போதும்போல்படையென்று அருளிச்செய்தார் சங்குகள்தவழ்கின்ற சமுத்திரத்தின்விஷத்தையுண்ட கிருபைக்கடலாகிய சிவபெருமான்-எ-று.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இத்தலத்திலுமக்குவரங் கொடுத்ததனல்யோசனைமூன் றெல்லைதூரம், சுத்தபவிததிரஞானத் தலமாகப்பொலிந்தவிந்தச் சோதிதானும், சிற்றுருவமலையாகி வரமுதவக்கடவதின்பஞ் சிறந்ததான, முத்திதனைத்தகையாம லுதவுமிதற்கருணைபுரி மொழியுநாமம்.

இ-ள். பிரமாவிஷ்ணுக்களே உங்களுக்கு இததலத்திலே அனுக்கிரகஞ்செய்து வரங்கொடுத்தபடியினலே இத்தலத்தைச்சுற்றி மூன்றுயோசனைதூரம்வரைக்கும் சுததபவித்திரமாக விருக்கவேண்டும இநதச்சோதிமலை சிறியஉருவத்தோடுகூடிய மலையாககடவது பேரின்பஞ்சிறந்த மோக்ஷததைத் தடையில்லாமற்கொடுக்கும் இத்தலத்துககு அருணசலபுரியென்று பெயராம-எ-று.

வாதைபடுமிந்திரனு மிமையவருநினைக்கவவர் வருத்தந்தீர்த்தோம், ஆகலினலித்தலத்தை நினைப்பவாக்குப்பிறப்பிடும்பையகற்றுவோமிப், பூதலமுமித்தலமும் பிரளயத்து மழியாத பொற்பதாகி, மோதியகாறறடைந்ததிசை சராசரங்களனைத்தையுமுயர் முத்திசேர்க்கும்.

இ-ள். துன்பத்தையடைந்த தேவேந்திரனும் தேவர்கள்நம்மைநினைகக அவர்களுடைய துன்பத்தைதீர்த்தோம ஆனபடியாலிந்தத்தலத்தை நினைக்கிறவர்களுக்குப் பிறவித்துககத்தை நீக்குவோம் இந்தப்பர்வதமும் இத்தலமும் பிரளயகாலத்திலும் நாசமடையாத லக்ஷணத்தையுடைதாகி மோதுகின்ற வாயுசஞ்சரிக்கின்ற திக்குகளிலுள்ள சராசரங்களெல்லாவற்றையும முத்தியிலேசேர்க்கும்-எ-று

வையகத்திலரியதவம் புரிந்தவருக்கினியமுத்தி வழங்கவேண்டிச், செய்யவிதைத்திருநகரி லவதரிககவரந்தருவோஞ் செய்ததான,செய்பெறவொன்றுயிரமாய் வளருமிதிற் கொடும்பாவம் விளையாதிதை, யையமெனவுணர்வார்க்குப் பரகதிகிட்டாது நமதாணைதானே.

இ-ள். பூமியிலரிதாகிய தவத்தைச்செய்தவர்களும் இனிமையான மோக்ஷததைக் கொடுக்கவிரும்பி சோதிவடிவமாகிய இத்தலத்திலவ

தரிக்க வரத்தைக்கொடுப்போம் இதில் ஒருதானம்செய்தால் ஒன்று ஆயிரமாய்விருத்தியாகும் இந்தத்தலத்தில் பாவமேயுண்டாகாது இதுதசசந்தேகமாக நினைப்பவர்களுக்கு கிடைக்கமாட்டாது நம்முடைய ஆணைப்படி என்றார் பரமசிவன-எ-று.

அன்னவிவை மொழியளவிலழற்றாணமதுகுருகி யசலமாகி, வன்னமென்று சுடர்விரிந்து விளங்குதல்கண் டயன்றிருமால் வணங்கிச்சொல்வார், விண்ணவர்க்குமெங்களுக்கு மிதன்சோதிக் கெதிர்குறுகிவிழிக்கப்போகா, தெண்ணரிய சுடர்களெல்லா முட்கரந்த மலையாகவிருக்கவென்றார்.

இ-ள். இந்தப்படி சுவாமிசொன்ன அளவில் அக்கினிமலை குறுகி ஒருசிறியமலையாய் நிறம்பொருந்திய மிகுந்தபிரகாசம்விரிந்து பிரகாசிப்பதுபார்த்த பிரமனும் விஷ்ணுவும் சுவாமியையவணங்கிச் சொல்லுவார்கள் தேவர்களுக்கும் எங்களுக்கு மிதமலையின்சோதிக் கெதிராகப்போய் கண்விழிக்கக்கூடவில்லை ஆனபடியினால் எண்ணுதற்கரிய கிரணங்களெல்லாமறைந்து ஒருமலையா யிருக்கவேண்டு மென்கிறார்கள் என்றவாறு.

அன்னமிசை வருவானுங் கருடன்மிசை வருவானு மமலமூர்த்தி, வன்னியொளிமறைத்துமற்றை மலையாகவிருத்தியென மலையாச்செய்தார், சென்னியிலேயொருசோதி யனுதினமுமதெரியவருள் செய்வாயென்று, சொன்னுமந்த வடியவர்க்கா விறையவனுமிரங்கியிவை யியம்பலுற்றார்.

இ-ள். அன்னவாகனத்திலேறுகின்ற பிரமனும் கருடவாகனத்தில் வருகின்ற விஷ்ணுவும் மலரகிதராகிய சுவாமி அக்கினிப்பிரகாசத்தை மறைத்து மற்றமலைகள்போ லிருக்கவேண்டுமென்றுகேட்க அப்படியேமலையுருவாகச்செய்தார் இந்தமலையினுச்சியிலே ஒருபிரகாசம் எங்களுக் கெரியும்படியாகக் கிருபைசெய்யவேண்டுமென்றார்கள் அப்படிச்சொன்ன தொண்டர்களுக்காக இரங்கிச் சுவாமியும் திருவாய்மலர்ந்தார்-எ-று.

கார்த்திகைக்கு கார்த்திகைநா ளொருசோதிமலைநுனியிற் காட்டுகிற்போம், வாய்த்தவத்தச்சுடர்காணிற் பசிபிணியில்லாதுலகின் மண்ணில்வாழ்வார். பார்த்திபற்கு மருக்கவர்க்கு மிடையூறுதவறுமிது பணிந்தோர்க்கண்டோர், கோத்திரத்திலிருபத்தோர் தலைமுறைக்கு முத்திவரங் கொடுப்போமென்றார்.

இ-ள். பிரமவிஷ்ணுக்களே கார்த்திகைமாதத்தில் கிருத்திகைநக்ஷத்திரத்தில் மலையினுச்சியில் ஒருபிரகாசங்காண்பிப்போம் அப்ப

டிபொருந்திய கடலைக்கண்டால் தரித்திரமும் வியாதியு மில்லாமல் உலகத்தில் நிலைபெற்றுவாழ்வார்கள் இந்தசேதியைக்கண்ட அரச ர்களுக்கும் அரியதவசிகளுக்கும் இடைபூறுகிற்கும் இதைப்பணிந்த வர்கள் தரிசித்தவர்கள் கோத்திரத்தில் இருபத்தொரு தலைமுறைக் கும் முத்திவரங்கொடுப்போமென்றார் அருணாசலேசர்-எ-று.

மரணபவமதாகல்ல மருந்தாகு மதற்குமலை மருந்தென்றோர்பே, ரருணைவடிவாதலினா லருணகிரியெனுமொரு பேரதனையோர்கால், தரணியிலேயுரைத்தவர்க்கு முக்கோடியஞ்செழுத்துச் சரித்ததாமென் றிருணிலவுமிடற்றிறைவ னிசைக்கமகிழ்ந் திறைஞ்சியவ ரிசைப்பதா னார்.

இ-ள். இறப்பினையும் பிறப்பினையும் நீக்குதற்கு மருந்தான படியி னாலே இந்தமலைக்கு மருந்தென்றுபெயர் இந்தமலைசிவப்புநிறமான படியினாலே அருணகிரியென்று ஒருபெயர் அதைஒருதரம் பூமியிலே சொன்னவர்களுககுப் பஞ்சாக்ஷரத்தை மூன்றுகோடிதரம் உச்சரித் ததற்குச்சமானமாகுமென்று நீலகண்டத்தையுடைய சிவன் அருளிச் செய்ய பிரம்மவிஷ்ணுக்கள் சந்தோஷத்தையடைந்து சுவாமியையவ னங்கிச்சொல்லுவார்-எ-று.

அடுத்தருணகிரியானே யனக்குவிண்ணீ ரலதுபுன லாட்டுவா ரார், கொடுத்தவுடுத் திரளலது திருமுடிக்கு மணிமாலை சூட்டுவா ரார், கடுத்திகழு மிடற்றானே கதிர்களன்றி மணித்தீபங்காட்டுவாரார் வடுத்திறைஞ்சிப் பூசைசெய்ய விதன்கீழோரிலிங்கவடி வெடுப்பாயெ ன்றார்.

இ-ள். ஸ்ரீஅருணாசலேசரே மலைபாகிய உமக்கு ஆகாயத்திலின்று பெய்கின்ற மழையேயல்லால் ஜலங்கொண்டுவந்து அபிஷேகஞ்செய்கி றவர்களார் நக்ஷத்திரக்கூட்டங்களே முத்துமாலையாவதல்லது வேறே முத்துமாலை சூட்டுகிறவர்களார் சூரியகிரணமே தீபமாவதல்லாமல்தீ பங்கொண்டுவந்து வேறேகாட்டுகிறவர்களார் ஆனபடியினாலே நாங்க ள் அபிஷேகமுதலானவைகள் செய்து பூசைசெய்வதற்கிந்தமலையின் கீழ் ஒருஇலிங்கவடிவமா யெழுந்தருளவேண்டுமென்று கேட்டுக்கொ ண்டார்கள்-எ-று.

அன்னதுவா யிருக்குதகீர் காமியத்திலருச்சியமென் றசலம்புக் கா, ரென்கிலமும் புகழுவங்கோர் சிவனுருவமுற்றதுகண் டிறைஞ்சி யேத்தி, மன்னியபூமழைபொழிந்து பரவசமாய்மகிழ்ந்தாடி மயனைக் கூவித், தன்னிகரில்கோபுரமு மண்டபமுமணிமதிலுஞ் சமைப்பித் தார்கள்.

இ-ள். அப்படியே இலிங்கமாகிரும் பக்தியுடன் ஆசிபுங்களென் றந்த மலையினுள்ளே மறைவுகோலஞ் செய்தார் எந்தத்தேசம் புகழும்

படி அவ்விடத்தில் ஒருஇலிங்கந்தோன்றிற்று ஆதைக்கண்டுவணங்கி த்தோத்திரஞ்செய்து புஷ்பவருஷம்பொழிந்து பரவசமாய்ச்சந்தோஷ மடைந்து ஆனந்தக்கூத்தாடி மயனென்கிற தேவதச்சனைக்கூப்பிட்டு ஒப்பில்லாத கோபுரங்களும் மண்டபங்களும் அழகுள்ள மதிலுஞ்செ ய்வித்தார்கள்-எ-று.

அழியாதவளநகரும் தீர்த்தமுமோர் நூற் றறுபதுங்கண் டமுதுசெய் தார் வழிபாகீர்ச்சுழிய கீர்ச் சுரநதியுஞ் சுரதருவுங் கேணிகளுமரமு மான,வொழியாமலிமையவருமி நரயருமனிதரெனவு வுருவங்கொண் டார், விழியாளவிடமனைய கணிகயராயரம்பையரு மேவினரே.

இ-ள். எப்பொழுதுமழியாத வளப்பமுள்ள நகரமும் முந்நூற்றறு பது வகையாகிய தீர்த்தங்களும் உண்டானது கண்டமுதுசெய்தார்வழி யாதசலத்தையுடைய ஆகாயகங்கையும் கற்பகவிருக்ஷமும் கிணறுக ளும் தரங்களாயிரமான நீங்காமல்தேவர்களும் மனிதவடிவங்கொண் டுபிறந்தார்கள் விஷம்போன்றகண்களையுடைய தாசிகளாக அரம்பாஸ் திரீகள் பிறந்தார்கள்-எ-று.

காலையிலேமுழுகிமர வுரியுடுத்திச் சிவந்தசடை கட்டிநீறு, மே லணிந்து கண்டிகைபூண்டனமுகல மஞ்சனத்தான் மிகுந்தகந்த, மா லையினுற்சிவபூசை புரிந்தண்ணுமலையதனை வரங்கொண்டேத்தி, ஏவ வொருபதினுலா யிரவாண்டு கழிந்ததறபின்னிறைவராஞா.

இ-ள். பிரமா விஷ்ணுக்கள் இருவரும்காலையில் முழுகி மரவுரிதரி த்துக்கொண்டு சிவந்தசடைகட்டி விபூதியை தேகமெல்லாந் தரித்து ருத்திராக்ஷமாலை பூண்டுகொண்டு திருமஞ்சனத்தினாலும மாலையினா லும் சிவபூசைசெய்து திருவண்ணாமலையைப் பிரதக்ஷணஞ்செய்துவ ணங்கிப் பின்பு பதினாலாயிரவருஷம ஆனபின்பு சுவாமியினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தக்கணபதிக்குப்போய்த் தங்களதிகாரத்தை ப்பெற்றுக் கொண்டார்கள்-எ-று

ஆசைதருந்திருவருணை யமைந்ததற்பின் கயிலைமலை யாசைபோ யிற், றீசனுக்குங்கனகமலை யிதுவாயின் வெள்ளிமலை யினிமேலென் ஞை, காசிமுதலெடுத்துரைக்குஞ் சிறப்புடையதலமேழுங் கனகநாடு, மாசகன்ற கதிர்தோன்றவொளியிழந்த வுடுக்கணம்போல் வளமைதே ய்ந்த-

இ-ள். சுவாமிக்கு ஆசைகொள்ளும்படி திருவருணாசலத்தலம் அ மைந்தபிறகு கயிலமலையிலிருக்கும் ஆசைவெறுத்தது இந்தம லையே பொன்னுருவங் கொள்ளுமாயின் வெள்ளிமலையின்மேலா சையுண்டாமா காசிமுதலாகச் சொல்லப்பட்ட ஏழுலகங்களு ம் தேவலோகமும் குற்றம்நீங்கிய சூரியனுதயமாகப் பிரகாச

யிழந்த நக்ஷத்திரங்கள்போல ஒளி மழுங்கிப் போயின-என்றவாறு.

அரியயனு மளவிடற்கரியமலையு நிலைரைக்கவரிதென்றாலுந், தெரியவுனக்கறிந்தபடி சிறிதுரைத்தேனினியுரைக்குந் திறமேதென்றான் வரிசைபெறுமார்க்கண்ட முனிமகிழ்ந்து பணிந்துமையாள் மலையிற்றோன்றி, யுரியசிவனிடங்கலந்த கதையுமுரைத்தருளுகென வுரைப்பதானான்.

இ-ள். நந்திதேவர் மார்க்கண்டேய ரிஷியைப்பார்த்து விஷ்ணுவும் பிரமனும் அரிதற்கரிதாகிய திருமலையின் சிறப்பை என்னால் சொல்லுதற்கரிய தென்றாலும் எனக்குத்தெரிந்த அளவில் சிறிது உமக்குத் தெரியும்படிச் சொன்னேன் இனிச் சொல்லவேண்டிய தென்னவென்றார் வரிசைபெற்ற மார்க்கண்டேயரிஷி சந்தோழித்து வணங்கி சுவாமிபார்வதியார் இமோற்பர்வதத்தில் அவதாரஞ்செய்ததும் சுவாமியைநோக்கித் தவஞ்செய்து அவரிடப்பாகம்பெற்றதுஞ் சொல்லவேண்டுமென்று கேட்கச் சொல்லத்தொடங்கினார்-எ-று.

இரண்டாவது

திருமலைச்சருக்கம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௱௯௰௪.

---



உ

சிவமயம்.

மூன்றாவது

பார்வதியார்

# திருவவதாரச் சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பன்னிருவர்பதினொருவ ரெழுவரெண்மர் திசைக்கின்றவர்பணி நாட்டுளளோர்,கின்னரர்கிம்புருடர்சித்தரியக்கரிடையவர் முனிவர்கிளை யிலுள்ளோர், பன்னுமலரயனறிருமால் கலைமடந்தைமலர்மடந்தை மகிழ்ந்துசூழ, முன்னவனையிகழ்ந்துதக்கன் முடியாதபெருவேள்வி முடிக்கலுற்றான்.

பூருவகதை.

மார்க்கண்டேயரே முன்னாளிலே பிரமனிடத்திற்பிறந்ததக்கனென்பவன் அரியதவஞ்செய்து உயர்ந்தவரங்களைப்பெற்றுக் கொண்டுமிகவும பிரசித்தனாகி வாழுகிறகாலத்தில் பார்வதியார தன்னிடத்திற்பிறக்க அந்த அம்மையைசுவாமிக்குத் திருக்கலியாணஞ்செய்து கொடுத்து மாமனாகும்படி வரம்பெற்று அந்தப்படிசெய்தபின்பு ஒருநாள் சுவாமியினுடைய சபைக்குபோனான அவ்விடத்தில் சுவாமிதனக்குள னக்கு எழுந்து மரியாதைசெய்யவில்லை யென்கிற கோபங்கொண்டு தன்னுடைய வீட்டுக்குவந்து சுவாமியைப்பார்க்கிலும உயர்வையடையவேண்டுமென்று.

இ-ள். பன்னிரண்டு சூரியர்கள் பதினோருருத்திரர்கள்சத்தரிஷிகள் அஷ்டதிக்குப்பாலகர் நாகலோகத்தார் கின்னரர் கிம்புருடர் சித்தரய க்ஷர் தேவர்கள் முனிவர்கள் நிலைபெற்ற பிரமன் விஷ்ணு சரஸ்வதி இலட்சுமி மிகவுமசந்தோஷம் அடைந்து சுற்றிக்கொள்ளஎல்லோருக்கும் முதல்வராகிய பரமசிவன் நிந்தித்து முடியக்கூடாத பெரியயாகஞ்செய்யத் தொடங்கினான்-எ-று.

எந்தைசெயுமகம்பார்க்க விடையருளென்றிறைஞ்சினைவி யிசைத்தாளித்தைப், புத்தியிலாதிகழ்ந்தனனென் றுரைததன்னிதெனைவேண்டிப் பொறுப்பாயென்று, வந்தனஞ்செய்தனளவளை நகைபுரிந்துகடிதுசென்று வருவாயென்றான், கந்தமலர்க்குழலாளுந் தந்தைமகந் தொடங்குகன தலத்தைச்சார்ந்தாள்.

இ-ள் பார்வதிதேவி தகப்பனாகியதக்கன் யாகம்பண்ணுவதைக் கேட்டு சுவாமியின்னுடைய தகப்பன்செய்கிற வேள்வியைப்பார்த்துவருவதற்கு உத்தரவுகொடுமென்று கேட்க அதற்குசுவாமி உன்தகப்பன் புத்தியில்லாமல் என்னைமிகவும் நிந்தித்திருக்கிறானே நீபோகலாமாவென்றுசொல்ல அதைக்கேட்டுசுவாமி என்தகப்பன்செய்த இந்தக் குற்றத்தை என்னைவேண்டிப் பொறுக்கவேண்டுமென்று நமஸ்காரஞ்செய்தபோது அந்த அம்மையைப்பார்த்து நகைத்து நல்லதுநீபோய்ச் சீக்கிரத்தில்வந்துசேரென்றுசொல்லப் பார்வதியுமதகப்பன்யாகஞ்செய்கிற இடத்துக்குப்போனாள்-எ-று.

தாபாரைக்கண்டடிதொழுதா ளவடவர்திருந்தனடன்றநதையானை, தீபவனைபயந்தனளங் கயனுமிகழ்ந்தாணிகழ்ந்த செய்லை நாசகிப் போயிருக்குஞ்சுடலையெனப் பிழைபிறந்துவிம்கவுநகள் பெருவாழ்வென்று, வாய்பிறக்குங்கொடுமைசெவி மடுத்தனளச செயலறிந்தான் மங்கைபாகன்.

இ-ள். பார்வதி தக்கன்யாகசாலைக்குப்போய் தன்னுடைய தாயைவணங்கினாள் அவள் இந்த அம்மையை தழுவி உபசாரஞ்சொல்லாமலிருந்தாள அதன்பிறகு திமைபொருந்திய தகப்பனைவந்தனஞ்செய்யவுனும் நிந்தித்தான் அதைப்பார்த்துக்கோபங்கொண்டு உன்னுடைய யாகசாலை வாழ்வுபோயிருந்து விளையாடுஞ்சுடலையாகிப் போகக்கடவதென்று சபித்து இப்பாவிவளர்த்ததேகம் இருக்கக்கூடாதென்று யோகதநிலையாலே தன்னுடைய தேகத்தைவிட்டாள் அச்செய்கையையுணர்ந்தார் பரமசிவன்-எ-று.

கலிவிருத்தம்.

உண்ணிலாவுவஞ்சிசெல்ல வொருவனுவியுய்யுமே
தண்ணிலாமுடிக்குனின்று தழலைமொண்டிறைக்கையா
லண்ணல்வெம்பிமுனிவுகொள்ளு மளவிநெற்றிவிழிதனில்
விண்ணடுங்கமண்ணடுங்க வீரன்வந்துதோன்றினான்

இ-ள். எப்பொழுதுங் கூடவிருந்தபார்வதி தேகத்தைவிட்ட வுடனே ஒன்றாயிருந்த பரமசிவனுடைய உயிர் சவுக்கியத்தை யடையுமோ குளிர்ந்தசந்திரன் தம்முடையசிரத்திலே தானேயிருந்து நெருப்பைவாரிச் சொரிகின்றபடியினாலே அதிகதாபமடைந்து இந்ததக்கனாகிய பாவியினாலல்லவோ இவ்வருத்தம உண்டாயிற்றென்று கோபித்துக்கொள்ளும்போது அவருடைய நெற்றிக்கண்ணிலிருந்து வீரபத்திரர் ஆகாயவுலகமும் பூமியும் நடுக்கும்படி தோன்றினார்-எ-று.

நாகபற்றியுடல்கறுத்து மணிமயூரமுடியுடனே
சரிக்குமேருவென்ன விடிமுழக்குமொழியினவாய்
நாகொப்புளிக்கநெற்றி நயனமும்கொதிக்கவே
நஞ்சலிக்கைபொடெங்க ளோயன்வந்துதோன்றினன்,

(இ-ள்.) மேகத்தைப்பார்க்கிலும் உடம்புகறுத்துமயிலின் சிரம்போன்ற மரகதரத்தினம்பதித்த கிரீடத்துடன் சஞ்சரிக்கின்றமேருபுக்கு ஒப்பாகி இடிபோல் முழக்குகின்ற நெருப்பாகிய சொல்லையுடையவராய்நஞ்சைகொப்புளிக்க நெற்றிக்கண் கொதிக்கச்சிரத்தின்மேல்வைத்துக் கூப்பிய கைகளோடு எமனையாகிய வீரபத்திரர்வந்து தோன்றினர் எ-று,

ஒழிந்தசிங்கவுரிபுயத்தி னுத்தரீயமாகவே
கழித்தெரிந்தவல்லியந்தி னதளியாசகதைச்சரையாய்
விழித்திமைக்குமுன்னமம்பி னணிந்த வெளியடைந்தமேனியா
யழைத்ததென்னவென்னவென்ற ளையனவந்துதோன்றினன்

(இ-ள்) இரணியனைக்கொன்ற நரசிங்கத்தினுடைய தோல்உத்தரீயமாகவும் தாருகாவனத்து ரிஷிகளால்விடப்பட்டுச் சுவாமியால் மாண்டைந்த புலியினதோல் இடுப்புக்கச்சையாகவும் விழித்து இமைப்பதற்குமுன்னே ஆகாயமெல்லாமறைந்த தேகத்துடனேஎன்னை யழைத்தது என்னகாரணமென்னகாரணமென்றுவீரபத்திரர்வந்தார்-எ-று.

மூக்கணைந்தணிர்கொடாது கனல்கொடுக்குமாகிலெனத்
தக்கனவேள்வியைத்தகர்த்து மீளுகென்றுசாற்றினா
னக்கணந்திறைவனைபொங்கி யடிபணிந்தியேகினன்
பக்கநின்றபூதநாதர் பாரிடங்கள்சூழவே

(இ-ள்.) என்னையழைத்தகாரியமென்னவென்றுகேட்ட வீரபத்திரனைப்பார்த்து மூன்றுகண்களையுடைய பரமசிவனைசலத்தைப்பொழியாமல்நெருப்புகளைக் கக்கும் மேகம்போற்போய்த் தக்கனுடையாகத்தையழித்து வாவென்றருளிச்செய்ய அக்கணமே வீரபத்திரர் அதிகசந்தோஷமடைந்து சுவாமியினதுதிருவடியைத்தொழுதுபக்கத்திலின்றபூதகூட்டங்களும் பேய்களுஞ்சூழப்போனார்-எ-று.

நஞ்சுகொப்புளிக்குநாக நாலிரண்டுமாலையா
யஞ்சிரட்டிபூகநீல வாலவட்டம்வீசவே
குஞ்சரங்களெட்டையுங் குதம்பையாகவிட்டவெண்
கஞ்சகந்தார்நால்வர் தூய கவரிநின்றுவீசவே

(இ-ள்) விஷம்கக்குகின்ற அஷ்டமாநாகங்களை மாலையாகத்தரித்துக்கொண்டு பத்துபூதங்கள் நீலவர்ணமான ஆலவட்டம்வீசிக்கொண்டுவர வுதித்துவிருக்குமயானைகளெட்டையுங்காதிலேகுண்டலமாகத் தரி

கொண்டு வெள்ளைச்சட்டையணிந்த நால்வர்பரிசுத்தமாகியசாமரம் வீச வும்புறப்பட்டார் வீரபத்திரர் எ-று.

தீயிருந்தவுக்கரவெம்மை விண்பிழிந்துதீர்த்திடும்
பேயிரண்டுநூறுநூறு காகளம்பிடிக்கவே
வாயிரண்டுபோலுமாலை மதியிடந்தபூதமோ
ராயிரங்கவிக்குமுத்தி ஞதபத்திரங்களே

(இ-ள்.) வடவாமுகாக்கினி குடிகொண்டிருந்த வயிற்றினுடைய பசியைமேகங்களைப்பிழிந்துகுடித்து ஆற்றிக்கொள்ளுகின்றஇரண்டாயிரம் பேய்கள் எக்காளம் பிடிக்கவும்சந்திரனைஇரண்டாகப்பிளந்து இரண்டுகடைவாயிலும வைத்ததுபோலுமிருக்கும் ஆயிரம்பூதங்கள் முத்துக்குடைகள் பிடிக்கவும்புறப்பட்டார்-எ-று.

மாயு மாயர்தந்தசங்கு கோடிகோடிமருகவே
தீயினவாயினூர்திதந்த சிங்காதமூதவே
சாயுமெண்ணில்காலர்மேதி தந்தகொம்பிசைக்கவே
யாயிரங்களிற்றெருத் தணாந்தேரிலேறினன்

(இ-ள்.) இறந்திறந்து பிறக்கிற அனேககோடிவிஷ்ணுக்களுடையகையிலிருக்க சங்குகளை அநேகபூதங்கள் வாயில்வைத்து ஊதிவரவும் இறந்த அக்கினிபகவான் வாயுபகவானேறுகின்றஆட்டுக்கடாகலைமானிவைகளுடைய கொம்புகளைவாயிலவைத்து அனேக பூதங்களூதவும் இறந்துபோன எமராசர்களேறிய எருமைகடாக்களுடைய கொம்புகளை வாயிலவைத்து அனேகபூதங்களூதவும் ஆயிரம்யானைகள் கட்டியிழுக்கிற தேரிலேறினார் வீரபத்திரர்-எ-று.

சிலகணங்களானையான் சிலகணங்கடோதா
யுலவுகின்றசிலகணங்க ளோடுகின்றவாகியாய்
மலைவுகொண்டுசிலகணங்கள் மனிதர்தேவராயின
வலகைதானுமளவிலா தனந்தவேடமானதே

(இ-ள்.) அப்படிவீரபத்திரர் தேரிலேறினபோது சிலபூதங்கள்யானைரூபங்கொண்டன சிலபூதங்கள்தேரினுருவங்கொண்டனசிலபூதங்கள் குதிரையாயின சிலபூதங்கள்மனிதரும் தேருமாயின அளவில்லாத பேய்களனந்தரூபங்கொண்டு புறப்பட்டன-எ-று.

வீரையேழடங்கவுண்டும் விடாய்கெடாதுமீளுமே
பாரவேழுபாருமுண்டு பசிகெடாதுபடருமே
கூரவேலெறிந்துகால ஞடுகொள்ளைகொள்ளுமே
போரையேவிரும்பிமுன னடந்துசென்றபூதமே

(இ-ள்.) வீரபத்திரர் புறப்பட்டவுடனேயுத்தஞ்செய்யவிரும்பி அவருக்குமுன்னேநடந்தபூதங்கள ஏழுசமுத்திரத்து நீரடங்கவுமகுடித்தாலும் விடாய்தீராமல் திரும்பும் பாரமாகியஏழுலகத்தையுஞ்சாப்பிட்டுப் பசிபோகாமல் அலைந்துகொண்டிருக்கும் கூர்மைபொருந்தியவேலாயுதத்தை எறிந்துஎமனுடைய நாட்டைக்கொள்ளைகொள்ளும்இப்படிப்பட்டவலிமையுடையவன-எ-று.

கொண்டலேழையுஞ்சிவந்த குஞ்சிமீதுசுற்றுமே
புண்டரீகரண்டமும் புகைகொளுத்திமீளுமே
யெண்டிசாமுகத்தைநாடி யாகசாலைதேடுமே
சண்டவாயுவென்னவங்கை தட்டியோடுபூதமே.

(இ-ள்) ஏழுமேகங்களையும் பிடித்துச்சிவந்ததலைமயிரிலே சுற்றிக்கட்டிக்கொள்ளும் அனேகபிர்மாண்டங்களையும் புகையுண்டாகநெருப்பினாலே கொளுத்தும்எட்டுத்திக்குந்தேடி யாகசாலையெங்கேயென்றுதேடும் பிரசண்டவாயுபோலக் கைகளைக்கொட்டிக்கொண்டு வீரபத்திரர் பின்னையோடுகின்றபூதங்கள்-எ-று.

வெள்ளவாழிமது துகர்ந்து வீறுகின்றசிலகணந்
துள்ளவந்துபுவனமுற்றுஞ் சுற்றுகின்றசிலகணந்
தள்ளுகின்றபேர்களென்று தாக்குகின்றநகைசெயும்
பள்ளிகொள்ளுமுடனெழுந்து பரிவுகொண்டுபாடுமே.

(இ-ள்) சிலபூதங்கள்வெள்ளமாகிய சமுத்திரம்போன்ற மிகுந்த மதுவைப்பானஞ்செய்து அதனால் வீறுப்புமேலிட்டுச்சண்டைக்கு எழுந்தனசிலபூதங்கள் நம்முடைய சுவாமியைத் தள்ளுகிறவர்கள்யாரென்றுகேட்க அவர்களைக்கொல்லுகிறதற்காகநின்றுவீரநகைகொள்ளும் சிலபூதங்கள் நித்திரைசெய்யும் சிலபூதங்கள் உடனே யெழுந்து அன்புகொண்டு சிவனைக்குறித்துப் பாடும்-எ-று.

வெதிர்சிலம்புமுரசுசங்கம் விருதுபம்பையதிரவே
புதியகண்டைமணிதவண்டை புரிமதங்கமறுகநீள்
கதிகடந்துயாகசாலை கண்டுபூதகணமெலா
மதிதிமைந்தரானபேர்களையும்வாரிவீசினர்.

(இ-ள்) வீரபத்திரர் புறப்பட்டவுடனேபுள்ளாங்குழல்சிலம்புமுரசுசங்கங்கள் விருதாகிய உடுக்கைமுதலான வாத்தியமுழங்கவும்பெரியமணிதவண்டை மிர்தங்கம் சத்திக்கவும் வழிமுழுதும் போய்த்தக்கனுடைய யாகசாலையைக்கண்டு எல்லாப்பூதகூட்டங்களும் அதிதியினுடையபிள்ளைகளாகிய சகலதேவர்களையும் தூக்கிவாரிவீசின-எ-று.

காரிலேறிமையிலேறி கடாவிலேறியலகைமே
லேறிலேறிமகாமேறி யிராலையேறியலகையாம்
பாரிலேறிமானமேறி பசுவிலேறியெண்மருந்
தேரிலேறிவந்தவீரர் சேனைமாளமோதினார்.

(இ-ள்) மேகவாகனனாகியதேவேந்திரனும்ஆட்டுக்கடாவிலேறுகின்ற அக்கினியும எருமைக்கடாவாகனனாகியயமனும் பேய்வாகனனாகியநிருதியும மகரவாகனனாகிய வருணனும் மானவாகனனாகியவாயுபகவானும அ

லகாபுரியையாண்டு விமானத்திலேறுகின்றகுபேரனும் எருதுவாகனனு கிய ஈசானியனுமாகிய எட்டுப்பேர்களுந்தேரிலேறி எதிர்த்துக்கொண்டு வந்தவீரபத்திரருடைய பூதகணங்களையெதிர்த்தார்கள்-எ-று.

வாளிசூலம்வேலுலக்கை வச்சிரங்கணிச்சிவாள்
மீளிபசனைகாவலாளர் வீழுமாறுவீசினார்
கூளிநாலிரண்டுசென்று கொடியவெண்மர்பரியெலா
மாளியோடெடுத்தெறிந்தவெம்மைக்குநிகரவே.

(இ-ள்.) திக்குப்பாலகர்எட்டுப்பேருமபாணம்சூலாயுதம் வேல் உலக் கைவச்சிராயுதம் மழுகத்திஇதுகளை வீரபத்திரருடையசேனைத்தலைவர் கள் விழும்படிபிரயோகஞ்செய்தார்கள் அப்போதுஎட்டுப்பூதங்கள் புற ப்பட்டுத்திக்குப்பாலகர் எட்டுபேரையும அவர்களேறிய வாகனங்களோட் டையும் அம்மனைகுச்சமானமாக எடுத்தெறிந்ததுகள்-எ-று.

அலகைநாலிரணடுவீழ வமர்செய்பூதமோடவே
மலைவுகொண்டுதிக்குபாலகர் வாகைமாலைசூடினேயீர்
நவிதல்கண்டுவீரன்வாளி நாலிரண்டையேவினு
னுலகடாலருடல்புகும் துளைமுதுமுண்டவையதே.

(இ-ள்) முன்னே எட்டுபூதங்களால் எறிபட்டுவிழுந்ததிக்குப்பாலக ரெட்டுபேரும் அந்தஎட்டுப்பூதங்களும் கீழேவிழவும் மற்றைப்பூதங்க ளெல்லாம் ஓடிப்போகவும் யுத்தம்செய்துவெற்றிமாலை சூடிக்கொண்டா ர்கள் அதுகண்ட வீரபத்திரர் எட்டுபாணத்தை விட்டார் அவைகள் போய் எட்டுப்பேருடலைத்தொளைத்து அவ்வுடல்களுள் இருக்கிறஅமிர் தத்தைப்புசித்து சஞ்சரித்தன-எ-று.

மருங்கிழிந்துகுயிலதாகி வச்சிரக்கனேகின
னெருங்கியீசனளகையாளி நிருதிவாயுவருணனுஞ்
கருங்கினர்கடாவிலேறி துஞ்சினனைமுந்புரான்
பெருங்கையேழுமீசனன்பா பிறவிபோலறுத்தனன்.

(இ-ள்) தேவேந்திரன்தன்வாகனத்தைவிட்டுகருயில்வடிவங்கொண்டு ஓடினான் ஈசானன்குபேரன நிருவாயுவருணன் இவர்கள் தோற்றுவெட் கத்தைபடைத்தார்கள்எமன் இறந்தான் அக்கினிபகவானுடைய ஏழுகை யையும் சுவாமிஅன்பருடையபாவங்களை அறுப்பதுபோல் அறுத்துதத ள்ளினார்வீரபத்திரர்-எ-று.

கச்சமற்றவச்சமோடு கலையதானவெச்சனு
ரெச்சனுகவுயிரைவாரி யுடலுரித்தெறிந்தனன்
பச்சைவல்லியன்னையான்பண்ணிகாதிரண்டையும்
வச்சிரத்திறலெறிந்துமாயன் முனபுசென்றனன்.

(இ-ள்,) பயங்கொண்டயாககர்த்தா வாகியபகலைக்கோட்டு மகாவிஷ்ணு பிர ணனுக்கேகரும் வேறாகக்கொண்டு உடலையுரித்து தெறிந்தார் பார்வதியி ன்தாபாகிய தக்கனுடைய பெணசாதியின் இரண்டுகாதையும அறுத்து த்தன்விமானத்தி... சக்கரவி... ந்திரக்கோபோனா வீரபத்திரர்-எ-று

மிக்கருந்துசோமபானம்வீரபானமாகவே
யொக்கநின்றயாகளண்டமொன்றுகொண்டுகுன்றுபோற்
றக்கனெதிர்த்தபோது தலையரிந்துதள்ளினொ
ரைக்கணத்திலொன்றுசென்றதைக்கணத்துயின்றதே.

(இ-ள்) தேவர்கள் கூடிச் சோமபானஞ் செய்வதை நீக்கித்தனக்குவீரமே பானமாகும்படி யாகசாலையிற் புகுந்து யாகத்தம்பத்தைப் பிடுங்கிக்கொண்டு எதிர்த்த தக்கனுடைய தலையைமலைபோல் கீழேவிழ அறுத்துத்தள்ளினர் அப்போது அந்தப் பூதகணங்களிலொன்று அரைநொடியிலேதானே அத்தக்கன்தலையைத்தின்றுவிட்டது எ-று.

பசுக்களென்றுருத்திரப்பசுக்களாமெனன்னையும்
வசுக்களாமெனன்னையுமறுத்ததேவராகியும்
உடுக்கள்போலொளிந்திருந்தமுனிவராவிதன்னையும்
மசிக்கவீரன்விட்டசூலமள்ளியள்ளியுண்டதே

(இ-ள்) மாடுகளிலேறுகின்ற பசுப்போன்ற உருத்திர கூட்டங்களின் பிராணனையும் அஷ்டவசுக்களாயினவையும் மற்றுமுள்ள தேவர்களாயினவையும் தாரகைகள்போ லொளித்துப் பதுங்கியிருந்த முனிவருடைய பிராணனையும் பரியாசஞ் செய்யவீரபத்திரர்விட்ட சூலாயுதம் எடுத்து பிடித்துத்தின்றுவிட்டது எ-று,

விழிபிதுங்குருக்கர்பல்லைவேரறுந்துவாணிமா
வெழிலுடைத்தநாசிவீரனறுத்துடைமாக்கினன்
கழலமைத்தசந்திரன்கவின்ககுறைகலைநிலா
வழலவிக்குமாறுதாளிலப்புவெண்ணெயொத்ததே

(இ-ள்) சூரியன் பற்களையும் கண்களையும் தெறித்துக் கீழேவிழ அடித்துச் சரஸ்வதியைப் பிடித்து இரண்டாகநாசியறுத்தார் இலக்குமியைமூக்கறுத்தார் வீரகண்டாமணியைத் தரித்த காலினாலே சந்திரனை மிதிக்க அவன் தேய்ந்து தக்கனுடைய யாகசாலை நெருப்பை மிதித்ததனால் அந்தவெப்பந்தீர அப்பிய வெண்ணெய்போலானான்-எ-று.
காயமண்ணில்விட்டதேவர்கரியமேனியலகையாய்
மாயமாகிமுனையாசம்வந்துதோன்றியமர்செயத்
தூயசேனையாபபேர்தொடர்ந்துசாகவமர்செய்தார்
பேயதாயிருக்கவும்பிணக்ககன்றதில்லையே
(இ-ள்) பூதகணங்களாலே இறந்துபோனதேவர்கள் கரிய தேகத்தையுடைய பசாசாகி மறுபடியும்முன்யாகத்திலே மாயமாய்த்தோன்றியெழுந்து சண்டைசெய்ய அவர்களை வீரபத்திரசேனை அடித்துக்கொன்றார்கள் ஆகையால் பேயாய்ப்போயுந்துக்கம்நீங்கவில்லை-எ-று.

(1) தின்றுவிட்ட தென்பது இதயம் பிளந்து கொன்றது என்று கூட்டுக.

விதிவினைக்கவோமகுண்டம்வேறுபட்டதென்னினும்
பிரியசோறுமெள்ளினோடுபொரியும்வாய்புகட்டிமுன்
குதிகொளப்பக்கடாமெடுத்தொழுகுபூதர்கூளிதன
னுதரகுண்டமனலெழுந்தவோமகுண்டமானதே,

(இ-ள்.) பிரமனாலே விதிக்கப்பட்ட யாகசாலை நாசத்தையடைந்தாலும் அதற்குப்பிரயோகமாக வைத்திருந்த சோறும் எள்ளும் பொரியும் ஒருபூதப வாயிற் கொட்டிக்கொண்டுநெய்க்குடங்களை யெடுத்து மடமடவென்று விட்டுக்கொள்ளும்போது அதனுடையவாய்ஓமகுண்டமாகவும் உதராக்கினியை நெருப்பாகவு மிருந்தது எ-று.

அட்டதிக்குப்பாலருஞ்சுக்கிகளுங்குருக்களும்
மூட்டரானமுப்பதின்மூன்றுகோடிதேவரும்
பட்டபோதவர்தமெய்கள்பழுதுறாதுதன்னுளே
இட்டபூதவுதரமுன்னையாகசாலையொத்ததே,

இ-ள், அஷ்டதிக்குப்பாலகரும் அஷ்டவசுக்களும் தலைவராகவந்த குருக்களும் மூடப்பட்டவராகிய முப்பத்துமுக்கோடி தேவர்களும் இறந்தபோது அவர்கள் தேகம் வீணாகப்போகாமல் வீரபத்திரருக்குமுன்னே அவருடைய சேனைகள் சாப்பிட்டபடியினாலே அந்தப்பூதகணங்களுடைய வயிறு யாகசாலையை யொத்தது எ-று.

கற்பகாலமுங்கெடாதகணமிதிக்கவமரர்க
ளற்பமாமுடம்பிரத்தமாவிகாரமொத்ததால்
பற்பலவியக்கர்சித்தர்பண்டிசிந்துகுடங்களாற்
சர்ப்பயாகமொத்ததன்றிதக்கன்செய்தயாகமே.

(இ-ள்) கற்பகாலத்திலும் அழிவில்லாதபூதகணங்கள் மிதித்த படியினாலே தேவர்கள் அற்பமாகிய உடம்பினின்றும் பீரிட்ட உதிரம்யாகத்துக்குநெய்யெடுத்துச்சொரிதல்போலிருந்து பலபலயட்சசித்தர்களுடைய வயிறுபிதுங்கப்பட்ட அவர்களுடைய குடல்கொடிகொடியாகச் சிந்திக்கிடக்கிறது சர்ப்பயாகஞ்செய்தலை யொத்தது அன்றுதக்கன்செய்தவேள்வி-எ-று.

சிறந்ததிக்குப்பாலராகிதேவர்சித்தர்முதலினோ
ரிறந்துபோகவேதனினை நொடியிலேயியற்றினன்
பிறந்துவந்துவந்துபோர்பெருக்கினோர்பிறந்தபேர்
மறந்துவீருவீரன்மோதிமலரினோனைமண்டினன்.

(இ-ள.) சிறப்புப்பொருந்திய திக்குப்பாலகர் முதலாகியதேவர்கள்சித்தர்கள் இறக்கப் பிரமனை கொடிப்பொழுதிலே யவனைப் படைத்துக்கொண்டேவந்தார் அவர்கள்மறுபடியும் யுத்தஞ்செய்தார்கள் அவர்கள்பின்னும் பிறக்காமலிருக்கும்படி பிரமனை யடித்துயுத்தஞ் செய்யத்தொடங்கினார் வீரபத்திரர்-எ-று.

செத்ததேவர்மீளவுஞ்செருச்செயப்படைத்திரிங்
கைத்தலங்கள்வீழமாறுகமலனுனேமோதினன்
() முத்தலைக்கொள்படையெடுத்துமுண்டகத்தர்சிந்தைசேர்
பத்துமைந்தசென்னியும்படிக்குள்ளேயரப்பினன்

(இ-ள்) இறந்துபோன தேவர்கள்மறுபடியுஞ்சண்டைசெய்யப்படைக்குப் பிரமனுடையகைகளை அறுத்துத் தன்னிரூர்மூன்றுதலையையுடைய ஆயுதத்தினலே அவர்மனத்தில் உண்டாகிய பத்துப்பிரமருடைய தலைகளையும் குத்திப்பூமியில் விழத்தள்ளினர் வீரபத்திரர்-எ-று.

அண்டகூடமுண்டுமிழ்ந்தவாதிமாயமாசெயத்
துண்டமேருவெனவிளங்குகருடன்மீதுதோன்றியே
வண்டவாளிவிருடமாசவீரனமார்பில்வீசினன்
கண்டதுண்டமாகவீரன்கையில்வாளியேவினன்

(இ-ள்.) அண்டங்களை விழுங்கி உமிழ்ந்தமுதல்வராகிய விஷ்ணுசண்டைசெய்ய முக்கையுடையமேருநிகராக விளங்கின கருடன்மேல்ஏறிக்கொண்டு அநேகம பாணவருஷங்கள்வீரபத்திரர்மார்பில் படும்படியாகப்பொழிந்தார் அப்படிவிட்ட பாணங்களை எல்லாம் துண்டமாகத் தன்கைப்பாணத்தினலே அறுத்தெரிந்தார் வீர த்திரர்-எ-று.

வையமுண்டமால்வெகுண்டுவாள்விதிர்த்துவீசினு
னையனங்கோர்வாளியாலறுத்தெரிந்தோரம்பினா
லையராவருந்தியாவிபருகினமெய்கருகினை
கையிலாழியேவினன் கனிந்ததணணல்காலிலே

(இ-ள்) விஷ்ணு வில்யுத்தம் பண்ணுகிற தற்குச் சக்தியில்லாமல் கோபங்கொண்டு ஒருகத்தியை எடுத்தூசுற்றி வீசினர்வீரபத்திரர் அக்கத்தியை ஒருபாணத்தை விட்டறுத்தெறித்து ஒரு பாணத்தினலேபாமபைக்கொல்லுகின்ற கருடனைக் கொனறுவிட்டார் அதுகண்டு துக்கத்தினலே உடம்புகறுப்பாயக் கையிலேயிருக்கிற சக்கரத்தைவீரபத்திரர்மேல் பிரயோகஞ்செய்தார் அது ஓடிவந்து சுவாமிகாலிலே விழுது பணிந்தது எ-று.

எந்தைமுன்னளித்தவாழியெந்தைதாளில்வீழலே
யந்தமெய்பொழிந்துபன்றியுரியின்வேடமாகியே
வந்துவந்துபோர்தொடங்கிவாவின்வேலின் வவ்வினு
னுந்திவேரோர்சேலதாரிவாரிமீதொளிததனன்

(இ-ள்.) முற்காலத்தில்விஷ்ணு ஆயிரந் தாமரைமலரைக்கொண்டு பரமசிவனைப் பூசித்து வருகிறபோது இவர் பத்தியைப்பரிசோதிக்கவேண்டி ஆயிரம் பூவிலே ஒருபூவைச்சுவாமி மறைத்துவைததார்விஷ்ணு பூசைசெய்து அருச்சனை பண்ணிக்கொண்டு வரும்போது ஒருபுஷ்பங் குறைய அதற்குப் பதிலாயத் தன்னுடையதாமரைப்பூவொத்த கண்ணை

() முத்தலைக்கொள்படைசூலாயுதம்

தினாலும் முன்னாளைமைநாகன் றனைப்பயந்த மேனையதுமுயற்சியாலுமி
ருக்கவவதரித்தாளையாரெலாங் கற்பகப்பூவிசினரே.

(இ-ள்) எனக்குநாதராகஇருக்கின்ற பரமசிவனைநிந்தித்த தக்கனுடை குமாரியென்று பழிப்பாக உலகம் சொல்லுமேயென்மையெனவு பார்வதி பத்துககருதிரத்தன்னுடைய தேகத்தை யோகாக்கினியினாலே நிவர்த்தி செய்து இமபர்வதராஜன் தபோமகிமையினாலும் முன்மைனாகனென்கிற பிள்ளையைப்பெற்றமேனாதேவியினது தவமுயற்சியினாலும்அவர்களுக்குக்குமாரியாக அவதாரஞ்செய்தாள் தேவர்கள்கற்பகபுட்பங்களை வருஷமாகப்பொழிந்தார்கள்.

சித்தாந்தத்தொன்றுசத்தி சிவத்திரண்டாய் ஞானமிச்சை செயலென்றுமூன்று, கொத்தாகிக் குடிலை தரு நாதவிந்துவியண்டினுக்குங்கொழுகொம்பாகி முத்தாகிச் சிவனிடத்தே யுருத்திரன்மா லயன்முதலாமுளைத்தமூல, வித்தாகிநிறைவாளைப்பயந்தவர்க்கு முடிந்ததவம விளம்பலாமே.

(இ-ள்.) சித்தாந்தமாகச் சொல்லப்பட்டசிவனிடத்திலே ஒன்றுபட்ட அபின்னசத்தியாய்ப் பின்பு அச்சிவத்தில்நின்றும் பின்னசத்தியாயென்றுவேறுபட்டுப் பின்புஞானசத்தி இச்சாசத்தி கிரியாசத்தியென்றுமூன்றுவகையாகிக் குடிலையினாலுண்டாகிய நாதவிந்துகளுக்கு கொழுகொம பாகியும சுவாமிக்குமுத்தாகியும பரமசிவனிடத்தில்உருத்திரன்விஷ்ணு பிரமன்முதலானவர்கள் உண்டாகிறதற்கு மூலமாகியவித்தாகியும் எங்கு நிறைந்த பார்வதியையும பெற்றவர்கு முடிந்ததவப்பெருமையைச்சொல்லக்கூடுமோ எ-று.

கலைவளருமதிபோன்று சிவனைவெல்ல மதன் வளர்க்குங் கரும்பே போன்றும, பலகலையுந்தெளிந்துயர்ந்து பந்துகழங்கூசல்பற்றிப்பயிலு நாளில, மலையரசனிடத்தின்மறைநாரதனொருநாளில் மகிழ்வாயெய்தி யுலகமெல்லாங் குடியிருக்குந்திரு வயிற்றிலிலக்கணம் பார்த்துரைக்க லுற்றான்.

(இ-ள்) பார்வதிஇமாசல ராசனுக்கும் மேனாதேவிக்கும் குழந்தையாகி வளர்பிறைபோல் நாளுக்குநாள் வளர்ந்துமன்மதன் சிவனைவெல்ல வில்வேண்டி அதற்கு வளர்த்தகரும்பையொத்துப் பலசாஸ்திரங்களையுங் கற்றுப்பந்துகழங்கு ஊசல்விளையாட்டு முதலானவைசெய்துகொண்டுவருகிற காலத்தில் மலையரசனிடத்தில் வேதமுணர்ந்த நாரதர் ஒருநாள்வந்து உலகங்களெல்லாம வயிற்றிலேவைத்திருந்த அம்மையுடைய இலட்சணம்பார்த்துச்சொல்வார் எ-று.

நெறியிலோர்புறத்திலவை நேத்திரமுண்டாமொருகைநெடியசூலம, பற்றுமொருதனமறையுமொருபாகமரகதம போல்பட வாமாகுகற்றை நெடுங்குழற் பாதிசடையாகுமொருங்கையினை கழன்று போகுமூற்றுவாவி லைவல்லமின்ன மலையரசனை முருதியுவகையானான.

(இ-ள்) பருவதராசனே உம்முடையகுமாரத்திக்குச் சிலபொழுதிலேநெற்றியில்ஒருபக்கத்தில் அனைக்கண்தோன்றும்ஒருகையிலேசூலமுண்டாகும் ஒருபக்கத்துத்தனம்மறைந்துபோகும் பாதிசரீரம்பச்சைநிறம்போய்ப் பவளநிறமாகும் கூந்தலிற்பாதிசடைகளாகும் ஒருகையிலே வளைகளில்லாமற்போகும் இவர்கள்சம்பவிக்குமென்று நாரதர்சொல்லப் பருவதராஜன்உள்ள முருகிச்சந்தோஷத்தையடைந்தான்-எ-று

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மையநீர்க்கங்கைபாயும் பணிவரைமருங்கில நாள்
துய்யநீர்ச்சடையானந்தங் கோர்தவந்தொடங்கக்கேட்டு
வையகமளித்தாடைத வள்ளலைப்பணிந்துமானை
யையனின்றவத்துக்கேவல் கோடியென்றளித்துப்போனான்.

(இ-ள்.) இப்படிநாரதர் சொன்னதைக் கேட்டுப்பார்வதியே நமக்குப் பெண்ணாகவந்தபடியினாலேபரமசிவன் மருமகனாகிவரவேண்டுமென்று பிரார்த்திக்கொண்டிருக்கிற நாளையில் பூமியிலேகங்கையை செலுத்திக் கொண்டிருக்கிற அந்த இமயபர்வதத்தி லொருபக்கத்தில் பரமசிவன்யாதொரு நினைவினாலே யோகத்தி லிருக்கிறானென்கிற வார்த்தைகேள்வியாகித்தன்மகளாகிய பார்வதியையுஞ்சிலதோழிப்பெண்களையும்அழைத்துக்கொண்டுபோய் நமஸ்காரஞ்செய்துஎன்னுடைய பெண்ணைஉம்முடைய தவத்துக்காக ஏவல்செய்ய ஒப்புக்கொள்ளுமென்றுஅவரிடத்தில் அம்மையைவிட்டுப்போனான் பருவதராஜன்-எ-று.

ஓங்குமாலயன்மற்றுள்ளோ ரொழிவிலாத்தவம்புரிதல்
தங்குபோளிப்பான் றானோர்கருத்தினாற்றவஞ்செய்போதிற்
பூங்குழல்கனியும்போது முஞ்சியும்புனலுங்கொண்டு
பாங்கியர்பலருஞ்சூழப் பணிவிடைபலவுஞ்செய்தாள்.

(இ-ள்.) எல்லாத்தேவரிலுமுயர்ந்த விஷ்ணுபிர்மா மற்றவர்கள்பெருமைபாகியொழிவில்லாததவசுசெய்தால்அவர்களுக்குவேண்டியவரத்தைக்கொடுக்கிற சுவாமியர்தேனொருகருத்தினாலேதவஞ்செய்கிறபோதுபார்வதி பழம்புஷ்பம் தருப்பை திருமஞ்சனமுதலானவைகளைக்கொடுத்துத்தன்னுடைய பாங்கிகளுடனே பலபணிவிடையுஞ்செய்துகொண்டிருந்தாள்-எ-று.

இங்ஙனவிருக்கத்தேவரியாவருமிமையோர்கோவும்.
பங்கயத்தவனையெய்திப் பணிந்தனர்பதுமத்தேனு
மங்கவர்க்கிருக்கையீந்தா னவரவர்முகத்திற்சோர்வுங்
குங்குமக்குழம்புநீத்த புயங்களிற்குழைவுங்கண்டான்.

இ-ள். இவ்விடத்தில் இப்படியிருக்கஎல்லாத்தேவர்களும் தேவேந்திரனுமகூடப்பிரமனுஞ்சேர்ந்து தொசிவார்கள் அந்தப் பிரமனும் அவ

ர்களுக்கு இருக்கஆசனங்கொடுத்துப் பிற்பாடு அவர்களுடையமுகஞ் சோர்ந்து இருப்பதையும் குங்குமம் பூசியிருந்த தோள்கள்இளைத்திருப் பதையும்பார்த்தார்-எ-று.

வச்சிரமொடிந்திசானன் கணிச்சிவாய்மடிந்துங்காலன்
முச்சிரம்வளைந்துமற்றோர் படையெலாமுறிந்துந்தேவர்
மெய்ச்சிரமகுடநீத்து மெலிந்தமைவிளம்புமென்று
னச்சுரர்தமக்குக்கோமான் றாரகனழித்தானென்றான்.

(இ-ள்.) வச்சிராயிதம்ஒடிந்துபோயும் ஈசானன் மழுவாயுதத்தின்வா ய்மழுங்கியும் எமனுடையசூலாயுதம் வளைந்தும்மற்றவர்கள் ஆயுதமுறி ந்தும் தேவர்கள்சிரத்திலேயிருக்கிற மகுடம்பிடுங்கப்பட்டும் வருத்தத் தையடைந்தீர்கள் அவ்வருத்தத்தை சொல்லுங்களென்றுகேட்கத் தே வேந்திரன் தாருகாசுரன் இப்படி அவமானஞ்செய்தானென்றுசொன்னா ன்-எ-று.

காலையம்புயத்தோன்சொல்வான் காலனுற்கனலாற்சாற்றான்
மாலினுலென்னுலுன்னு லவன்வலிதொலைக்கலாமோ
வாலமாமிடற்றான்சேயா யசலமாதிடத்தேதோன்றும்
வேலனூர்வெல்வாருங்கள் சிறையெலாம்விடுப்பானென்றான்

(இ-ள்.) அப்படி தேவேந்திரன் சொல்லக்கேட்டபிரமன் சொல்வான் எமன அக்கினிவாயு விஷ்ணு இவர்களாலும் என்னாலும்உன்னாலும் அ ந்தத் தாருகாசுரனைக் கொல்லக்கூடுமோ சிவனுடையபிள்ளையாய் இமா சலபுத்திரியான பார்வதியினிடமாக சிவசுப்பிரமணியர் அவதரித்துஅவ னைக்கொன்று உங்கள்சிறையை மீட்பாரென்றுசொன்னான்-எ-று.

யோகத்திலிருக்குமீச னுமைக்குநாணளிக்குமாறு
வேதத்திவியற்றுமென்றே யயன்விடைகொடுத்தான்மீண்டு
மாகத்திலனுகித்தேவர் மதனனைநினைத்தார்மாரன்
சோகத்தையொழிக்குக்தென்றற்றேருடன்றோன்றிச்சொல்வான்

(இ-ள்.) யோகத்திலிருக்குஞ் சிவபிரான் பார்வதிக்கு மங்கலியதாரண ஞ்செய்யும்படிச் சீக்கிரதத்தில் முயற்சிசெய்யுங்களென்று பிரமாச்சலருக் கும் உத்தரவுகொடுக்கத் தேவர்களெல்லாம் அமராபதிக்குவந்து மன்ம தனை நினைத்தார்கள் அவன்விடாய்தீர்க்கத்தகுந்ததென்றலாகியதேரிலே றிவந்து சொல்லுவான்-எ-று.

எவன்றவமழிக்கமாக ளெவர்களைமயக்கநீவிர்
கவன்றகெத்துயராலெம்மை யழைத்ததென்கருமமென்று
னவளுறனைமிறுகப்புல்லி யமரர்கோனருளினோக்கிச்
சிவன்றவமழிக்கவேண்டி யழைத்தனைமதெரியச்சொன்னான்.

(இ-ள்.) மன்மதன் தேவர்களைப்பார்த்து எவனுடைய தவத்தைஅழி க்கட்டும் எந்தப்பெண்களை மயக்கட்டும் நீங்கள் எந்த துக்க நிமித்தமா கஎன்னையழைத்தீர்களென்று கேட்கத்தேவேந்திரன் அந்தமன்மதனை இ

ரண்டிகைகளினாலும் இறுக்கக்கட்டித்தழுவி உபசாரத்துடனேயார்த்துச் சிவனுடையதவத்தையழிக்கும்படி உன்னைவேண்டியழைத்ததென்றுதெரியச்சொன்னான்-எ-று.

விண்ணுள்ளார்மகவானசொல்ல வெருவுற்றுவேள்பயந்துகூறும்
பெண்ணலாரலியாணலலர் பிறப்பிலாரிறப்புமில்லார்
கண்ணினாலோனாவதூலாற் கருத்தினாலளவாவந்த
தண்ணிலாமுடியார்செய்யுந் தவத்தையார்தவிர்க்கவல்லார்.

(இ-ள்.) தேவலோகத்திலிருக்கும்இந்திரன்சொல்லக்கேட்டுத்துச்சுவாமிக்குப பயப்பட்டுச் சொல்லுவான தேவேந்திரனே சிவன்பெண்ணுமல்லா ஆணுமல்லா அலியுமல்லா பிறப்பும்இறப்புமில்லாதவர்காட்சிப்பிரமாணத்தினாலும் ஆகமப்பிரமாணத்தினாலும் கருத்தினாலும் இப்படிப்பட்டவனென்றுநிதானிக்கக்கூடாத குளிர்ச்சிபொருந்திய சந்திரனைத்தரிக்குமுடியையுடைய அந்தச்சுவாமிதவத்தை யழிக்கின்றதற்கு யார்வல்லவர் எ-று.

கன்னிகைகவுரியீசன் ககமிலாப்பிரமசாரி
சந்நிதிமகிமையாலே யுயிரெலாந்தழைப்பதற்கு
முன்னியவுயிர்கள்போல வொடுங்கியமயன்பாற்செலலு
மன்னியபொருளும்தோன்றிமனதிலேயொடுங்குமாபோல்.

(இ-ள்.) அம்மனேகன்னிகைசிவனேகும்மமில்லாதபிரமசாரி இவர்களிருவருடையசந்நிதிமகிமையினாலே சகலஉயிர்களுமுண்டாகி விர்த்தியாகும முன்னெப்படி சுவாமியினிடத்திருந்துசீவன்கள் உண்டாயினவோ அப்படியே அவரிடத்தில் ஒடுங்கும்மனத்திலே தோன்றிய அனேகவஸ்துக்களதிலே ஒடுங்குவதுபோல எ-று.

தாமதகுணத்தாரென்பவர் சங்கரித்திடலாலீசன்
சேமமாமுயிர்கட்கெல்லா மினைப்பொழித்தருள்வதாகும்
மாமலகுணமொன்றில்லை வடிவழற்கனலாமென்கைப்
பூமலர்சொரிந்தக்காலும் புகையெழப்பொரிந்துபோமே,

(இ-ள்.) உலகத்திலே சங்காரத்தொழில் செய்வதினாலே சிவன்தமோகுணத்தையுடையவரென்றுசொல்வார்கள்அப்படியன்று உயிர்களுடைய இளைப்பையொழிப்பதாகும்மற்றத்தேவர்களுக்கு உண்டாயிருக்கின்ற மும்மலசம்பந்தமில்லை இவருடையசொரூபம்மிகவும் நெருப்பாகும் அவர்மேல் நான் புஷ்பபாணத்தை விட்டால்அவைகள் புகையாகக்கரிந்துபோகும் எ-று.

உருவெனத்தெரியாதானை யுருவினோடருவானானை
யருவெனத்தெரியாதானை யமர்செயவரிதென்றோசி
வெருவரப்புகுங்காலந்த வேளையில்வேளைநோக்கித்
தருவனத்திடையில்வாழுஞ் சதமகனுரைப்பதானான்.

(இ-ள்.) உருவென்று யாவராலும் தெரியக்கூடாதவரையுருவமாகியும் அருவமாகியும் இருக்கின்ற சிவனை அருவமென்றும் தெரியாதவனை

யும் யுத்தஞ்செய்து ஜயிக்கப்படாதென்று மன்மதன்பயப்பட்டுத்தன்னு டைய தானத்திற்குப்போகப் புறப்பட்டான் அக்காலத்தில்மன் மதனைப் பார்த்து கற்பகத்தருவினிழலில் வாசஞ் செய்யாநின்றதேவேந்திரன்சொ ல்லத்தொடங்கினான் எ-று

மாயவனுரத்தின்மீது மலரவனாவின்மீது
நாயகன்சிரத்தின்மீதும் பொருத்தது நகலமேயன்றோ
காயுநற்கதிரின்மேனிக் கடைந்ததுமெனக்குமிந்த
வாயிரநயனந்தந்த செயலுமுன்னாண்மையன்றோ.

(இ-ள்.) விட்டுணு தமதுடைய மார்பிலேயிலட்சுமியைவைத்துக்கொ ண்டதும்பிரமன சரஸ்வதியை நாவில்வைத்துக்கொண்டதும் மகாதேவ ர்தலையிலே கங்கையென்கிற பெண்ணை வைத்துக்கொண்டதும் உன்னு டைய சாமார்த்தியமல்லவோ சூரியனைச்சாலாயில்இடையசெய்ததும்என க்கு ஆயிரங்கண் வந்ததும்உன்னுடைய ஆண்மையல்லவோ வென்று ன்தேவேந்திரன்-எ-று.

செல்வதின்மெமக்காயங்கே தருவதுதேவர்க்காவி
வெல்வதுசிவனைவென்று கொடுப்பதுகாமவேட்கை
சொல்வதுமறக்கவேண்டா மெனசசொல்லித்துணைக்கைப்பற்றி
நலவரமிதுதாவென்ன மதனவெணயந்துகூறும்.

(இ-ள்) பின்னுந்தேவேந்திரன்சொல்வான்மன்மதனே எனக்காக அங் கேசென்றுசிவனைஜயித்து அவருக்குக்காமலாகிரி யுண்டாகும்படி செய் தால் அவருக்குப்புத்திரனுண்டாகும் அந்தப் புத்திரன் அசுரர்களைக்கொ ன்று தேவர்களைப்பிழைக்கும்படி செய்வார் அதற்குநீயேகாரணமாயிருக் கிறாய்நான்சொன்னவார்த்தை மறக்கவேண்டாமென்றுகையைப்பிடி த்துக்கொண்டு எனக்குஇந்த நல்லவரத்தைக் கொடுவென்றுகேட்கமன் மதன் சந்தோஷித்துச்சொல்வான்-எ-று.

அரன்சிலையென்றாலு மடுங்கணையரியென்றாலும்
வரம்பெற்றவிசைநதநாணும் வாசுகியாவென்றாலுங்
கரும்பெனுஞ்சிலையாலைந் துகணையெனுமலரானீலச் [றேன்
சுரும்பெனுங்குணத்தால்வெல்லிவனெனச்செவித்தொழுது போ

(இ-ள்.) தேவேந்திரனே சிவனுக்குவில்மலையாகி யிருந்தாலும்விட்டு ணுவே பாணமாகியிருந்தாலும் வாசுகியேநன்றாக யேற்றுகின்ற நாணி யானாலும் என்னுடைய கரும்பாகியவில்லினாலும் ஐந்து புட்பங்களாகி யபாணங்களாலும் நீலநிறம்பொருந்திய வண்டெனகிற நாணாலும் அ ந்தசிவனைச்செயித்துப் போடுகிறேனென்று வந்தனஞ்செய்துசுவாமி யிடத்துக்குப்போனான் மன்மதன-எ-று.

சந்தனமணமும்வெய்யத் தமிழ்ப்புதுமணமுங்கொண்டு
வந்ததுமலயத்தென்றல் வசந்தமந்திரியுஞ்சேர்ந்த

இந்துவுமிலாவாங்வெள்ளை கலையினையெறிக்கவிருக்குங்
கொக்கலரின்மாவெல்லாங் கோகிலமுழங்கின்றன்றே.

(இ-ள்.) மன்மதன்சிவனோடுயுத்திக்கும்படி புறப்படும்போது பொதியமலையிலிருந்து அவ்விடத்திலங்கிய சந்தனவாசனையும் திவ்யமானதமிழ்வாசனையுங்கொண்டு தென்றற்காற்றுவந்தது வசந்தமாகிய மந்திரியுமவந்து சேர்ந்தான் சந்திரனுங்கிணமாகிய வெள்ளைகலையினைநான்கு பக்கமும் வீசினான் புஷ்பகொத்துகளையுடைய இளமையுள்ளமாமரத்திலெல்லாங் குயிலமுழங்கியது-எ-று.

மல்லிகைமுகையாகுஞ் சங்கமதுசரமுழக்கஞ்செய்ய
முல்லைசண்பகம்சோகு முளரியேமு லயுள்ள
வெல்லையின்மலருந்தேனு மிசைத்தனவிருபைச்செம்பைக்
கல்லினையுருக்குஞ்சொல்வார் குறிஞ்சியாழ்கரத்திற்கொண்டார்

(இ-ள்.) மல்லிகையரும்பே சங்கமாகவும அவ்வரும்பில் சபதிக்கின்ற வண்டுகள் அசசங்கத்தைவாயில்வைத்தூதுகிறவீரனாகவும்விளங்கமுல்லைசணபகம் அசோகுதாமரைமுதல கணக்கில்லாதபுஷ்பங்களையும்தேனையும்நான்குபக்கமுமிறைத்துக்கொண்டுகடினமாகிய இரும்புகள் செம்புஇதுகள்கூடஉருகும்படி சொல்லுகிற வார்த்தையையுடைய பெணடுகள் குறிஞ்சியாழெனனும் வாத்தியத்தைக்கையிலே கொணடார்கள்-எ-று

பொங்கியவுடுக்களான புகரணிமுகத்துச்செக்கர்
தங்குசிந்தூரமாகுந் தனியிருட்கரியுங்கிளைப்
பைங்குரககமுந்நச்செல்லப்பனைமுலைப்பவளச்செவ்வாய்
மங்கையரொடும்போர்வீரர் வடிக்கண்வாள் விதிர்த்துச்சென்றார்.

(இ-ள்) நக்ஷத்திரங்கள் முகத்திலிருக்கிற புள்ளிகளாகவும்செவ்வானமநெற்றிப்பொட்டாகவுமவிளங்குகின்ற ஒப்பற்ற இருட்டாகிய யானையும் பசுமைபொருந்திய கிளியாகியகுதிரையும் நடக்கப்பருத்த முலையையும பவளம்போனறவாயையுமுடைய ஸ்திரீகளாகிய சுத்த வீரர்கள் தங்கள்தங்கள்கண்களாகியகத்திகளை அசைத்துக்கொணடு புறப்பட்டார்கள்.

கோணியகரும்புமைந்து குலமலர்க்கணையுங்கொண்டு
வாணுதலிரதிசெல்ல மகரகேதனத்தினோடு
தாணுமாவனத்தைசசேர்ந்தான் றவஞ்செய்வான்றனைக்கண்டஞ்சி
நாணினான்முகாலவண்டு நாணினைநடுங்கினானே

(இ-ள்.) வளைவாகியகரும்புவில்லையும் புட்பங்களாகிய ஐந்துபாணங்களையும எடுத்துக்கொண்டுஒளிபொருந்திய நெற்றியையுடைய ரதிதேவிகூடவரமீனக்கொடியுடன் பரமசிவன் அயோத்தியிலிருக்கிற வனத்தைச்சேர்ந்து அவ்விடத்தில் தவஞ்செய்கிற அந்தச்சுவாமியைப்பார்த்து இவனைஎவ்வாறுசெயிப்போமென்றுபயந்து வெட்கத்தையடைந்து நடுங்கினான் வண்டைநாணாகவுடையமன்மதன்-எ-று

வெளிக்கலக்கெதிர்த்தாலென்ன வினையுமோதனக்கென்றெண்ணி
யொளித்தனன்முன்னே பின்னேயுமையவள்வரவுகண்டு
களித்தனன்யுக்கமோ கனத்துகளிறைத்துவில்லை
வளைத்தனனிராணபூட்டி வடிக்கணைதொடுத்தான்மாரன்

(இ-ள்) நேரோவொளியாக யுத்தஞ்செய்தால் என்னகேடுநமக்குண்டாகுமோ வென்றுநினைத்துசுவாமி யின்பின்தெரியாமல் ஒளித்திருந்து சமயம்பார்த்துக் கொண்டிருந்தபோது பார்வதி அக்கடவுள்முன்னே பணிவிடைசெய்ய வருதலைக்கண்டு பெண்துணை நமக்கிருக்கிற படியினாலே வெல்லக்கூடுமென்று சந்தோஷித்துமோகத்தை உண்டாக்கு புஷ்பபாணத்தை இறைத்து வில்லைவளைத்து நாணேற்றிப்பாணங்களை தொடுத்தான மதன எ-று.

ஒருகரும்புருவச்சாப மொடியினி யுலகமீன்ற
விருகருப்புருவசசாப முளவென வெழுச்சியாலே
யொருகணைதொடுத்தால் சென்றுபுதனுசுடுகணையினாலு
மொருகணைவிடுத்தான மாரனுடலெலாங்கொளுத்திறநனறே.

(இ-ள்) மன்மதன் தானதிசணைடசெய்தால் ஒருகரும்புஉருவமாகிய வில்லானது ஒடிந்தாலும் உலகத்தைப்பெற்ற பார்வதியின் இரண்டுகருமபுருவமாகிய வில்உண்டாயிருக்கின்றன நமக்கு யாதொருகுறைவுமில்லை யெனகிறசெருக்கினாலேபோய் அனேகபாணங்களைவிட்டபோதுமூன்றுபுரத்தையும எரிததுநகையாகிய அம்பையுடைய சிவன் அம்மனமதனமேல் தனநெற்றிக்கணணைச்செலுத்தினார் அககண மனமதனுடைய உடம்பையெல்லாங்கொளுத்திவிட்டது எ-று

அருக்கவெண்பஞ்சுபோல வழற்கண்ணுனைங்கனை
திருக்குளங்கலைக்கண்டு தேவருந்திசையினோரும்
வெருககொளவொளித்தார் பூதகணத்துடன்விடையினாலும்
பொருக்கெனமறைந்துவெள்ளிப்பொருப்பிடைபுகுந்தானன்றே

(இ-ள்) நெருப்புப்பட்ட எருக்கம் பஞ்சுபோல்மன்மதனுகியமாறுபாடுபொருந்திய மனத்தை யுடையவன்எரிந்துபோகக்கண்டு தேவர்களும் அஷ்டதிககுப் பாலகரும் பயப்பட்டு ஒளித்துக்கொண்டார்கள் அதனபின்பு சுவாமிபூதகணங்களுடன் சீக்கிரமாக அந்தவிடம் விட்டுக்கைலாயத்துக்கு எழுந்தருளினார்-எ-று.

சங்கரனமனத்தைவேண் டியுமையுநற்றவமேசெய்தா
ளங்கதுபினருமாறேழ் முனிவருக்கமலன்சொன்னான்
மங்கலவேள்விசெய்தமுனிவருங் கமலன்சொன்னான்
துங்கவெம்புனையார்க் கிந்தைசோபனஞ்சொல்லினார்கள்.

(இ-ள்) பரமசிவன் தனனைக்கலியாணஞ்செய்து கொள்ளப்பார்வதிதேவியுஞ்செய்கிறாளவள் வந்துசேரச் சத்தரிஷிகளை யழைத்து பருவதராஜனிடத்திற்போய் சுவாமிக்கு உன்பெண்ணைக்கலியாணஞ் செய்துகொடுவென்றுகேளுங்களென்று அனுப்பினார் அந்தப்படியே அந்தவெழுபேரும் பருவதராஜனிடத்திற்குப்போய் இந்தச் சோபனசங்கதி சொன்னார்கள்-எ-று.

மலையிறையகிழ்ந்தானந்த மலையிறைபுதல்வள்ளல்
குலமதுபயந்தோர்நாமங் குடிப்பெயரோதுவாழூர்
தலமதுபுகலுமென்றான் றவத்தவர் நகைததுச்சொல்லா
ரலகிலான்பிறப்புநல்லகிளைபென் வறிவித்தார்கள்

(இ-ள்.) ரிஷிகள்போய்ச்சொன்னவுடனே பருவதாராஜன் சந்தோஷித்தான அவன்பிள்ளையாகியமைந்தன் ரிஷிகளைப்பார்த்து சிவனென்னசாதி அவருக்குத்தாய்தகப்பன் பெயரென்ன குடிப்பெயரென்ன அவரிருககுமூரெது சொல்லுங்களென்றுகேட்டான் அதைமுனிவர்கேட்டுநகைத்துச்சிவமே அளவிடக்கூடாதவர் அவர்பிறந்தவிடம் ஏங்கில் அவர்நல்லசதியென்று தெரிவித்தார்கள்-எ-று.

பொருந்ததோருவகை யாகிபவிறைமுடியன்போர்நாளிற்
பொருத்தமுநாளுந்தேர்ந்து புனிதனைப்புகழ்ந்துபோற்றி
விருத்தியார்வரவுநாளுங் குறித்திறைவிடுததானனைனோர்
பருத்தகங்கையினற்சிந்தப் படியெலாம்பணிந்துசொன்னார்

(இ-ள்) அப்படிசப்தரிஷிகள் சொன்னபிறகுபருவதராஜன் முதலானவர்களெல்லாமகாசந்தோஷத்தையடைந்து சந்திரனைத்தரித்தமுடியையுடைய சிவன்பிறந்தநட்சத்திரத்திற்கும் அம்மைபிறந்த நட்சத்திரத்திற்குத்தகுந்தபொருக்கமுங்கலியாணஞ்செய்கிறகாலமுமறிந்துநிச்சயஞ்செய்துரிஷிகளினுடையபாதத்தைப்புகழ்ந்துவணங்கி விருத்திபொருந்தியதிருக்கலியாணமுகூர்த்தவோலையும் எழுதிக்கொடுத்தனுப்பினான் அந்தவெழுரிஷிகளும் கங்கையைத்தரித்தசுவாமிக்குநடந்தசங்கதியெல்லாம் வணங்கிச்சொன்னார்கள்-எ-று.

இமையவெற்பிறைவனோலை முகத்திசைவுழ்கிரிக்குமேருச
சிமையமாலவனைக்குஞ்செம்பொற்றிகிரிமாலவனைக்குமேழு
தமரவான்கடற்குஞ்சித்தசாரணர்முனிவோருக்கும்
அமரரானவர்க்குமஞ்சிமணத்தினையறிவித்தார்கள்.

(இ-ள்.) இமையபருவதராசன் பார்வதியம்மை திருக்கலியாண முகூர்த்தவோலையை அநேகதூதர்கள் கையில் கொடுத்து தனுப்பவிக்க அவர்கள்சத்தகுல பருவதங் களுக்கும் கொழுமுடி பொருந்திய மேரு

வுங்கும்சக்கிரவாளகிரிக்கும் ஒளியையுடையசப்தசமுத்திரத்திற்கும்சித்தர்-சாரணர் முனிவர்-தேவர்முதலானவர்களுக்கும்அம்மைதிருக்கலியாணத்தைதெரிவித்தார்கள்-எ-று (௬௩)

ஓலைகண்டளவேசேர்ந்த வுததிகளேழும்பூமி
மாலையாய்ச்செல்லுகின்ற மகிமைசேர்நதிகளேழும்
நீலமேமுதலாயுள்ள கிரியெலாநெருங்கிசென்ற
கோலமாமுனிவோர்சித்த ரிமையவர்குழாங்கொண்டார்கள்

(இ-ள்) ஓலையைக்கண்டவுடனே ஏழுசமுத்திரத்திற்கும் பூமிதேவிக்கும் மாலைபோலப்பிரகாசிக்கின்ற மகிமைபொருந்திய ஏழுநதிகளுக்கும நீலகிரிமுதலாகியசப்தகுலபருவதங்களுக்கும் அதிஷ்டானமாகிய தேவதைகள் நெருங்கிசசேர்ந்தார்கள் முனிவர்களும்-சித்தர்களும - தேவர்களும் கூட்டங்கூட்டமாகச் சேர்ந்துவந்தார்கள்-எ-று, (௬௪)

அட்டதிக்கனைத்துந்தேராற் கொடிகளாலடைத்தார்விண்ணை
மட்டறுவிமானந்தன்னான் மாலையான்மறைத்தார்வீதி
நெட்டிலையரம்பைபூக நிரைகளாய்நிறைத்தார்வெற்பிற்
றட்டியபுழுகினாலே மெழுகினார்தரைகளெல்லாம்

(இ-ள்) எட்டுத்திக்கையும் தேரினாலும்-கொடிகளாலும்-இடமில்லாமல்நிறைத்துவிட்டார்கள் ஆகாயத்தை இடமில்லாமல்விமானத்தினாலும் மாலைகளினாலும்மறைத்துவிட்டார்கள் வீதிகளில் நீண்ட இலைகளையுடையவாழைகளையும் கமுகுகளையும் நிரைநிரையாகநட்டு அலங்காரஞ்செய்தார்கள் மலையிலிருக்கிறபுழுகைக் கரைத்துத் தரைகளெல்லா மெழுகினார்கள்-எ-று. (௬௫)

தோரணஞ்சமைத்தார்முத்தின் றொடையெலாந்தொடுத்தார்விண்ணிற்
பூரணகும்பம்வைத்தார் புதுமணிவிளக்குமிட்டார்
ஆரணனுலகுமற்றை யளகையுமமரர்நாடு
நாரணனுலகும்வந்து காணவேநாணுமாறே.

(இ-ள்) தோரணங்கட்டினார்கள் அதில்முத்துமாலைகளைத் தொங்கவிட்டார்கள் ஆகாயகங்கைகொண்டுவந்து பூரணகும்பம்வைத்தார்கள நூதனமாகியஇரத்தினவிளக்குகள் ஏற்றினார்கள் பிரமலோகமும் வைகுந்தமும் இதைப்பார்த்துநாணும்படிச்சிங்காரித்தார்கள்-எ-று. (௬௬)

மணிவிளக்கனையமின்னை மலையரமகளிர்கூடிக்
கணிமலர்க்கங்கையாட்டிக் கலையினான்மருங்கைகூட்டிப்
பணிமலியாரமபூட்டிப் பரிமளத்தாமஞ்சூட்டி
யணிநுதற்றிலகந்திட்டி யருமறைச்சடங்குசெய்தார்.

(இ-ள்.) இரத்தினதீபம்போன்றேபார்வதியை மலையிலிருக்கிற பெண்கள்கூடிக் கற்பகமலர்வாசனைசேர்ந்த கங்காசலத்தினாலே ஸ்நானஞ்செய்

வித்து இடுப்புத்துவளும்படி சேலைகட்டி ஆபரணங்களும்முத்துமாலையும்பூட்டிப் பரிமளம்பொருந்திய நறுமலர் மாலைசூட்டி அழகியநெற்றியிலேதிலதப்பொட்டணிந்து வேதவிதிப்படிச் சடங்குசெய்தார்கள்-எ-று.

பூமணக்கோலஞ்செய்த பொடியணிபுனிதனுனைத்
தாமணக்கோலஞ்செய்யச் சதுர்முகன்முதலோரீண்டித்
தூமணித்துகிலகளசாத்திச் சுரர்தருமாலைசாத்தி
மாமணிப்பணியைநீக்கி மாமணிப்பணிகள்பூட்டி.

(இ-ள்) வாசனைபொருந்திய புட்பபாணங்களையெய்த மாரனை நெற்றிக்கண்ணலெரித்து அப்புட்பத்தைப்பூசிய சுத்தராகியபரமசிவனை மணக்கோலஞ்செய்யும்படியாகப் பிரமன்முதலானவர்கள் கூடிப் பரிசுத்தமாகியஇரத்தினமயமாகிய வஸ்திரஞ்சாத்திக் கற்பகப்பூமாலை தரித்து முன்னேயிருந்த சர்ப்பாபரணத்தைக்கழற்றிப்போட்டு மாணிக்கரத்தினங்களாகிய ஆபரணங்களைதரித்தார்கள் எ-று.

சடையிளம்பிறையைத்தங்க ளிறையெனத்தகைந்துசூழ்ந்த
உடுகுலமெனமுத்தா லொளிவிடுமகுடஞ்சூட்டி
அடைவுடன்விழியாந்திங்க ளாதவர்காதின்மீது
குடியிருந்தனபோற்செய்ய குண்டலமிரண்டுஞ்சாத்தி.

(இ-ள்.) சுவாமியினது சடையிலேதரித்த பிறையைப்பார்த்துத் தம்முடையபுருஷனென்று சுற்றிக்கொண்ட நட்சத்திரக்கூட்டங்கள்போல முத்துக்கள்பிரகாசிக்கின்ற சந்திரசூரியரிருவருங்காதினிடத்திற் குடியிருந்தாற்போல அழகாகியஇரணடுகுண்டலங்களைச்சாத்தினார்கள்-எ-று.

வரம்பெற்றுதிருமால்சாத்து மலர்விழிக்கரியசோதி
பரம்பியகனையநீலம் பருமணிச்சிலம்புசாத்தி
விரும்பியகோலஞ்செய்தா ரிறையுமால்விடைமேற்கொண்டா
ராம்பையர்நெருங்கித் தண்ணீராஞ்சனங்காட்டினார்கள்.

(இ-ள்) விஷ்ணுவரம் பெற்றுக்கொள்வதற்காகத்தம்முடைய கண்களிலொன்றைப் பாதத்திற் சாத்தினரோ அந்தக்கண்ணினது கறுப்புசோதிகாலைச்சுற்றிப்பரவினதுபோல நீலமணிகளாலிழைத்த சிலம்பைத்தரித்து சர்வத்ராளும்விரும்பத்தகுந்த அலங்காரஞ் செய்தார்கள் பரமசிவனை விஷ்ணுயுருவமாகிய ரிஷபத்திலேறினர் அப்பொழுது அரம்பாஸ்திரிகள் மஞ்சளாலாத்தியெடுத்தார்கள்-எ-று. (எ௰)

குளவுமாலணுகிப்போற்றக் குமுதவாய்மலர்ந்தான்கஞ்ச
மலரினன்வணங்கச்சற்றே மணிமுடியசைத்தான்விண்ணோர்
தலைவனொடிர்நின்றேத்தத் தனிநகைபுரிந்தான்றேவர்
பலரும்வந்திறைஞ்சியேத்த வவர்க்கெலாம்பார்வையீந்தான்.

(இ-ள்.) விஷ்ணு சுவாமியின் முன்னேவந்து வணங்க செவ்வாம்பற்பூப்போனுந் திருவாய்மலர்ந்துவாருமென்றார் தாமரைப்பூவிலிருக்கின்றபிரமன்வந்து நமஸ்கரிக்கச் சற்றே இரத்தினகிரீடமிழைத்த திருமு

டியையபனசத்தார் தேவேந்திரன் வந்தனஞ்செய்யப் புன்சிரிப்புகொண்டார் மற்றதேவர்களெல்லாரும்வந்து வணங்க இருளைக் கண்ணாலே பார்த்தருளினார்-எ-று. (எக)

கலித்துறை.

முடித்தகங்கையாற்பிறைக்கொழுந்தெழுந்துமேன்முகைத்து
வடித்ததாமெனத்தவளவான்கவிகைமேல்விளங்க
வடித்தகங்கையினருவியும்புலிக்கொழுந்துந்
தொடுத்துவீழுமாறெனவிருசவுரிகடுங்க

(இ-ள்.) சடையிலேவைத்தகங்காசலத்திலே பிறையானதுகொழுந்துவிட்டு அரும்பாகிப் புட்பித்ததென்றுசொல்லும்படியாக வெள்ளைவட்டக்குடை பிடிக்கவும் அலையடிக்கின்றகங்கையினருவியும் சந்திரனும்சேர்ந்துவிழுகனபோலும் இரண்டுசாமரம்வீசவும்-எ-று. (எஉ)

திருவினையகனடப்பைகொண்டொருபுறஞ்சேரத்
தருவினையகன்களாஞ்சி கொணடொருபுறஞ்சார
விரவிநான்முகனாலவட்டங்கொடுவீசப்
பரவிநாரதர்தும்புருவிருபுறம்பாட

(இ-ள்) இலட்சுமிநாதராகியவிஷ்ணு பாக்குவெற்றிலை முதலானவைவைத்திருக்கிற அடப்பையெடுத்துக்கொண்டு ஒருபக்கம்வரவும் கற்பகத்தருவிற்குநாதனாகிய தேவேந்திரன் படிக்கம்எடுத்துக்கொண்டுவரவும்பிரமன்சமீபத்தில்நின்று ஆலவட்டம்வீசவும் தும்புருநாரதரிருவரும் வந்தனஞ்செய்து இருபுறத்திலுமநின்று சங்கீதம்பாடவும்-எ-று. (எங)

கூற்றனனவன்கனகபா துகைகொடுகுறுகக்
காற்றுவேந்தனுந்திசை யெலாநறும்புகைகாட்ட
வேற்றுவாகனக்கடவுளுஞ்சிறியவாளெடுப்பத்
தோற்றுமாதவர்தலை மதிவிளக்கொடுஞ்சூழ

(இ-ள்) எமன் தங்கததினாற்செய்திருக்கிற பாதக்குறடுகளைக் கையாலெடுத்துககொண்டுவரவும வாயுபகவான் திக்குகளெட்டிலும் அகிற்புகை சாம்பிராணிப்புகை காண்பிக்கவும் ரிஷபததிலேறுகின்ற ஈசானன் உடைவாளெடுத்துக்கொண்டுவரவும் சூரியர்களநேகருமசந்திரரநேகரும் விளக்கெடுத்துக்கொண்டுவரவும எ-று. (எச)

சுரமடந்தையர் துகிலின்மஞ்சிகைபலசுமப்ப
வரவமங்கையர்நவமணிப்பணிசுமந்தணுகப்
பரவுகின்னரர்முதலினோர்வீணையார்ப்பரிக்கப்
பொருவினுன்மறைநடந்திறைதலைமையைப்புகழ

(இ-ள்.) தேவகந்நியர் அநேகர் வஸ்திரம்வைத்திருக்கிறபெட்டிகளைத் தூக்கிக்கொணடுவரவும் நாகலோகப்பெண்கள் நவமணிகளிழைத்தி

கிற ஆபரணங்களைச்சுமந்துகொண்டு வரவு கின்னரர்கிம்புருடர்வீணை வாத்தியஞ்செய்யவும் நான்குவேதங்களுஞ்சமீபித்துச சுவாமி எல்லாருக்கும்பெரியவனென்று புகழ்ந்து முறையிடவும் எ-று (எ௫)

கிரகமேழுமெண் வசுக்களுமுனிவருங்கிளா
வரகர்விஞ்ஞைசயரிமையவர்மகிழ்ந்துகண்டுருக
விருகரங்களாலுருத்திரர் மலர்மழையிறைப்பத்
திருவும்வெண்கலைமடந்தையுமிமசலந்தெளிப்ப

(இ-ள்.) சந்திரர்சூரியர்இருவருந்தவிர மற்றயேழுகிரகங்களும்அஷ்டவசுக்களும் முனியீசுரர்களுங் களிகூர்ந்துவர நாகலோகத்தார்வித்தியாதரர்களும் தேவர்கள்பார்த்துச் சந்தோஷத்தை யடைந்துஉருக ஏகாதசருத்திரர்களும் இரண்டுகைகளாலும் புட்பங்களைவருடமாக விறைக்க இலட்சுமியும சரஸ்வதியும்-பந்நீர்தெளிக்கவும-எ-று. (எ௬)

திக்குப்பாலகர்தெரிவையாதிசைதொருந்திகழ
மிககமாதர்களெழுவருஞ்சோபனம்விளம்ப
விக்குநேர்மொழிநீரமகளிர்வாழ்த்தெடுப்பத்
தக்கவிஞ்ஞைசயர்மகளிர்பல்லாண்டிசைவழங்க

(இ-ள்.) திக்குப்பாலகர்களுடையதேவிகள் அவரவர்கள் திசைகணினின்றுசேவிக்கவும் சத்தமாதர்கள்சோபனம்பாடவும் கருப்பஞ்சாறுபோல்மாதுரியம்பொருந்தியவார்த்தைகளுடையநீரரமகளிர் வாழ்த்துச்சொல்லவும் தகுந்தவித்தியாதரர்கள் பல்லாண்டுகூறவும்-எ-று. (எஎ)

கண்டைபேரிகைகுடமுழா காகளந்துவைப்ப
வண்டமல்லரிசல்லரிவலம்புரியொலிப்ப
வண்டகோளகைமடந்தையர்சிலம்பொலியதிர்ப்ப
வெண்டிசாமுகந்தனிலுமென்பிரம்பொலியிசைப்ப.

(இ-ள்.) மணியோசையும் பேரிகை குடவாத்தியம்-மத்தளவாத்தியம் காகளம்சப்திக்கவும் மல்லரி-சல்லரி-சங்கங்கள் கோஷிக்கவும் தேவப்பெண்கள்காலின்சிலம்பு கலீரென்றுசபதிக்கவும் எட்டுத்திக்கிலும் நந்திதேவர்வருகிறகூட்டங்களைவிலக்க அடிக்கிறபிரம்பினது சப்தம்பிரகாசிக்கவும்-எ-று. (எ அ)

எண்ணும்வெள்ளியாம் வரையடியிறங்கியபிடட
மண்ணல்சேனையின் கொழுந்திமகிரித்தலமடைந்த
விண்ணுமண்ணுமெள்ளிடமறநெருங்கியவிமானம்
மண்ணுமால்விடைநெறிகடந்தடைந்ததுபதியே

(இ-ள்.) யாவராலுந்தோத்திரஞ்செய்யப்பட்ட கைலாயகிரியடிவாரத்தில் ரிஷபவாகனமிறங்கியது சுவாமியினுடைய சேனையின் முன்னணிஇமையபர்வதத்தையடைந்து ஆகாயமும்பூமியும் எள்ளிருக்கவிடமில்லாமல் விமானங்கள்நெருங்கின அலங்காரத்திருக்கின்றவிஷ்ணுவாகியரிஷபம் சுவாமியைத்தூக்கிக்கொண்டு வழிமுழுதுங்கடந்து இமயபர்வதராஜன்பட்டணத்தில்வந்துசேர்ந்தது-எ-று. (எ௯)

இமகிரிப்பதியடைந்தது மிமகிரிமடவார்
விமலனார் திருவழகெலாம் விழிகளானினைக்கா
ருனைமதவத்திலுக்கழிவிலே யெனப்புகழ்ந்துரைத்தா
ரமர்செய்காமனையழித்தகண் ணெதுவெனவுரைத்தார்

(இ-ள்.) அப்படியே சிவன் இமயபருவதத்திலே எழுந்தருளினபோது அந்தமலையிலிருக்கிறபெண்கள் சுவாமியின் அழகைப் பார்த்துப்பார்வதிசெய்ததவத்துக்கு ஒருகுறைவுமில்லாமல் பலன்சித்தியாயினதென்றார்கள் அவர்களில்யுத்தத்துக்கு வந்தமன்மதனையெரித்தகணெதுவோ அந்தக்குருடமான கண்ணைப்பார்ப்போமென்பார்கள்-எ-று. (அய)

ஆகமாரனிங்கிருக்கவு முலகெலாமயர்ந்த
யோகமீதிவரிருக்கை யான்மகனுடலொழித்துப்
போகமீதிவ விருப்புற வுயிரகவைபுணர்க்க
மோகமாக்கிமே கலவ ரெனசிலர்மொழிந்தார்

(இ-ள்) மன்மதன் தேகத்தையுடையவனாயிருந்தபோது இவர்யோகத்திலேயிருந்ததினாலே உலகத்திலுள்ளசனங்களெல்லாம் விகாரமில்லாமல் அசந்துகிடந்தன மன்மதன் தேகம்போயும் இவர்போகத்திலேவிருப்பம் உண்டானபடியினாலே சகலருக்கும்போகத்தி லாசையுண்டாச்சுது ஆனபடியினாலேமோகத்தையுண்டாக்கிறவர் இந்தசிவனேயன்றிவேறொருவருமில்லையென்று ஸ்திரீசனங்கள்சிலர்சொன்னார்கள்-எ-று (கஉ)

மாயவிற்கைவேளழகிவ ரழின்மிகுவடிவி
லாயிரத்திலொன்றிலையெனத் தனைமதிக்கவனைத்
தீயிடத்துடல்கொளுத்திய தவத்தினாற்றிறமே
யாயுமுத்தமராழிப்பரோ வெனச்சிலரறைந்தார்

(இ-ள்) மாயனுசெய்கின்ற கருப்புவில்லைக்கையிற் றரித்திருக்கின்ற மன்மதன அழகு இந்த சுவாமியினுடைய வடிவமாகிய அழகில் ஆயிரத்திலொருபங்கு காணாது அதனாலே அவனை இகழ்ந்துதன்னைமதித்தாத்தியினாலே அவனைக்கொளுத்திப போட்டதுதபோமகிமையினாலேயே ஆராய்ந்தெதிக்கத் தகுந்தஉத்தமர்கள் ஆனால் அப்படிச்செய்வார்களோவென்று சிலமாதர்கள்சொன்னார்கள்-எ-று (அஉ

மாதுலன்பெருங்கிளைஞரு மருசனார்திரளும்
காதலன்பினலெதிரெதிர் தழுவினர்கலந்தா
ராதியந்தமுமகனிலை யளவிடவரியோன்
வேதியன்கரம்பிடித்தினி திழிந்தனன்விடைமுன்

(இ-ள்.) மாமனாகியபர்வதராசன் சுற்றத்தார் முதலியசேனைகளும் மருமகனாகிய பரமசிவத்தினுடைய சேனைசமூகமுமிகுந்த ஆசையோடேகூடினவர்களாய் எதிரெதிராகவந்துஒருவர்க்கொருவராகத் தழுவிக்கொண்டார்கள் முதலுமீறு மில்லாதஅளவிடப்படாதசிவபிரான பிரமனையைப் பிடித்துக்கொண்டு ரிஷபவாகனத்தில் நின்று இறங்கினார்-எ-று

இலகுமங்கையரனேகர்நீராஞ்சனமெடுப்ப
வுலகபாலகரிருமருங்கினுநடந்தொதுங்கத்
திலகமாகவனிருகைமேலொருகரஞ்சேர்த்திட்
டலகிலாமணியிழைத்ததோர் மணடபத்தணைந்தார்

(இ-ள்) இப்படிசுவாமிரிஷபவாகனம்விட்டு இறங்கினவுடனே அழகுள்ளஅனேகம்பெண்கள ஆலாத்திஎடுக்கவும் அஷ்டதிக்குப் பாலகரொட்டுபேரும் சுவாமியினிருபுறத்திலும் நடந்தொதுங்கிவரவும் எல்லாருக்குந் திலகமாகிய விஷ்ணுவினுடையஇரண்டுகைமேலும் தம்முடையவொருகையைச்சேர்த்துக்கணக்கில்லாதரத்தினங்களாலிழைக்கப்பட்டிருக்கினறமண்டபத்தில்வந்துசேர்ந்தாகள்-எ-று (அச)

அரியமணடபத்தமைந்த பீடிகையின்மீதமைந்தார்
வரையிடப்பிறந்தமை வளர்புலைசெல்வநவார்
குருமலர்க்கையிலேந்திவந் தருள்குடியிருக்கும்
திருமுகத்திமையிறைவன் வலப்புறஞ்சேர்ந்தார்

(இ-ள்.) சுவாமிஅருமையாகிய அந்தமணடபத்தில் இட்டிருக்கிற ஆசனத்திலெழுந்தருளினார் தனங்கள் மலைபோலே யிருப்பதனால் அந்தத்தனங்களை இவர்கள்மலைமேலேபிறந்தார்களென்றுகாண்பிக்கும்படியாக வருகிறமாதர்களுடையநிறம் புட்பம்போலும கைகளிலேந்திக்கொண்டு கிருபையே குடியாகவிருக்கின்ற அழகிய முகத்தையுடையபார்வதியைச்சிவனுடையவலப்புறத்திலே உட்காரவைததார்கள்-எ-று. (அரு)

முன்னையாரணன்றுவையின் சடங்கெலாமுடித்து
வனனிமேற்பொரியிறைந்தநெய் சொரிந்துமந்திரத்தா
லென்னையாளுடையயிறைவனுமேழுலகீன்ற
கன்னிசெங்கரமபிடித்து மூவலஞ்செய்தான்கனலை

(இ-ள்.) இந்தப்பிரகாரம்சுவாமியும அம்மனும்கலியாண மணடபத்திலெழுந்தருளியிருக்க அந்தவேளையில்பிரமன் கலியாணச்சடங்கை விதிப்படி டிக்க என்னையாட்கொண்டபரமசிவன் அக்கினியிற்பொரியிறைத்து நெய்பாகுதிசெய்து முன்னமேஏழுலகத்தையும்பெற்ற அம்மையையைப்பிடித்து அக்கினியைமூன்றுதரம வலமாகச்சுற்றிவந்தார்-எ-று. ()

ஒற்றைவால்வளையொலித்த சுருதியுமொலித்த
சுற்றும்வானவரிருடியர் மலர்மழைசொரிந்தா
பற்றியாசனத்திருந்தன னவருமபணிந்தார்
பெற்றதாயையோடன்னையைப் பணிந்தனள்பெதும்பை

(இ-ள்) வெண்மைபொருந்திய ஒப்பற்றசங்க முழங்கவும்நான்குவேதங்களும் சப்திக்கவும நான்குபுறமும சுற்றிக்கொண்டுதேவர்களும் ரிஷிகளும புஷ்பமாரியைப் பொழியவும் சுவாமி ஒருஆசனத்தில்எழுந்தருளினார்அப்போதுசர்வத்திரபேருமவந்தனஞ்செய்தார்கள் பார்வதியானவள் தன்தாயையுந்தகப்பனையும வணங்கினாள்-எ-று. (அஎ)

எரித்தகாமனைக் கருதியென் றிமையவராய
லொருத்தரின்றியேயிறையவன் மகிழ்ச்சிகண்டுரைத்தார்
மரித்தகாமனையழைத்தருள் புரிந்தனன்வள்ளல்
பெருத்தவன்பினலனைவரும் விடைகொடுபெயர்ந்தார்,

(இ-ள்.) தேவர்களும்பிரமனும்விஷ்ணுவும் மற்றயாவரும்சுவாமியெல்லாரிடத்திலும வைத்த பிரியத்தைப்பார்த்துச்சுவாமீ நீர்முன்னே எரித்தமன்மதனை எழுப்பித்தரவேண்டுமென்றுகேட்டார்கள் அப்படியேஇறந்துபோனமன்மதனைவரவழைத்துக்கொடுத்துக்கிருபைசெய்தார் பரமசிவன் பின்புயாவரும்விடைபெற்றுக்கொண்டுபோனார்கள்-எ-று.

அதற்பினண்ணலுங் கவுரியுமுருகியொன்றாகி
மதக்கயானனைக் குமரனைப் பயந்தனர்மகிழ்வாய்
விதிக்கவேலினைக்குமரனுக் களித்திறைவிடுத்தான்
கொதிக்கதாருகனுயிர்குடித் துவந்தனன்குமரன்.

(இ-ள்.) அப்படியேதிருக்கலியாணம் நடந்தபின்பு சுவாமியும்அம்மையுமிருந்த அன்புகொண்டொருருவமாகிச்சேர்ந்துவிளைபொருந்தியயானைமுகத்தையுடைய விக்கினேசுவரையும் சிவசுப்பிரமணியரையும் பெற்றார்கள் அதன்பின்புசுவாமி சிவசுப்பிரமணியருக்கு ஒருவேலாயுதத்தை அருளிச்செய்தனுப்புவிக்க அவர்போய்அந்தத் தாருகாசுரனை வேலாயுதத்தால்விட்டெறிந்துகொன்றுசந்தோஷத்தையடைந்தார்குமாரசுவாமி

மயிலெனத்திகழ்மலைமகள் பொருகறிவதன
னயிலெடுத்தசெங்கரனுட னிமையவெற்பகன்று
கயிலைவெற்பில்வந்திமையவர் முனிவர்கண்களிக்க
வெயிலுடைப்புரமெரித்தவ னிருந்தனனப்பால்.

(இ-ள்.) மயில்போல்விளங்குகின்ற பருவதராஜன்மகளாகி ஸ்ரீபார்வதியானைமுகத்தையுடைய பிள்ளையார் வேலாயுதத்தைத்தரித்த சிவசுப் பிமணியருடன் இமையகிரியை விட்டுநீங்கித்தேவர்கள்முனிவர்களுடைய கண்கள்கூரக் கைலாயத்தில் எழுந்தருளியிருந்தார் முப்புரத்தையெரித்தவராகிய பரமசிவன் அதன்பின்பு-எ-று.

மூன்றாவது-திருவவதாரச்சருக்கம்.

முற்றிற்று

(-*-)

ஆக திருவிருத்தம்-௨௫௪.



உ

சிவமயம்.

நான்காவது

# திருக்கண் புதைத்தச்சருக்கம்.

———— () ————

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மின்னனையமுகிலுழுமிமயகிரியின்றபோபலத்தான்மேனையானவ
ன்னையிடத், தென்னவனையவதரித்தகதைசிறிதே யறைந்தேனிப்பால்
பொன்னனையசடையிறைவன் றிருநயனமிருகரத்தாற்புதைத்தவாறுந்,
தென்னருணைமாநகரி லன்னைவினை தீர்த்ததுவுஞ் செப்பலுற்றேன்.

இ-ள். மின்னல்பொருந்திய மேகங்கள் தவழ்ந்துபோகின்ற இமய பருவதத்தின் தபோபலததால் மேனாதேவியிடமாக என்தாயாகியபார்வதி அவதரித்தகதையிலே கொஞ்சந்தானசொன்னேன் அப்பார்வதி பொன்போலுஞ சடையுடைய சிவனது அழகியகண்களை இரண்டுகைகளினாற் பொத்தியதும் அதனால்வருமவினையைத்தெற்கினகண்ணிருக்கிற அருணாசலத்தில் அமைபூசைசெய்து தீர்த்ததும் சொல்லத்தொடங்கினார்-எ-று.

ஊடுவர்புலவிதீர்ப்ப ரொருவருக்கொருவர்மாலை
சூடுவர்மறைநூல்கேட்பர் சொல்லுவர்வீணைநாதம்
பாடுவர்பலவிநோதம் பயிற்றுவர்பலகாற்சூத
மாடுவர்வெல்வர்தோற்ற ரணிகலம்புனைவரன்பால்.

இ-ள், சிவபிரானும் பார்வதியும் பிணங்கிக்கொள்வார்கள் அதைமறுபடியும் தீர்த்துக்கொள்வார்கள் ஒருவருக்கொருவர்மலைகளைச்சூடிக்கொண்டு வேதசான்திரங்களைக்கேவர்கள் முனிவர்கள் சொல்லக்கேட்டும் அதன்பொருளைச சிலருக்குச்சொல்லியும் வீணைமுதலியவற்றை வாசித்தும்மற்றும்பலவிளையாட்டுகள்செய்தும்பலகாம்சூதாடியும் அத வெற்றியையும் தோற்பையுமடைந்தும் அழகிய ஆபரணங்களைத்

## திருக்கண்புதைத்தசருக்கம்.

அந்தவேளையிலென்னன்னை யையனையிறைஞ்சியையா
விந்துவிமிரவிதாலும் யாவரென்றிசைத்தானத்தை
சுந்தரக்கனிவாய்மின்னே சுடர்களெம்மிருகணென்றார்
சந்தனைப்பயந்தாளீசன் விழிகளைப்புதைத்தாள்கையால்.

இ-ள். அச்சமயத்தில் என்தாயாகிய பார்வதி சுவாமியையவணங்கிஐ யாசந்திரர் சூரியர்களியாவரென்றுகேட்க அதற்குச்சுவாமி அழகியக னிபோலும் வாயையுடையபெண்ணே அந்தஇருவரும் நம்முடையக ண்களென்றுசொன்னார் சிவசுப்பிரமணியரைப்பெற்றதாயானவள்கே ட்டு வேடிக்கையாகச் சுவாமியினுடைய கண்களை இரண்டுகைகளால் மூடினாள்-எ-று.

ஈசனார்விழி புதைத்தலுமிருட்பிழம்புருக்கிப்
பூசினாலென விருண்டனதிசைகளும்புவியி
மாசினீலமால் வரையெனக்கருதியமலைகள்
காசுலாவிய நதியெலாம்யமுனைபோற்கறுத்த.

இ-ள். பரமசிவத்தின்கண்களைப் பார்வதிபுதைத்தலும் இருட்கூட் டத்தையுருகச்செய்து பூசினதுபோல்திக்குகளும் பூமியுமிருண்டது மலைகளெல்லாம் குற்றமற்ற நீலகிரியைப்போல் கறுத்தது மணிகள் பொருந்தியநதிகளெல்லாம் யமுனாநதிபோல்கறுத்தது-எ-று.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மறையவனுநாரணனு முனிவர்களும்வசுக்களும்நான் மறையும் வானோ, ரிறையவனும்விழியொளிபோய் பிறவிநெடுங்குருடரெனவிரு ந்தார்மற்றைக், கறவைநிரைமுதல்விலங்கு பறவைகளுமொளியிழந்த கண்ணகான, துறவறமும்பிறவறமுந் தொலைந்தனமற் றுளதொழிலு ந்தொலைந்த தன்றே.

. இ-ள். பிரமனும், விஷ்ணுவும், அஷ்டவசுக்களும், நான்குவேதங்க ளும், தேவர்களும், இந்திரனும் கண்கள்பிசகாமற்றுப் பிறவிக்குருட ர்போலிருந்தார்கள் பசுக்கள்முதலிய மிருகங்களும் பக்ஷிகளும் கண் ணொளியற்றன துறவறமில்லறமிரண்டும் ஒழிந்தன மற்றஎல்லாத்தொ ழில்களும் கெட்டது-எ-று.

கலிநிலைத்துறை.

தேவர்மானிட ரிராக்கதர்நிறமெனத்திரிந்தார்
கோவிலிந்திரன் வெண்கரிகருநிறங்கொண்ட
தாவிலம்புயன் கொடிகொடியானதவ்வளவின்
மூவர்தேவனுக்கள வறுமுறைசொலிப்புகன்றார்.

இ-ள். தேவர்களும் மனிதர்களும் ராக்ஷதர் நிறம்போலகறுத்த ஆகாயத்தில் இந்திரன்வாகனமாகிய வெள்ளையானைக்கரிபோலக்கறுத்தது கெடுதலில்லாதபிரமன் கொடியாகிய அந்நம் காகம்போல் கறுகியது அப்படி எல்லாபொருளுங்கறுத்து மயங்குகிறகாலத்தில் மும்மூர்த்திகட்கு முதல்வனான சிவனிடத்தில் எல்லோரும்போய்முறையிட்டுத் தங்கள் குறையைச்சொல்லிக் கொண்டார்கள்-எ-று.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அஞ்சலெனவமைத்தகரத்திறைவனுதல்விழிதிறந்தானவனியேழுந்
துஞ்சிமிருளகன்றதுபன்னிருகோடி சூரியர்தமதோற்றம்போல
வஞ்சியுமையிறைவன்விழிபுதைத்திருக்கரமலரைவாங்கினின்றாள்
விஞ்சுமறையவர்வளர்க்குங்கனல்போலவிழிமூன்றும்விளங்கிற்றன்றே.

இ-ள். சிவபிரான் பயம்வேண்டாமென்று கையமைத்துப் பன்னிரண்டுகோடிசூரிய ருதயம்போலத் தமதுடையநெற்றிக்கண்ணைத் திறக்கஏழுலகமும அந்தகாரத்தைநீங்கியது பார்வதிபொத்தியகையைவாங்கினாள் பிராமணர்கள் வளர்க்குமயாகாக்கினிபோல் மூன்றுகண்களும் விளங்கின-எ-று.

பார்புதைத்ததிருவயிற்றாய்பணிந்துரைப்பா நெடுஞ்சூலபடையகாலன்
மார்புதைத்தமலர்ப்பதத்தாயார்புதைத்தசடாடவியாய்வையமேழும்
கார்புதைத்தவிருளாகவிழிபுதைத்தகொடும்பாவங்கழலுமாறு
நீர்புதைத்தபாரிடத்திற்றவம்புரிதற்கானவிடநிகழ்த்துமென்றாள்.

இ-ள். எல்லாச்சீவராசிகளையும் கருவாகவைத்துக்கொண்ட வயிற்றையுடைய பார்வதிசுவாமியைப்பார்த்து கொடிய சூலத்தையுடையவரே எமனைமார்பிலேயுதைத்த மலர்போன்ற பாதங்களையுடையவரே ஆத்திமாலையை யணிந்த சடையை யுடையவரே ஏழுலகமும் மேகமிறைத்தலும் அதிகமான இருளுண்டாக உமது கண்களை மூடிய கொடியபாவம்போம்படி சமுத்திரஞ்சூழ்ந்த பூமியினிடத்தில் தவஞ்செய்தற்கு நல்லவிடஞ்சொல்லுமென்று கேட்டாள்-என்றவாறு.

ஈசனுமக்குறைத்தருளவானுனை வினைவந்தணுகாதேயெளியார்க்கும்
மாசகலும்படிக்கரியதவம்புரியவிரும்பினையேல் மதுரைமாயை
[illegible]சியவந்திதுவாரையயோத்தியிலுஞ்சிறப்புடையகாஞ்சிமேவிப் (றி

இ-ள். அப்படிபார்வதிகேட்கச்சுவாமி பெண்ணே உன்னைப்பாவம் வந்துசேராதாயினும் மற்றவர்களுக்குப்பாவம் நீங்கும்பொருட்டுத்த வஞ்செய்ய இச்சித்தாயானால் மதுராபுரி மாயாபுரி காசி அவந்திதுவா ரகாபுரி அயோத்தி அவைகளுள்சிறந்தகாஞ்சீபுரத்திற் போய்ப்பூசை யுடன் அரியதவஞ்செய் யென்றுசொல்ல சுவாமியைவணங்கி விடை பெற்றுக்கொண்டாள்-எ-று.

விசையமகள்குடையெடுப்பச் சயரிகருபொன்னடப்பைகொடுவி ரைந்து, மெவ்வகையுமணிக்கவரியிருண்டருந்ததியுங்கமலனியு மருகி ல்வீசத்திசையிலிளநிலவெறிக்கும், தரளமணிச்சிவிகையின்மேற்சென் றபோதுநசைபெருகுமறம் பெருகப்புனல்பெருகும்புகழ் கங்காநதி யைச்சேர்ந்தாள்.

இ-ள் பார்வதியம்மைவீரலட்சுமிகுடைபிடிக்க ஜெயலட்சுமிபொன் னடப்பந்தாங்கிச் சீக்கிரத்தில்வர இரத்தினங்களிழைத்த சாமரைக ளால் அருந்ததியும் இலட்சுமியும் இரண்டுபக்கங்களில் நின்றும் நாலுதிக்கிலுஞ் சந்திரனைப்போலப் பிரகாசம்வீசும் முத்துப் பல்லக்கிலேறி யாவரும் விரும்புகின்ற தருமம்பெருக சலம்பெறுகின் ஸகீர்த்தியினையுடைய கங்காதீர்த்தத்தில் வந்துசேர்ந்தாள்-எ-று.

இறந்தவுயிரினிமீளப் பிறவாசவிறவாமலிறைவனுரைகள், சிறந்தி ருவுருவாகுந் திருக்காசித்தலமடைந்து சிவன்றாள்போற்றி, வரநதம ழைக்குருகுமிந்த தலத்தவர்கள்பிழைக்கவரம் வளர்த்துப்பன்னாள், க றுத்தொடையினரசன்விடைகொண்டு நிறைபத்தொண்டைவளநாடுசே ர்ந்தாள்.

இ-ள், இறந்துபோனவுயிர் இனிதிரும்பப் பாக்காமலும் மிறக்காம லும் பரமசிவத்தினுடைய திவ்வியசொரூபமான காசிப்பதியைச் சேர்ந்து விசுவேசருடைய பாதம்போற்றி மழையில்லாமல் வருந்து கின்ற ஜீவராசிகள்பிழைக்கும்பொருட்டு அந்தலத்தில் தருமத்தைப் பலநாள் வளர்த்துத் தேன்தங்கியமலர் மாலைபைத்தரித்த அத்தேசத் தரசன் விடைபெற்றுநிறைத் தொண்டைமண்டலத்தை சேர்ந்தாள் பார்வதி-எ-று.

மழைந்தவழுந் தலைப்பலவின் பழமதுவாய் விரிந்தாலுமாகா, வ ழைப்பழமதுவாய் விரிந்தாலும் புதுமதுவாய்விரிந்தொழுகும் மழனை நீங்கிக், குழையளவுநடமாடும் விழிமாதர் நடமாடுங் குறிப்புநோக் கிப், பொழில்களின்மடமயில்க ணடமாடுந்திருக்காஞ்சிப் புரத்தை

இ-ள். மேகங்கள்தவழ்கின்ற தலையையுடைய பலாவினது பழங்கள் வாய்விண்டாலும் மகரவாழைப்பழங்கள் அளிந்தாலும் புதியதேன் பெருக்கெடுத்து வாய்க்கால்வழியாய் ஓடிவிழுகின்ற கழனிகளைக்கடந்து குண்டலம்வரைக்கும் தாவுகின்ற கண்களையுடையபெண்கள் காட்டியம்செய்கின்ற குறிப்பைப்பார்த்துச் சோலைகளிளமையாகிய மயில்கள் நடனஞ்செய்கின்ற காஞ்சிபுரத்தைச்சேர்ந்தாள்பார்வதி-எ-று.

தரவரத்தையழிவாக்கி மணிகளையுள்ள றிவழிக்குந் தடங்கண்மாதர், நூபுரத்தம்புயசரணஞ் சிவப்பேறவிழைமருங்கு னுடங்கவேறு, மாபுரத்தின்மணிமேடை யரம்பையர்க்குவிளையாட மலைகளாகும்,கோபுரத்தினெடுங்கொடிகள் காமவல்லியெனுங்கொடிக்குக் கொழுகொம்பாகும்.

இ-ள். கல்லுகளையு மரங்களையும் உருகச்செய்து மனிதர்களுடைய உள்ளறிவைக்கெடுக்கிற விசாலமாகிய கண்களையுடையபெண்கள்வெம் பணிந்த தாமரைமலர்போலும் பாதஞ்சிவக்க நூல்போலும் இடைவளையல் ஏறுகின்ற அப்பட்டணத்திலிருக்கும் இரத்தினமிழைத்த உப்ரிக்கை அரம்பைமுதலாகியபெண்கள விளையாடுதற்கு மலைகளாயிருக்கும் சிவாலயத்தின்கோபுரத்திற் கட்டியிருக்கிற கொடிகள் கற்பகவிருட்சத்திற்படர்ந்த காமவல்லிஎன்னுங் கொடிக்குப்படருகிறதற்கு கொழுகொம்பாயிருக்கும்-எ-று.

பாரதநாடகமாடுமயில்போலுங்கயிற்றுவழிப் பாவைபோலும்,சுரதநாடகமாடுந் துடியிடையார்கணவருடனாறுவரும்போது,மரகதாதிகளுறுத் தவிழ்ந்தமணிமேடையினும் வாரிவீச, வரதனுகாமான தன்றுமுதலின்றளவு மாழிதானே.

இ-ள். பாதநாட்டியமாடுகின்ற மயிலுக்குச் சமானமாகவும் கயிற்றுவழியாய் ஆடுகிறசிங்காரம் பொருந்தியபிரதிமைபோலவும் சுரதவிளையாட்டைச்செய்கிற உடுக்கைபோன்ற இடையினையுடைய பெண்கள்புருடர்களோடு படுத்துப்புரளும்போது மரகதமுதலிய ரத்தினாபரணங்களிறுக்ககோர்த்து அவ்வுப்பரிகையில்நின்று எடுத்து வீசி எறிய அவ்வாபரணங்கள் சமுத்திரத்திலே விழுந்ததினாலேதான் அது இரத்தினாகரம் எனப்பெயர்பெற்றது-எ-று.

அனையமருங்ககன்றலைஞ்சி யொருமாவின்கீழிருக்குமரனைப்போற்றிக் கனலனையவிகனைளையுநடுங்குவிக்கநடந்ததிருக்கம்பைமேவிப் புனையமணல்குவித்திலிங்கவடிவாக்கியுமைபூசைபுரிந்தாளப்பா தெனையுடையானவடத்தி னுறுதினினைந்தரியகங்கையேயினுனே.

இ-ள். அத்தன்மையை வீதியைக்கடந்து ஒப்பற்றமாவிருட்சத்தின் கீழ் எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதரைவணங்கி நெருப்பொத்த பாவங்கள்நடுங்கி ஓடிப்போகவருகின்ற கம்பாநதியருகேபோய் அலங்காரமாய் மணலைக்குவித்து இலிங்கரூபமாகிப் பார்வதிபூசைசெய்யும் போது எம்முடையசுவாமி அவள்தவத்தின் உறுதியை யறியக்கங்கைப் பிரவாகமாக வரச்செய்தார்-எ-று.

பூதலமேற்குறுமுனிவன் குண்டிகையிற்கவிழ்ந்துவரும்பொன்னி தானோ, ஆதியிலேயந்தமுனியாசமித்தேயுமிழ்ந்த வலைபாழிதானோ, ஏதமறத்தவம்புரியும்பகீரதற்காச்சன்னுமுனி யிரக்கத்தாலே,காதின்வழியொழுகவிடப் பரவியகங்காநதியை யோகம்பையாறு.

இ-ள். பூமியில் அகத்தியமுனிவர் கமண்டலங்கவிழ்த்ததனாலே வருகிறகாவேரியோ அந்தமுனியானவர் ஆதிநாளையில் ஆசமனஞ்செய்துஉமிழ்ந்தசமுத்திரத்தின் பெருக்கோ குற்றமற்றதவஞ்செய்யும் பகீரதனுக்காகச் சன்னுமுனியானவர் இரக்கத்தினாலே காதின்வழியாக விடப்பெருக்கெடுத்து வந்தகங்காநதியோவென்று சந்தேகப்பட விரிந்ததுகம்பைநதி-எ-று.

வேறு.

கங்காநதியின்மணலிலிங்கமழியாதிருக்கும்வகையுமையாள்வெங்
காதலினாலணைபவள்போல வெற்பாரிமையவெற்படன்
சங்காற்கரத்தாலிருதனத்தாலிறுகவிறுகத்தழுவுதலுக்
கொங்கார்களபத்திருமார்பு முருகியுருகிக்குழைந்தாளே.

இ-ள். பார்வதிகெடாத கம்பையாறுபெருக்கெடுக்கும்போது மணலாலேசெய்தஇலிங்கத்திற்கு அபாயமுண்டாகுமென்றுபயந்து காமங்கொண்டஆசையினாலே அணைபவள்போல் பர்வதராசகுமாரிவர்களையணிந்தகைகளாலும்இரண்டுகொங்கைகளாலும்இறுகவிறுகத்தழுவுதலும் வாசனைபொருந்திய சந்தனத்தையணிந்த திருமார்பு உருகிக்குழைந்தாள்-எ-று.

மனத்தானினைந்தபெருந்துயருமணக்காப்பிரிவுடன்றீரத்
தனத்தானெருக்கிமுகமழுக்கித்தலைநாட்போலத்தழுவுதலு
மனத்தால்விளக்கும்கம்பைநதியருணாசலத்தையொருபொழுது
நினைத்தாவினைகளிரண்டுபோலிரண்டாய்பகுத்துநீங்கியதே.

இ-ள். தன்னுடையதவத்துக்குப் பின்னம்வாராமல் நினைத்திருந்ததுன்பமும் சுவாமிகூடாமற் பிரிந்த துன்பமும் தீரும்படி ஸ்தனங்களிலே நெருக்கி முகமழுக்கி முன்னாள்போல அணைந்தவுடனே அன்னங்கள் சூழ்ந்தகம்பைநதியானது அருணாசலத்தை ஒருவேளை நினைத்தவர்களுடைய நல்வினைதீவினைபோ லிரண்டாகப்பிரிந்து இலிங்கத்தைகற்றிப்போனது-எ-று.

வேறு.

விடுத்தனளகரத்தைப்பாங்கர் விளங்கிழையவர்கள்சூழத்
தொடுத்தபூந்தொடையுஞ்சாந்துமணிந்தவள்தொழுதாளந்த
வடுக்கணாள்தனதுகேள்வன் மார்பிணைக்கொடாதுநாணித்
தடுத்திடுக்குறிகள்போல விளங்கியதழும்பாயம்பா.

இ-ள். பார்வதி சுவாமியைத்தழுவிய கைகளைவிட்டாள் அருகில்பிரகாசிக்கின்ற ஆபரணத்தையுடைய அனேகம்பெண்கள்சூழப் புட்பமாலையுஞ்சந்தனமுந்தரித்து வந்தனஞ்செய்தாள் வடுப்போன்றகண்களையுடைய அந்தமமைதன்னுடைய சுவாமிமார்பை மற்றபெண்கள்வெட்கத்தையடைந்து கொடாமலிருக்கும்படி தடுக்கவைத்த குறிகள்போல்தழும்புகள் விளங்கியதுகள்-எ-று.

அப்பொழுதரானுமாமனடித்தழும்பிருக்குந்தோளு
மூப்பொழுதிறைஞ்சுநதேவர் முடித்தழும்பிடிக்குநதோளு
மைப்பொலிகுழலாள்கொங்கை வளைத்தழும்பிருக்குமார்வு
மெய்பபொலிநீறுமாகத்தோன்றினார்விடையினமீது.

இ-ள். அககாலத்தில் பரமசிவன் பாண்டியராசன் அடித்தழும்பிருந்த திருத்தோள்களும் மூன்றுகாலத்திலும் வணங்குகின்ற தேவர்களுடைய கிரீடங்களில் தழும்பிருநத திருவடிகளும் மேகமபோல்விளஙகும் கூந்தலையுடைய பார்வதிமுலைத்தழும்புமவளைத்தழும்புமிருககின்ற மார்பும் தேகத்தில்பொலிநத திருநீறுமாய ரிஷபவாகனத்தில் எழுநதருளினார்-எ-று.

அந்தரத்தமரரெல்லாமலர்மழைசொரியவானிற்
றுந்துமிமுழக்கத்தோடே சுருதிகண்முழங்காநின்ற
விந்திரன்றிருமாறேவரிறவியைத்தொழுதுநின்றார்
சுந்தரககனிவாய்மின்னேயீசனைததொழுதுநின்றாள்

இ-ள் "ஆகாயத்தில் தேவர்களியாவரும் புட்பவருஷம்பொழியத்தேவதுந்துமி முழககததோடு வேதங்கள் முழஙகின தேவேந்திரனும்விஷ்ணுவும தேவர்களும் பார்வதியையத்தொழுதார்கள அழகியகனிபோலும் வாயையுடைய அம்மையும்பரமசிவனைவணஙகினாள்-எ-று.

ஒண்ணுதல்விடைமுன்சென்றுபணிந்துளமுருகிபபூசை
பண்ணுதல்புகழ்சலாகிப் பணிந்தனளவளைநோககிக
கண்ணுதலுனககுவேண்டும் வரமதுகழறுவென்று
னெண்ணுதல்பிறிதொன்றில்லையிடப்புறந்தருதியென்றாள்.

இ-ள். விளங்குகின்ற நெற்றியையுடைய அம்மை ரிஷபவாகனத்தின் முனபாகச்சென்று நமஸ்கரித்து மனமுருகிப்பூசைசெய்து புகழ்ந்து வணங்கினாள் சுவாமி பார்வதியைப்பார்த்து உனக்குவேண்டிய வரம் யாதுசொல்லென்றார் அதற்கு அம்மையும் யாதும் வேண்டிலேன் உமது இடப்பாகத்தை அருளுமென்றுகேட்டாள்-எ-று.

அத்தனுமொழிவானெங்கண் புதைத்தாலடைந்ததீமை
இத்தலத்தினியபூசை யியற்றலாலகன்றதிந்த
மெயததலந்தனக்குத்தென்பா லொழிநகர்விளங்கித்தோன்று
முத்திமாநகரந்தன்னை நினைத்தபேர்ககளிககுமுத்தார்.

இ-ள். அதற்குப்பரமசிவன் அருளிச்செய்வார் கண்களைமூடியதனாலே அடைந்தபாவம் இந்தக்கவத்தில் இனிமையான பூசைசெய்தலினால் நீங்கியது இந்தமேனமையான தலததுக்குத்தென்பாரிசத்தினால் ஒரு நகரம்பிரகாசிக்கும் அதைநினைத்தால் முத்தியுணடாம்-எ-று.

ஆரணன்றிருமாறேட வடிமுடியொளித்துஞானப்
பூரணவொளியாய்மேல் கீழெலெலாம்பொருந்திநிற்போர்
[illegible]ரணியவத்குமற்றைச் சயிலமாயிருப்போமங்கே
[illegible]யப்பாதத் தருளுவோமென்றுதியென்றார்.

(இ-ள்.) பிரமனும்விஷ்ணுவும் தேடப்பாதமும் சிரசும் அவர்களுக்குத் தெரியாமலொளித்துப் பூரணமாகிய ஞானவொளியாய் மேல்கீழுலகங்களெல்லாம் ஒன்றாய்நிற்போம் பூமிகளிலிருப்போர்க்கு மலையுருவமாயிருப்போம் அவ்விடத்தில் வந்தால் கச்சணிந்த தனத்தையுடையபெணணே இடபாகத்தைத்தருவோம் வாவென்றார் பரமசிவன்-எ-று

என்னலுமிறைவிசொல்வாளினிமைசேர்கயிலைகாசி
தன்னினுமினிதுகாஞ்சித்தலமெனவுரைத்தீரிந்த
நன்னிலந்தனக்குச்சோணநகரமேயதிகமென்றீர்
பின்னையுமுளதோவந்தத் தலத்தினுக்கிணையாம்பேரூர்

(இ-ள்.) பரமசிவன் அப்படித்திருவுளம்பற்றிய அளவில் பார்வதிசொல்லுவாள் இனிமைசேர்ந்த கைலாயங்காசியிவ்விரண்டு தலங்களினும் இக்காஞ்சிபுரம அதிகமென்று அருள்செய்தீர் அந்ததலத்துக்குச் சமானமான பெருமைபொருந்திய தலமவேறொன்றுண்டோவென்றாள் பார்வதி எ-று

அவ்வுரைமறுத்தெங்கோமானருணவனமக்கொப்பான்
தெய்வமைந்தெழுத்துமானத் திருந்துமந்திரமுமில்லை
சைவமேயனையதான சமயமுமருணைபோல
வெவ்வினைதவிர்க்குமூரு மிலையெனவிளம்பிப்போனார்

(இ-ள்.) அப்படிப்பார்வதிசொன்ன வார்த்தையைச்சுவாமிமறுத்து நமக்குச்சமான தெய்வமும் பஞ்சாட்சரத்திற் கொப்பானமந்திரமும் சைவத்திற்குச்சரியான சமயமும பொல்லாதபாவங்களைத் தீர்க்கும் அருணாசலத்திற்குச்சரியான தலமும உலகத்திலில்லையென்று திருவாய் மலர்ந்து கைலாயத்திற்கெழுந்தருளினார்-எ-று,

கோமளைபொறுப்பாயெனவிறைவனைக்குவித்துப்போற்றி
கம்பையாறகன்றுகாஞ்சித்தலத்தையுங்கடந்தவேலன்
தம்பிமான்முகத்தோன்கன்னி வயிரவாகணங்கள்சூழச்
செம்பொனாள்கவரிவீசச்சிவிகைமேற்சிறந்துசென்றாள்

(இ-ள்) புட்பக்கொம்பையொத்தபார்வதிசுவாமிநான் தெரியாமற்சொன்ன வார்த்தையைப்பொறுத்துக கொள்ளுமென்று இரண்டுகைகளையுங்குவித்துவணங்கிக் கம்பையாற்றை விட்டுக்காஞ்சிபுரத்தையுங்கடந்து சுப்பிரமணியர்கணபதி சத்தகன்னிகள் வயிரவர்சிவகணங்கள்சூழவும் இலட்சுமிகவரிவீசவும் பல்லக்கிலெழுந்தருளினாள்-எ-று. (உஎ)

மண்மகண்மகிழப்பட்ட மரங்களுந்தழைத்துவீறிக்
கணமலர்சொரியக்கல்லு மலைகளுங்கரைந்துசோர

வெண்மலர்மடவாள்போற்றக் காவதமிரண்டுநீங்கி
விண்மதிமுகத்தாள்மற்றோர் வெள்ளிடைமருங்கிற்சேர்ந்தாள்

(இ-ள்.) பூமிதேவிக்குச் சந்தோஷமுண்டாகப்பட்டுப்போனமரங்களும் தளிருண்டாகித் தழைத்ததேதுடும் புட்பங்களைச்சொரியப் பாறைகல்லுகளும் பெரியமலைகளுமுருகவெள்ளைத் தாமரைப்பூவிலவாசஞ்செய்யும சரஸ்வதி தோத்திரஞ்செய்யஇரண்டுகாததூரம்போய்ச் சந்திரனையொத்த முகத்தையுடையபார்வதி ஒருவெளியிடத்தி லிறங்கினாள் எ-று.

வெய்யவனுமையாரென்று வினவுகாரணத்தானீலக்
கையவனமரகதத்திற் கரியவள்காருங்காலுஞ்
செய்யவள்வருந்தினாளென்றறிந்துயிர்விதைப்பான்போலப்
வையமேற்கடலில்பாய்ந்தான் குமரவேள்பந்தல்செய்தான்.

(இ-ள்) சூரியன் தன்னையாரென்று பரமசிவனைக்கேட்டதனாலே நீலம்போனறகையும் மரகதம்போன்ற வடிவமும் தாமரைப்பூப்போன்ற உள்ளங்கையும உள்ளங்காலும்பொருந்திய அம்மைசாபத்தினால் வருந்தினாளென்றறிந்து தன்னுயிரைவிட்டு விடுகிறவன்போல மெள்ளமெள்ளமேற்குச்சமுத்திரத்தில் விழுந்து அஸ்தமித்தான சுப்பிரமணியர் அம்மையிருக்கிறதற்காக ஒருபந்தல்போட்டுவைத்தார் அத்தலத்தில் வாழைப்பந்தலென்று இக்காலத்தில் வழங்கிவருகின்றது.

அன்னையங்குதனைநோக்கியரம்டையாற்பந்தல்செய்து
மன்னிருகரமுஞ்சாலவருந்தினையெனப்பாராட்டிப்
பின்னுமோர்கருமஞ்சந்தி முடிப்பதற்கினியநன்னீர்
கைநிறைவேலையேவி யழைத்திடெனத்திடென்றாள்

(இ-ள்) அதன்பின்பு பார்வதி சுப்பிரமணியனைப்பார்த்து வாழைமரத்திலே பந்தல்போட்டுப் பன்னிரண்டுகைகளும் சிவக்க வருத்தத்தையடைந்தாயென்று பிரியவசனஞ்சொல்லி இன்னுமொருவேலையிருக்கின்றது அதுவென்னவென்றால் சந்தியாவந்தனஞ்செய்கிறதற்கு நல்லசலம்வேண்டும உன்கையிற்பிடித்திருக்கிற வேலாயுதத்தையேவி அழைப்பியென்றுசொனனாள்-எ-று.

காதலாவிறைஞ்சிக்கந்தனேவினன்கைவேலவ்வேல்
போதவான்புத்திராண்டன் புகழ்புருகூதனபோதன்
வாதிபாண்டரங்கன்சோமன் வாமனென்பவரைவாட்டி
மீதிலேழ்கிரியைவிட்டிக் கொணர்ந்ததுவேலைநீதம்

(இ-ள்.) அப்படிச்சொன்ன அளவில்அதிகபத்தியோடு சுப்பிரமணியர்வேலாயுதத்தையேவினார் அதுபோதவான புத்திராண்டன் புருகூதனபோதன் பாண்டரங்கன் சோமன்வாமன்எனறுசொல்லபபட்டஏழு பேரையும் அவர்களிருந்த ஏழுமலையையும்உருவிநல்லதண்ணீர்கடலுக்குப்போய்ச் சலங்கொண்டுவந்தது அந்தநதிக்குச்சேயாறென்றுபெயர்-எ-று.

கந்தவேளழைக்தவாற்றிற் கடனெலாங்கழித்துவாழைப்
பந்தலிலிருந்தாளப்போ துமைபதம்பணிந்துவாற்றிற்
கிந்துநீர்சிவப்பதேதென் றுரைத்தலுஞ்சிறப்பதாக
வந்தவாறதனையாறு திருமுகற்குரைப்பாள்வஞ்சி

இ-ள். சுப்பிரமணியர்வரவழைத்த ஆற்றிலேநீர்க்கடனெல்லாமுடித்துகொண்டு வாழைப்பந்தலிலிருந்தாள் அப்போது அம்மையை வணங்கிஇந்த ஆற்றுநீர்சிவப்பாயிருக்கவேண்டியதென்னவென்றுகேட்கவுந் தவிவரத்தைச்சுப்பிரமணியர்க்குச் சொல்லுகின்றாள்பார்வதி-எ-று. ()

அனங்கமாபுரத்திலேழு மறையவரறியாக்காலத்
தனந்தமாவினைகள்செய்தா ரதன்பினல்லறிவுதோன்றி
யனந்தமாமெனவேயேறு மயன்பதங்கருதிப்பன்று
ளனந்தமாலமதாயுட்கொண் டருந்தவமபுரிந்தாரந்நாள்.

(இ-ள்) அனந்தமாபுரமென்கிற பட்டணத்தில் ஏழுபிராமணர்கள் அறியாதகாலத்தில் அனந்த் தீவினைகளைச்செய்து அதனைபின்புநல்லறிவேகந்தோன்றி அநந்தமென்கிற அன்னத்தைதத்தனக்கு வாகனமாககொண்டபிரமனைக்குறித்துஇலைகளையேஉணவாகஉண்டுபலநாள்தவஞ்செய்தார்கள் அக்காலத்தில் எ-று. (௩௩)

பதிமனுவர்முன்சென்று பாவிகாள்வரைகளேழில்
விதிமுறைதவஞ்செய்வீரேற் குமரவேள்விடுக்கும்வேலாற்
பொதிசடைமுடியுமெங்கள் வினைகளுமபொடியாமென்று
சதுர்முகனுரைத்துப்போன னவருமத்தவமேசெய்தார்.

(இ-ள்) பிரமனே அவ்வேழுபேர் முன்னேபோய்பாவிகளேநீங்களேழுபேரும் ஏழுமலைகளிலே விதிமுறையாகத்தவஞ்செய்வீர்களானால் அப்போது அம்மைகுச்சலம்வேண்டியநிமித்தியத்தால் சுப்பிரமணியாவேல்விடுவார் அதனாலே உங்கள்சடையோடுங்கூடியசிரங்களும்பாவங்களும் பொடியாகப்போமெனறுசொல்லி விட்டுப்போனார் அவர்களும் அப்பிரகாரம் தவமசெய்தார்கள் எ-று. (௩௪)

வேறு.

ஏழுவரையமதிலிருக்கு மெழுவரையும்பிளந்துநீயெறிந்துகூர்வே, லழியும்வருதிரமுடன புனல்கலந்து சிவந்ததுகாணுமையாலே, வழுவிலையிங்குனக்கென்னவடிபணிந்து மகிழ்ந்திருந்தான் மலைமேற்பட்ட, செழுமுனிவர்குருதியினாற்சிவந்ததுபோற்சிவந்ததுவேசெக்கர்வானம.

(இ-ள்.) அவ்வேழுபேரையும்அவர்களிருக்கு மலைஏழையும் பிளர்தது உன்னுடையகூர்மைபொருந்திய வேலாயுதம் அதனால்வழிந்தொழுகுகின்ற அவர்களுடையஇரத்தத்தோடு சலங்கலந்துசிவந்துபோய்விட்டது உனக்கொருகுற்றமுமில்லையென்றுசொலல அம்மைபாதத்தில சுப்பிரமணியர் வணங்கிச்சந்தோஷமாயிருந்த அளவில்மலையிலேதவம்செய்து

ண்டிரந்தமுனிவர்களுடைய இரதத்தினாற் சிவப்புநிறத்தையடைந்தது போலச்சிவந்தது செவ்வானம்-எ-று. (கரு)

விந்தகர்கண புதைக்கமர பரந்த விருண்மறுமையிற் சூழ்வினை யைப்போல, வத்தலத்திலுமையவளைபின்பிடித்தாலெனப்பரந்தந்தகா ர, முத்தமியோசிறுகககலிப் பந்தலின்கீழிருப்பவளென்றும்பரிட்ட, கித் திலப்பந்தனை நிகரால்விளங்கியது தாரகையானெருங்கும்வானம்.

(இ-ள்.) சுவாமியினுடைய கண்களைமுன்னேகூடினதினாலேஉலகமெ ல்லாம் பரவியவிருள் ஒருவனுக்கு மறுமையில்வந்துபிடித்துக்கொள்ளு கிற பாவத்தைப்போல் அந்தத்தலத்தில் பிடகுவந்து அம்மையைப்பிடித் ததுபோலிருந்தது பார்வதியோரொருவரைமுப்பந்தலின் கீழிருப்பாளென் று தேவர்கள் நட்டுவைத்தமுத்துப் பந்தலொத்திருந்தது நட்சத்திரங் களால்நெருங்கப்பட்ட ஆகாயம எ-று. (கசு)

மாலையெனுங் குமரியிருண் மகிடமுகம் மதற்றியந்திவானச்சோரிக் கோலமுடன்படிகலிங்கங்கொண்டது போன்மதியெழுந்துகுடபாற்சென் று, தாலமணிமிடற்றினை தன்விழிபுதைக்க வளர்ந்தவிருளனைத்துநீங்கப் பாலமிசைவெடித்தெழுந்த விழியெனவேயெழுந்தது செம்பரிதிதானே,

(இ-ள்) மாலைக்காலமென்னும் துர்க்கைஇருட்டாகியமகிடாசுரன்தலை யையறுத்துஅதனால் செவ்வானமென்று சொல்லப்பட்டஇரத்தத்தோடு படிகலிங்கத்தைக்கைகொண்டது போலச் சந்திரனுதயமாகிய மேற்கு த்திக்கில் அஸ்தமித்தது நீலகண்டராகிய பரமசிவனை இரண்டுநேத்திரங் களையும்அம்மைபுதைத்தஅளவில்நான்குதிக்கும்பரவியயெல்லாவிருளு ம் போகும்படியாய் விழித்த அச்சுவாமியின நெற்றிக்கணபோலச்செம் மைநிறம்பொருந்திய சூரியன்கிழக்குத் திக்கிலுதயமானான். (கஎ)

வேறு.

கங்கைநிகராஞ்சேயாற்றிற்காலைசந்திக்கடன்கழித்து
மங்கைகனகச்சிவிகையின்மேன்மறையோலமிடவழிக்கொணடாள்
பங்கமலந்தீர்வழியடியார்கொடிய வினைபாம்பஞ்சுமலைக்
கங்கி மலையாய் விளங்கியசீரண்ணு மலைகண்டடிதொழுதாள்.

(இ-ள்) பார்வதிகங்கைக்குச்சமானமாகியசேயாறுளன்கிறநதியிற்காலை க்கடனைமுடித்துக்கொண்டு பொன்மயமாகிய பல்லக்கிலேறி வேதகோஷ ட முழங்கநடந்துபங்கப்படுத்துமும்மலங்களைதீர்க்கிறஅடியார்களுடை யபாவமாகிய பஞ்சுமலைக்கு நெருப்புமலையாய் விளங்கியதிருவண்ணாமலை யைப்பார்த்துசசாஷ்டாங்கமாகச சேவித்துக்கொண்டாள்-எ-று. ()

வென்றாயினூடகவர்ந்தபொருள் பகிர்ந்திறைவிபெலியாடும் வேனிற்பாலே, குன்றமெலாம் வெறியாடன்மூல்லையெலாம் பொதுவர்மின்னூர்குரவையாடன், மன்றல்கமழிந்திரற்கு விழாவெடுத்துக் கொண்டாடன மருதவெலி, மூன்றிலெலாஞ் சினற்சுரவ மூணனுணகியணங்காடு மூந்நீர்கானல்.

(இ-ள்) வல்லமையினாலே பாலைநிலத்தார் வழிச்செல்வோரை அடித்துப் பறிக்கபொருளைப்பங்கிட்டு அந்தனிலத்திலிருக்கிற துர்க்கைக்குப்பலிபோடுவார்கள், மலைகளையுடையகுறிஞ்சி நிலத்தில் இருப்பவர்கள் ஆடுபலிகொடுக்கிற பூசைபோடுவார்கள் முல்லைநிலத்தில் இடைச்சிகள் குரவைகூத்தாடுவார்கள், கற்பகமாலையைத்தரித்த தேவேந்திரனுக்கு மருதநிலத்தார் உற்சவஞ்செய்வார்கள் முற்றங்களில் சுறாமீன்களை காயப்போடுகின்ற கடலருகாகியநெய்தநிலத்திலிருக்கின்றவர்கள் வருணனுக்குத்திருவிழாச்செய்வார்கள்-எ-று. (உகூ)

சோதிபெறுகாஞ்சமறை யவம்பு சொரிகையினூற்றாய் மையாயமாதரையெலாங்கலந்தமகிழ்ச்சியினாற் பொன்கலந்துமருவு நீரால்போதகூசிசனங்களையைப் பெருகுதலான்மதுவுடை யப்பெருதலாலே, சீதரனேநிகராகத்திருந்திசைகளெலாஞ்சிறந்ததன்றே.

(இ-ள்) திருநதிஒளிபொருந்திய துதிக்கையையுடைய யானைகள்மறையச் சலத்தைப்பெருக்கிவருதல ... பரிசுத்தமாகியபெரியபூமியெல்லாம் பரவியசந்தோஷத்தினாலும் பொற்பொடிகளையுந் திரட்டிக் கொண்டுவருவதனாலும் மஞ்சள்பொடிகளையைப்பெருக்கினபடியாலும் தன்கூடுடைந்து மோதுகளினாலும் என்றுநதிக்குப் பொருள்கொண்டு சிலேடைவகையால் கரனுடையதேகமறையப் பாணங்களைச் சொரிதலாலும் தாய்மை பொருந்திய கோபிகளைச் சேர்ந்திருக்கலானும்மைஷ்ணவவுருகத்தையெய்தலாலும் மதுவென்கிற அசுரன் சாகயுத்தஞ்செய்தலாலும்விஷ்ணுவுக்குச்சமானமாகாநிதிகிலுஞ்சிறந்தது (௩0)

இதுநதிக்குந்திருமாலுக்குஞ்செம்மொழிச்சிலேடையணியென்க

* இதுமுதலாறுபாடல் வயற்சிறப்புக்கூறும்.

மேவுபுனல் பரந்தொழுகக் குளிர்ந்தமயிர்பொடித்தனபோல்விதைத்திற்றோன்றிக்,காவிலுறைபசுங்கிளியின் சிறகெனவேபசந்துதொண்டைக்கதிராய்முற்றிக, கூவுகின்றவாரணத்தி னிதம்போல நிமிர்ந்தெழுந்துகுறைவில்சாலி, பாவையுமை தவம்புரியுந் தலமெனப்பணிந்தனபோற்படிந்தமாதோ

இ-ள் அந்நதியில் வந்த நீர்பரந்து ஒழுகிறபடியினாலேகுளிர்ந்த பூமிதேவியினுடை தேகத்தின் மயிர்க்குச் செறிந்ததுபோல் குறைவில்லாதநெற்பயிர்களுண்டாகத் தோப்புகளில் வாசஞ்செய்கிற பச்சைக்கிளிகளின் சிறகுபோல பச்சைநிறத்தை யடைந்து தொண்டைக்கதிராய்

வேறு.

நிறைலயுந்தளிககுரோசி நெடும்புனல்குடையவன்ன
மழலைவண்டானத்தோடு மருதவண்டானத்தோடு
மழலையிரமணிப்பூணபள்ள ரரிகிணைக்கிணையபவூதும்
குழலிசையறுகாண்மோதர் குழலிசையறுகாற்கூட்டம்

(இ-ள்) எருமைநீரிலேபோய் விழுந்துகலக்க அன்னம்நிளமையாகிய நாரையுடனேமருதநிலத்திலுள்ளதாம் பொருந்தியகானத்தைபுடையசோலையில் ஒளிம்பிரகாசம் பொருந்திய இரத்தினாபரணங்களையுடையபள்ளர்கள் அடிக்கிறஅரிகிணையென்னும் வாத்தியத்திற்கு இசையுமபடியாக ஊதுகின்றபுள்ளாங்குழலிசை இல்லாதபோது பெண்களுடையகூந்தலிற் பொருந்திய வண்டுகள் இசையுமபடியாகவூதும் எ-று. (சரு)

முதலையாகடினாககளெல்லாமுடிந்தசங்கிலிகளாகக்
காருநெற்கதிர்களெல்லாங்கன்னசாமரைகள்காட்ட
தேசுவாய்க்கவளமபெற்றுங்கேறுகப்பானைச்சிந்தி
லாசவனைகளிறுபோல மருதம்வீற்றிருக்குமாதோ

இ-ள், வாறுங்காய்மெய்ந்துக்கொண்டிருக்கிற வண்டின் கூட்டங்கள் சங்கிலியாகவும இரத்தினமபோலும் நெற்கதிர்கள்சாமரைபோன்றதாகவும் பிரகாசம்பொருந்த வளப்பம்பெற்றெழுகிறபொருளைச் சிலேடையாகக் கொடுக்கும் உழுகியவாயிறாலே கவளம்பெறுதலாலும் பருவங்கொண்ட தேனுகிய அமிர்தத்தைச்சிந்தியெனனும்பொருளைக்கொடுக்கும் தேறித் தனைகண்ணிருக்கிறபாகனைத்தள்ளிக்கொல்லுகலாலும்தேவேந்திரனேறுகிற ஆயிராவதமென்னும் யானைபோலமருதநிலம்வீற்றிருந்தது-எ-று

நாலடித்தரவுக்கொச்சகக்கலிப்பா.

பண்ணார்கமலப்பட்டணப்பதிநீங்கி
மண்ணூடர்போற்றும் வடவீதியிற்குறுகி
யண்ணாமலையா னடிககமலஞ்சென்றுதொழு
விண்ணூர்கொடிநெடுந்தேர் வீதிசாரின்மேவினான்

(இ-ள்) பண்டுகளிசைபாடுகிற தாமரைப்புட்டங்களுடையமருதநில த்தினைவிட்டு நீங்கி பூலோகத்தார்வணங்குமவடக்குவீதியெழுந்தருளி அருணசலேசருடைய பாதாரவிந்தத்தைப்போய் வணங்கஆகாயத்தை பூகிய கொடிகளையுடைய தேர்களிலிருக்கும் கிழக்குவீதியில் வந்தா ர்மதி எ-று.

கலிவிருத்தம்.

நசகோபுரத்துச்சிமேவிலோ
லச்சிரத்தினன்மதியின்மாகபோம்
வச்சமாமணிச்செம்மையாலினன்
பசசைமாவெல்லாய்ப்பவளமாகுமே

இ-ள். யாவரும்விரும்பப்பட்ட கோபுரத்தின் சிகரத்தினருகில்சந்திரன்வரும்போது அக்கோபுரத்தி லிழைக்கப்பட்டிருக்கிற ஒப்பற்றவச்சிரங்களினாலே தனதுகளங்கத்தைநீக்குவான் இன்னும் அக்கோபுரத்திலிழைத்திராநின்றமாணிக்கங்களுடையசிவந்தவொளியினால் அதனருகில்வரும்போது சூரியனதிரதத்திற்கட்டிய பச்சைக்குதிரைகளேழும் பவளக்குதிரைகளாகத்தோன்றும்-எ-று. (௨௮)

வேற்றுமேருநேர் மேடைமீதினும்
போற்றுகாரகதிற் புரிசைமீதினும்
தோற்றுநீலமா மணியஞ்சோதியா
லேற்றவானதியமுனையானதே

இ-ள். வேறுவேறாகிமேருவையொத்தமேடைகள்மேலும்மேகங்கள்சஞ்சரிக்கின்றமதில்கள்மேலும் இழைத்திருக்கும்நீலரத்தினத்தின பிரகாசத்தினால ஆகாயத்திலிருக்கும்கங்கையமுனைபோல்கறுப்பு நிறமடைந்தது-எ-று.

பரவையாமெனப்பணைமுழங்கவே
பரிவைமாதரா ராடரங்கின்மேல்
விரவு பச்சையின் கதிரைவெய்யவன்
புரவிகொளவிடும் புலமென்றுன்னியே

இ-ள். சமுத்திரம்போலவாத்தியங்கள்முழங்கப்பெண்கள் நாட்டியஞ்செய்கின்ற மேலுப்பரிகையி லிழைத்திருக்கும்பச்சைரத்தினங்களுடைய கிரணங்களைப புல்லென்றுநினைத்துச் சூரியனதிரதத்திற்கட்டிய பச்சைக்குதிரைகளேழுங்கௌவும்-எ-று.

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

அத்தகையவீதி கடந்தணியாலஞ்சேர்ந்
துத்தமனையென்னையா ளுடையானைச்சோணகிரி
நித்தகனைக்கண்டு பணிந்துருகிமீண்டுபல
சத்திகள்தமமோடு தலேசுரத்தைமேவினாள்

இ-ள். அப்படிப்பட்ட தன்மையையுடைய வீதியைத்தாண்டி அழகுள்ளகோயிலுக்குட்போய் உத்தமனைஎன்னை யாட்கொண்டவனை அருணாசலத்திலிருக்கின்ற ஞானசொரூபனைத்தரிசித்து நமஸ்கரித்துஉருக்கத்தையடைந்து திரும்பிப்பலசத்திகளுடனேதலேச்சுரமென்கிற ம சாரலை யடைந்தாள்அம்மை-எ-று.

ஊசிமேலோர்காலவிரலை யூன்றியொருகான்மடித்து
நாசிநுனைவிழிசேர்த்து நாடியுடன்பூட்டிக்
தேசினமுதுருகு தெள்ளமுதையுண்டுதவக்
கோசிகனைப்போல்முயல்வார்*கோடானகோடியே

(இ ள.) ஊசியிலே ஒருகாலின்விரலை யூன்றிக்கொண்டு ஒருகாலை மடித்துமூக்குநுனியிலே கண்களைச்சேர்த்துப் பஞ்சாக்கினியைவளர்த்து பிரகாசமான அமிர்தாரணைசெய்து பிரமாந்திரத்தின் வழியாய் வருகி

* கோடானகோடியேயென்பது கிராமியவழக்கச்சொல.

அமிர்தத்தைச் சாப்பிட்டு விசுவாமித்திரன் போலத் தவஞ்செய்த அனேகங்கோடிபேர்-எ-று. ருஉ

நாடுமலமூன்றகற்றி நல்வினையுந்தீவினையுஞ்
சாடுமனமிழந்து தானிழந்துதன்மயமாம்
வீடுபெறவிரும்பி வேற்கையிறிதில்லாமற்
கூடுசிவஞானியர்கள் கோடானகோடியே.

இ-ள், ஆணவம் காமியம்மாயை யென்கின்றமும்மலங்களையும் நீக்கி நல்வினை தீவினையொப்புவந்து மனமென்பது இறந்து தற்போதங் கெட்டு உலகம்சிவ சொரூபமாய்மோட்சம்பெரும்படியாக ஆசைகொண்டு மற்றோ ராசையுமின்றிச் சிவஞானம் பெற்றஞானிகள் கோடிபேர்கள் அம்மலைச்சாரலில் இருப்பார்கள்-எ-று.

தொண்டருடனாகமங்கள் சொன்னவிதிமுறைமையைத்
தண்டிமுடிவுனவு ராதியாய்ப்பூசித்த்
தண்டர்பிரானஞ்செழுத்தை யோதியகமகிழ்ந்து
கொண்டகிரியையினர் கோடானகோடியே

இ-ள். அடியார்களோடு ஆகமங்கள்சொன்ன விதிமுறைமையின் முதல் சண்டேசுரர் அந்தரமாகப்பூசைசெய்து தேவரும் முதல்வனான சிவபிரானுடைய பஞ்சாட்சரமந்திரத்தை மகிழ்ந்து கிரியைகளை நடத்துகிறவர்கள் கோடானகோடி

நேருமியம்நிய மாதனமலகையும்
பேர்பிராணயமாம் பிரத்தியாகாரமொடு
தாரணையான சமாதிவகைதன்னிலுமெய்
கூருமுயலியோகியர்கள் கோடானகோடியே

இ-ள். இயமம் ஆதனம்பிராணயாமம் பிரத்திஉபகாரம் தாரணை தியானம் சமாதிஎன்றுசொல்லப்பட்ட அஷ்டாங்கயோகங்களின்வகைகளையறிந்து அவைகளைத் தேகசிரமப்பட்டு முயல்கின்றயோகியர்கள் அனேககோடிபேர்கள்-எ-று.

மாதவர்களின்னசொல் செய்யும்வகைபார்த்துச்
சூதவனஞ்சூழ்ந்தசுனையுஞ்சுனைசூழ்ந்த
சீதவருவிகளும்பார்த்துச்சிறப்புற்றுக்
கோசமஞராசிரமந்தன்னிற்குறுகினள்

இ-ள். மகத்தாகியதவமுடையோர்கள் செய்யும்செய்கையைப்பார்த்து மாந்தோப்புசூழ்ந்ததகனையுஞ் சுனைசூழ்ந்தசீதளமான அருவிகளும்பார்த்துச் சிறப்பையடைந்து அவ்விடத்தில் இருக்கிற கௌதமருடைய ஆசிரமத்தில் அம்மன்சேர்ந்தாள் எ-று.

அந்தவிடத்துமையாள்செல்வசுவிகையு
மைந்தனுமேதேததிஞா வாழததிமறைக்கோதமஞர்
மூாதிமுனியெவ்விடத்தேயென்ருனமுனிபுதலவன
தநதமலாதருப்பைக் கெயதியதுஞசாறறிஞன்

இ-ள். அக்கௌதமருடைய இடத்திற்கு அம்மைபோனவுடனே அவாபெண்சாதி அகலிகையும் புததிரராகிய சதானநதரும்வந்து பணிந்தார்கள் அமமை ஆசீாவதிதது வேதங்களையுணாநத முதன்மையானகௌதமரிஷி எஙகேயிருககிருரென்றுகேட்கச் சதானந்தர் தருப்பைகொண்டுவருகிறதற்குப் போஞரென்றுசொன்ஞர் எ-று. ௱௭

பின்னுமவனுரைப்பபேதமையோன்புன்குடிசில
கன்னலமுதேகணப்போதிருநதருளி
லன்னவனேக்கொணாவேனெனறேயடிதொழுது
தனனேயளித்தவன்பார்யென்ருஞசதானநதன

இ-ள மறுபடியும பார்வதியைப்பார்த்து கருப்பஞ் சாறுபோன்ற பாாவதியமமையே அறியாமையையுடைய எனகுடிசைவீட்டில க்ஷணப்போதுஇருநதால எனதகபபஞரைககொண்டுவந்து சேருகிறேன்று பாதஙகளைததொழுது தனனேப்பெற்ற கௌதமரிடததிறகு ாஞர் சதாானநதா-எ-று. ௱௮

ஙகிவனசொலபோதிவிளந்தருப்பைகொய்துமுனி
ஙகவர்கண்சூழநதவருமுனிவனபூததலர்நது
ஙகவனகற்பகமபோறறென்றுதலாலிநதவனா்
கள்வன மலலவெனறுசஙகையுற்றுநோக்கிஞன்

இபபடிச சானநதர்போகிறபோது இளமையாகிய தருப்பை கொயது அனேகமுனிவாகள்சூழக கௌதமாவருகிறதற்குமுன்னே இவ்விடததில எல்லாவிருக்ஷங்களும்புஷ்பிததுக்கற்பகவிருக்ஷம்போலக்காணுகிறபடியால நம்முடையவனமலலவே இதுயாருடையதென்று சநதேகப்பட்டுப பாாததார்-எ-று. ௱௯

இத்தலத்தில்வந்தவரரரென்றுரைத்துமாதவற்குப்
பத்துருவநதந்தமுனியம்பராசரனு
மந்திரியுமப்புதுமையாராய்ந்தில்லிறந்தே
புத்திரனேகண்டிவரென்னெனப்புகல்கின்றான்

இ-ள். இவ்விடத்திலவந்தபெரியோர்கள் யாரென்றுவிஷ்ணுவுக்குப் பததவதாரம்பிறக்கச் சாபங்கொடுத்தபிறகு ரிஷியும்பராசரரும்அத்திரியும் அப்புதுமைவிசாரிக்குமிடத்தில தம்முடையபிள்ளை சதானந்தரைக்கண்டு இவ்விடததிலுண்டாகிய விசேஷம் என்னவென்று கேட்டாாகௌதமர்-எ-று. ௱௰

தாகையிவைகேளிரைவர்தங்களேயளிக்குஞ்
சோதியிவனெய்தினவெனத்தொழுதுசொன்ஞ
மறைதேடுமவணங்குடிகைமேலற்
வமேதுவதமேதுதவமென்ருன்

# திருக்கண் புதைத்தச்சருக்கம்

இ-ள். சதானந்தர்தகப்பனாராகிய கௌதமரைப்பார்த்து ஐயாடி ன்முதலாகிய ஐவரையுந்தன்னிடத்திலுண்டாகிய தேசோமயமாகிய ட ராசத்தி இவ்விடத்தில்வாதிருக்கிறார்களென்று வணங்கிச்சொல்லாத சொருபமாகிய வேதங்கள்தேடுதற்கரிய அமமைநம்முடைய குடிசை யிலவர என்னதவஞ்செய்தோமென்றார் கௌதமர்-எ-று சுக

ஓடினனைத்துமகனுச்சியைமுகந்தா
ஞடினன்மகிட்சியெனுமார்கடல்புகுந்தான்
பாடினனெடுததருசைபார்மிசையெறிந்தான்
வீடினதுாநதம்வினைவேரினுடவென்றான

இ-ள. கௌதமர் இவ்வார்த்தைசொன்னசதானந்தரை கட்டியணை து உச்சிமுகநதுஓடினார் திருக்கூத்தாடினார் சநதோஷமென்கிற சமு திரத்திலாழ்ந்தார் பாடினார் தருப்பையைபூமியிலே யெறிநதுவிட்ட என்னுடையபாவமவேருடனே கெட்டுப்போயிற்றென்று சொன்ன

அத்திரிமுதற்றலைமையந்தணர்களெலலாங்
கைததலமெடுததனர்நடித்தனர்களிப்பால
வித்தகியிருக்குமிடமேவியெதிாகண்டார்
பத்திவலையிற்படுபெதங்களிலவிழுந்தார்

இ-ள். அத்திரி ரிஷிமுதலாகத் தலைமைபெற்ற ரிஷிகளெல்லாம் கொ ண்டுகைகளையுந் தலைமேலவைத்துக்கூததாடினாகள் சநதோஷத்து னேபார்வதியிருக்கிற இடத்தையடைநது எதிரேகண்டு பத்தியாகிட லையிலே அகப்பட்டுக்கொள்ளுகிறபார்வதியினுடைய பாதத்தில்வி ந்து நமஸ்கரித்தார்கள்-எ-று.

நின்னிலமைகன்னிமிறைநீள்பிரமசாரி
என்றுமுறையனறுமுதலின்றுவரையெல்லா
முன்னிடையுதித்துலகுயிர்த்தொகைகளெல்லா
மன்னையெனுமுற்பெருமையாரறியவலலார்

இ-ள். தாயேநீயோகன்னிகை சுவாமியோநித்திய பிரமசாரியென்று சிருஷ்டிதொடங்கி இதுவரைக்கும் வேதங்களெல்லாஞ் சொலலி கொண்டிருக்கின்றன அப்படியிருக்க உன்னிடத்தில் உலகங்களி கின்றஎல்லாவுயிர்களுந் தோன்றித் தாயென்றுசொல்லும் அப்படிப பட்டஉன்பெருமையை யாரறியப்போகிறார்கள்-எ-று.

நித்தனைமுதற்றருவைநித்தனதிட்ட்தே
சத்தியெனநீவருவைசததிசிவமென்றே
இத்தகைமைகொண்டுயிர்கள்யாவையுமளிப்பா
யத்துவிதமாகுமுனையாரறியவலலார்

இ-ள். நித்தியமாகவிருக்கிற சிவபிரானைமுதலில் உண்டாக்கு அச்சிவனிடத்திலே சத்தியாகவருவாய்ச்சத்தி சிவமென்கிற தன் யைக்கொண்டு உயிர்களையெல்லாம் பெறுவாய் அத்துவிதசொரூப இய உன்னையாரறியப்போகிறார்கள்-எ-று

மெய்ப்பொருண்மகேசனரன்வேதனரியாறல்
மைப்பருமகேசியுமைவாணிதிருவாவை
இப்படியுமன்றியவனெப்படியெடுத்தா
னப்படியுமாவையுனையாரறியவல்லார்

இ-ள் பரமசிவன்மகேசுரர் உருத்திரர்பிரமன்விஷ்ணு ஆறல் கேஸ்வரி உத்திரிசரஸ்வதி இலட்சுமியாகிய சத்திகளாய் இப்படி ல்லாமல் அச்சிவபிரான் எப்படிப்பட்டஉருவங்கொண்டனரோ அ குத்தகுந்த உருவங்கொள்வாய் உன்பெருமையைஆரறியவல்லவர்க

நெஞ்சுருகிமாதவர்கணின்றிவைபுகழ்ந்தார்
வஞ்சியிடைகோதமனும்வந்தனன்வரும்போ
தஞ்சலிபுரிந்தனனதற்குமுனமேமின்
கஞ்சமலரென்னவிருகாலகளில்விழுந்தான்

இ-ள். மாதவத்தையுடைய ரிஷிகளெல்லாம் நெஞ்சமுருகிநின்று இ ப்படித்தோத்திரஞ்செய்தார்கள் அச்சமயத்தில் பார்வதிசமீபத்தில் கௌதமர்வரும்போதே இரண்டுகைகளையுஞ் சிரத்தில்வைத்துக் கூட் பித் தாமரைமலரையொத்த அம்மை யிரண்டுபாதத்திலும் நமஸ்கரி த்தான்-எ-று. சு௭

அன்பினுயர்கோதமனுமன்னையைவணங்கி
யின்புறவுரைப்பன்யெனனெண்டிசைபுரப்போர்
தன்சிரமிதிக்கரியதாளிணைகளென்றன்
புன்குடில்மிதிக்கவெனபுண்ணியமுடித்தேன்

இ-ள். பத்தியினாலே உயர்ந்தகௌதமரிஷியும் பார்வதியம்மையை வணங்கிச்சொல்வான் பிரமன்அஷ்டதிக்குப்பாலகர் சிரத்திலேவைத் தற்கு அருமையானபாதமிரண்டும் அடியேனுடையபுன்மைபொரு திய சிறுவீட்டில் மிதிக்கஎன்னபுண்ணியஞ்செய்தேன் எ-று. சுஅ

இந்தமொழிசொற்றலுமிளங்கொடியும்வேலன்
றந்தையிடைசென்றிடுவனங்கதுதவிர்ந்தால
சிந்தைமகிழுன்னிடையில்வந்துகுறைதீர்வேன்
மைந்தனெனவோதினன்மறுத்துமிவைசொல்வாள்

இ-ள். இவ்வார்த்தையைச்சொன்ன அளவில்இளமையாகியகொடி போன்ற அம்மையும்பிள்ளையாகிய கௌதமனே எனக்கோர்குறைவந் தால்சுப்பிரமணியனிடத்திலும்கணபதியிடத்திலுஞ்சென்று தீர்த்துக் ...வேன் அவ்விடம்விட்டால்என்மேல்அன்புவைத்தஉன்னிடத்தி ...துக்கொள்வேனென்றுசொல்லிமறுபடியும் சொல்வாள்-

...மொழிநதிடநடந்தபடியெல்லாம்
...மபடிபகர்ந்தனளெவாக்கும்

தாயிவைமொழிந்தள விணிற்சதமகற்கன்
ருயிரம்விழித்திர ளளித்தமுனிசொல்வான்.

இ-ள். பரமசிவன்சொன்னபடி பூமியில்வந்து தானச்ச மாசாரமெ
ல்லாம் பாயிரத்தோடு கூடியநூல்போல முறையாவிரித்து எவருக்கு
தாயாகியபார்வதி சொன்னபோது முற்காலத்தில் தேவேந்திரனுக்கு
ஆயிரங்கண்ணுண்டாகச்செய்த கௌதமர்சொல்வார்-எ-று.

இத்தலமுதற்றல மிதன்பெயர்தலேச்ச
முத்தமமிதிற்றரும மொன்றுபலவாகும்
மெய்த்தவமியற்றியிடில் வெள்விடையின்மேல்வர்
தத்தனுமிடப்புற மளித்தருளுமென்றான்.

இ-ள். இத்தலம் முதன்மையானதலம் இதனுடைய பேர்தலேச்சர
ம் இதுமிகவுமுத்தமமானது இதில்ஒருபுண்ணியத்தைச் செ
ன்றுபலவாய்விருத்தியாகும் இதிலிருந்துகொண்டுநீமெய்மை
வம் செய்தால் வெண்மையுள்ள ரிஷபவாகனத்தின் மேலெழு
பரமசிவன்உனக்கு இடப்பாகங்கொடுப்பாரென்றார் கௌதமர் எ

மாலயன்வசுக்கண்மக வான்முனிகணத்தோர்
சாலேகள்சமைத்ததில் தனித்தவமுடித்தார்
காலமிடனன்றுசெயல் கைப்பலமீதென்றான்
மூலமுதல்வல்லியு முடிப்பனிதுவென்றாள்

இ-ள். அம்மையே விஷ்ணுபிரமன் அஷ்டவசுக்கள்தேவேந்தி
அனேகமுனிவர்கள் அவரவர்கள் இடஞ்செய்துகொண்டு ஒப்ப
வஞ்செய்து நினைத்தகாரியமுடித்துக் கொண்டார் நீவந்தகாலமும்
முநன்மையாகும் இவ்விடத்தில் நீதவஞ்செய்தால் கைப்பலமாகிறு
யுமென்று கௌதமர்சொல்ல எல்லாப்பொருள்களுக்கு மூலமாகிய
ம்மையும்தவஞ்செய்துஎன்கருத்தைமுடித்துக்கொள்கிறேனென்

எண்சீர்க்கழி நெடிலாசிரியவிருத்தம்

கோதமனேமுதலாய முனிவர்க்கெல்லாங் குளிர்ந்தமொழி ட
ந்துவிடைகொடுத்துச்சோண, பூதராமாமதக்குணபாற்பன்னசாலே
திதமைப்பித்தகமகிழ்ந்துபுறம்புகாக்க,மாதரெழுவரையழைத்துநா
பாலின்வாயிலேயெண் வயிரவர்கண் மகிழ்ந்துகாக்க, வாதவிணிருந
மைந்தர் மருங்குகாக்கவரிதரியுட்புறங்காக்க வைத்தாள்மன்னே.

இ-ள். கௌதமர்முதலான முனிவர்க்கெல்லாம் பிரியவசனம்செ
ல்லி உததரவுகொடுத்து அருணசலத்துக் கிழக்கும்பக்கத்தில் பர
சாலேபுதிதாகச்செய்வித்து சத்தமாதர்களேப்புறக்காவலாக்கி
ன்குவாசலேயும்எட்டுவயிரவர்கள்காக்கவும்விநாயகர் சுப்பி
ன்இரண்டுபக்கமுங் காக்கவும்துர்க்கை உட்பக்கங்காக்க
ள்பார்பதி-எ-று.

காந்தளக்கஞ்சடைபிடித்துவிரித்துப்பொற்ரேட்குழைகழுத்திற் ண்டிகையின் ருப்பைபூட்டியுத்தும்மரவுரிகிகர்பட் டாடைநீக்கி யுரி த்தமரவுரிசாத்தி யுந்தூளத்தால், விந்தைதிருநீரணிந்து கன்றகுட்கா ய்ந்துவிசிங்குழுசிலவொருகால விரலேயூன்றி, அநதிபகலிறைபதத்தின் மனத்தையூன்றி யறியபெருநதவம்புரிநதாளகிலமீன்ருள்.

இ-ள் புட்பங்களாகத்தரிக்கின்ற கூநதலேச்சடைசெய்து விரித்துத் தாள்கழுத்து காதுகளில உருத்திராக்ஷமாலேகளை த்தரித்து ஆடுகின் ாம்புபோலிருக்கிற பட்டாடை யடுபபதுவிட்டு மரவுரிதரித்துச் யத்தைகொடுக்கிற விபூதியைச் சருவாங்க முநதரித்து நெருப்பில் ாய்ந்து பளபளவென் றுபிரகாசிககுமஊசியிலலொருகாற்பெருவிரலேயூ ன்றி இராப்பகலாகமனத்திலேபரமசிவததைத்தியானமாகநிறுத்தி அரி தாகியபெரியதவத்தைச்செய்தாள் உலகததைப்பெற்றபார்பதி-எ-று.

த்தகொடி மருங்குலளேந்தெரியி னுப்பணியதவமியற்றுதல் ாதததுவாடிக், கனேதது மறநதுடித்து விழிபுதைத்து வாணிக்க ணமூழ்கினருள கமலத்தாளு, முளேததுமனநதளர்நதழுதுவி ள்மறறையுயிரகடெலாங்களைநதுகளைநதுருகாநின்ற, வளேதது ரைப்பதென்ருய வருநதுமாமுன்வயிற்றிலுள்ள கருபபமெ ருநதிடாதோ.

இ-ள். மிகவுஞ்சிறிதாகிய கொடிபோன்ற இடைவளேந்து அங்கினி த்துயிலே இனிமையானதவததைச் செயகிறதைப்பார்தது பாத்து ளேத்துவாட்டமடைநது களேத்துமன துடிதது இரண்டுகண்களேயு நகொண்டு சரஸ்வதிகண்ணீராலமுழுகினள் இலட்சுமி மனம்வ ந்திச் சஞ்சலப்பட்டு அழுதுவிழுநதாள் மறறசீவராசிகளெல்லாம் ங்களைநதுஉருகின நாணிதைப்பிரித்துச் சொல்வதனல எனனப தாயானவள்வருநதுவாளாயின் வயிற்றிலுளளகருவாகிய சீவனெ ய்வருத்ததததையடையாதோ-எ-று. எ௩

முன்பனியிற்கருகுபடாத கமலம்போல முகநதோன்றப் பனிகயத் முழ்கி நிறகும, பின்பனி யிலநிசீதவிடததிறசேரும் பெருமழை ன்மனெனபபேணிநிறகும், அனபனிடமபெறுமளவு மிதுபோல ண்டுமெரியதவம்புரிநதன ளவ்விடததுவேநதன், வன்பனியிற்றுயி டுமானமுதலானதேவா மறைபுருநதவச்சாலேமருங்கிறசார்ந்தார்

இ-ள். முன்பனிக்காலத்திலேகருகிப்போகாததாமரைப்பூப்போலமு ாத்திரநதெரியக் குளிர்ச்சி பொருநதிய தடாகங்களிலேநின்றும் பி ிக்காலத்திலே அதிகசீதளம்பொருந்திய இடத்திலேயிருந்து ம யுகிறபோது அதிலஒருமீன்போலச் சஞ்சலப்படாதுநின்றும் டைபபாகததைப் பெறுகிறவரைக்குமிதுபோலவேண்டிய ள அவ்விடத்திலபிரமனும வலியசர்ப்பத்திலநித்தி முதலாகிய தேவாகளும் தேவகோஷ்டம்பொ அடைந்தார்கள்-எ-று. எசு

## திருக்கண்புதைந்தசருக்கம்.

அந்தரியுமாயவனூர்முதலாந்தேவரனைவருக்குமுபசார மளித்‌துங்கள், வந்தவாறியம்புமென்மகிடனாலேவருந்தியதுந்தளர்ந்ததுவும் விடுத்துச்சொன்னார், சுந்தரியுங்குமரியுடன்சுடரும்வாலாற்றெறுதிகலத்தின்மகிபாருந்தொலைப்பாயென்றாள், விந்தைபுரிவனெனப்பணிந்தாளன்னைவிளம்புதல்கண்டகமகிழ்ந்துவிடைகொண்டாரே

இ-ள் பார்வதி விஷ்ணுமுதலான தேவர்களெல்லாருக்கு முபசாரஞ்சொல்லி நீங்களிவ்விடத்திற்குவந்தவகை சொல்லுங்களென்றுகேட்க அவர்கள்மகிடாசுரனாலே தாங்கள்துன்பப்பட்டுத் தளர்ச்சியடைந்தவகை விவரமாகச்சொன்னார்கள் அதற்குப்பார்வதி துர்க்கையைக்கூப்பிட்டு நீசத்தியினாலே யுத்தகாலத்திலே மகிடாசுரன்வல்லமைகெடகொன்றுவிடென்றுசொன்னாள் அதற்குத்துர்க்கை அப்படியேசெய்வேனென்றுபணிந்தாள் தாயாகியபார்வதி யிந்தவார்த்தையைச்சொன்னஅளவில் விஷ்ணுமுதலானவர்கள் சந்தோஷத்தையடைந்து வணங்கி விடைபெற்றுக்கொண்டார்கள்

கலிவிருத்தம்

கோதமாச்சிரமந்தன்னிற்கோள்வனை
நீதிலாத்தவஞ்செய்ததுசெப்பினேன்
மேதிகாமுதற்காய்ந்ததும்வெள்விடைச்
சோதிபாகமடைந்ததுஞ்சொல்லுவேன்

இ-ள் சதநிகௌதமருடைய ஆசிரமத்திற் குறைவில்லாத தவஞ்செய்தது சொன்னேன் பிறகுமகிடாசுரனைக்கொன்றதும் ரிஷபவாகனத்தையுடைய சிவபிரானது இடப்பாகத்தைப் பார்வதி அடைந்ததுஞ் சொல்லுவேன்-எ-று.

நான்காவது
திருக்கண்புதைத்தசருக்கம்
முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம்-கூகூஉ.

---



உ

சிவமயம்.

ஐந்தாவது

பார்வதியார்

# இடப்பாகம்பெத்தசருக்கம்.

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

அஞ்சனக்கிரியில்வாழு மசுரன்மூனர்க்குந்திர
னஞ்சமேயனையானந்த நமக்குநமனுப்வந்தோம்
செஞ்சிகையெறியைத்தீண்டும் திமையானளகைகாட்டின்
விஞ்சையான்வருந்தவுள்ள வளமெலாங்கவர்ந்தவீரன்.

இ-ள், நீலகிரியில் வாசஞ்செய்துக்கொண்டிருக்கிற அரசன் எல்லாரிலும் அதிகபராக்கிரமத்தையுடையவன் விஷத்திற்குச்சமானமானவன அந்த எமனுக்கும் எமனானவன சிவப்பாகிமேலே யெழுகின்ற கொழுந்தையுடைய நெருப்பைச்சுடத்தகுந்த தீமையுடையவன் அளகாபுரியில் குபேரன் சரித்திரத்தையுடைய அங்கேயிருக்கிற வளமை யெல்லாங் கொள்ளையிட்டவன்-எ-று. ௧

தாமரைக்கண்ணன்றாங்கு மாவினைத்தலைவாள்கூட்டி
மாமணிக்கவண்போறகொள்வன் வன்னிவாகனத்தைவாங்கி

டுசா

வேமழற்றுரிஞ்சிமைந்தர்க் குதவுவன்விமானத்தோடே
சோமனைப்பிடித்துகையாற் பிழிந்தமுதருந்துஞ்சூரன்.

இ-ள், விஷ்ணுவுக்குத்திரைசெய்கின்ற ஆதிசேடனைத் தலையையும்வா லையையும ஒருகையினாலே சேர்த்துப்பிடித்து அதன் சிரமணியைகவண்கல்லாக தூரத்திலேஎறிந்து விளையாடுவான் அக்கினியைத் தள்ளிவிட்டு அவனேறுகிறஆட்டை நெருப்பைப்போற் சிவப்புமயிரையுடைய தன்பிள்ளைகளுக்கு ஏறக்கொடுப்பான் சந்திரனை அவனேறுகிற விமானத்தோடே கையினாலேபிடித்துப்பிழிந்து அவனுடம்பி லிருந்து வருகிற தேவாமிர்தத்தைப பானம்பண்ணுகிற மகிடாசூரன்-எ-று.

கருகியமகவான்வெள்ளைக் களிற்றின்மேற் றிவன்பின்னைப்
பரிதிதேரதனிற்பச்சை பரிசெலப்பவனிபோவார்
னிருதியைச்சுமக்குமாளி யேறுவனினத்துமூழ்கிச்
குருதிகொப்புளிக்குவாளொன்றெடுத்தயரனைத்துங்கொல்வான்.

இ-ள், உயர்வாகிய நினைக்கப்பட்ட தேவேந்திரனுடைய வெள்ளையானைமேல் திருக்கோலமவருவான சூரியனுடைய தேரிலேறிகொண்டு பச்சைக்குதிரைகளேழும நடக்கப பவனியாகப் போவான்நிருதியைச் சுமக்கின்ற ஆளியின் மேலேறிகொள்ளுவன தினங்களாலே முழுகப்பட்டு இரத்தங்களைக் கொப்புளிக்கும் ஒருவாளாயுதமெடுத்துச் சருவ தேவன்களையும் கொல்வான்-எ-று. ௬

அன்னவன்மகிடமான வாற்றினலஞ்சிக்காலத்
தென்னவன்மகிடமேறான் காலினறறிரங்கானென்று
னென்னவன்கொடுமைநம்மா லியம்பலாமிலங்குஞ்சோதி
மனனவன்கிரியைச்சாய்ந்தான் மீனுககாவாரிதூர்த்தான்

இ-ள், அப்படிப்பட்ட அசுரன் எருமையாட்டுமுகத்தை யுடையவனனபடியினாலே தெற்குத்திக்கிலிருக்கின்ற எமன எருமைக்கடாவிலேறாமற் காலினால்நடந்து திரிந்தானென்றால் அந்தமகிடாசூரனுடையகொடுமை நம்மாலெப்படிசொல்லக்கூடும் சோதிசொரூபமாகியசிவபிரானிருக்கிற கைலாயத்தையுஞ் சாயச்செயதான் மீன்வேண்டியதற்காகச் சமுத்திரத்தையுந் தூர்த்தான்-எ-று.

மயனெனுந்தச்சன்செய்த மகிடமாபுரத்திலன்று
னயனாறுகரிசிதல்க விருக்குநாளவனுக்காம
பயனுறுநுகர்ச்சிவேண்டி யாயிரம்படைக்கையாளர்
கயமுதல்விலங்கைநாடி வேட்டையாக்கானிற்சென்றார்.

இ-ள். மயனென்கிற தேவதச்சனால் இரத்தினகசிதமாகச் செய்யப்பட்டமகிடபுரத்தில் அந்த அசுரன் பிரமன் நித்தியம் அறுகும் அகவையுங்கொடுக்க வாழ்ந்துகொண்டிருக்கிறநாளில் அந்தஅசுரன் தின்ற மாமிசத்துக்காக ஆயுதபாணிகளாகிய ஆயிரம்பேர்கள்யானைமுதலிய மிருகங்களைத்தேடி வேட்டைமார்க்கமாகக் காட்டுக்குப்போனார்-எ-று.

இ

# இடப்பாகம்பெற்றசருக்கம்.

தானவரசென்றவஞ்சி தவஞ்செய்தானகத்தைச்சூழ
வானவர்பணியுமட்ட வயிரவர்தொலைத்தாரிப்
போனவரழிந்தவாறும் புரிகுமறவமுந்தூத
ரானவர்வணக்கோவுக் கடிபணிந்தறிவித்தார்கள்.

இ-ள். அப்படிவேட்டையாட வெளிப்பட்ட ஆயிரமசுரர்களும் வந்து பார்வதிதவஞ்செய்துக்கொண்டிருக்கிற வனத்தைச் சுற்றிக்கொள்ள அதைக்கண்டு தேவர்கள் பணிகின்ற தகைவலாகவிருந்த அஷ்டவயிரவர்களும் அந்தஆயிரம்பேரையுங்கொன்றார்கள் அவர்கள் இறந்துபோனதும் அம்மைதவம்பண்ணுகிறதும் தூதர்கள் மகிடாசுரன்பாதத்தை வணங்கித் தெரிவித்தார்கள்-எ-று. ௬

போற்றியவங்கவர்கள்சொல்லப் புகைக்கனைபிறந்ததவனி
றாற்றியவிருகண்ணண்ட கோளமுஞ்சுழன்றதங்கே
நாற்றிசையினைவேழ நடுங்கியதிமையோர்கூட்டங்
கூற்றமுங்காந்தால காலமுங்குளிர்ந்ததன்றே.

இ-ள் தூதர்கள்வணங்கித் தெரிவித்த அளவில்பகையும் சிறப்புமுண்டாயின இரண்டுகண்களும் நெருப்புகாயப்பறக்கவீசின அண்டகோளமும் கிறுகிறென்று சுழன்றது அஷ்டதிக்கிலிருக்கிற யானைகளும் தலையைத்தொங்கப்போட்டன தேவர்கூட்டம் நடுக்கத்தையடைந்தது எமனும் ஒளித்துக்கொண்டான் ஆலகாலவிஷமுங்குளிர்ந்தது-எ-று.

அப்படிமகிடன்சீறு மளவினிவிரும்பனென்போன்
செப்பிடுமுனதுகோபம் பொறுப்பரோசிறியரேனே
முப்புடையிளநீரெனனு முலைசரிவள்வனத்துளாரைக
கைப்படையதனாற்கொலவே னெனச்சொலிக்கடிந்துபோனான்.

இ-ள். அப்படிமகிடாசுரன் கோபிக்குமளவில் விரும்பாசுரனென்கிற படைத்தலைவன் அரசனே உம்முடையகோபத்தை அற்பமானவர்கள் யார்பொறுப்பார்கள்என்றுசொல்லி இளநீர்ஒத்தஸ்தனமுடைய பார்வதிதவஞ்செய்கிற வனத்திலிருப்போரைக் கையிலிருக்கின்ற வாளால் கொன்றுவருகிறேனென்று சீக்கிரத்தில் புறப்பட்டுப்போனான்-எ-று.

குடதிசைக்கடலைச்சீறிக் குணதிசைக்கடல்சென்றென்ன
நெடியதேர்கரிமாசேனை யெழுந்தனவிரும்பனென்போன்
வடகிரிதனக்குங்கும்ப மாமுனிமலைக்குநேரே
இடையொருகற்பமேரு வெழுந்ததாமெனச்சென்றான்.

இ-ள். மேற்குச்சமுத்திரத்தின்மேற்கோபித்துக் கிழக்குக்கடல்சண்டைசெய்யப் புறப்பட்டதுபோல் பெரியதேர்களும் யானைகளுங் குதிரைகளுங் காலாட்களும் புறப்பட்டன விரும்பாசுரன் மகாமேருவுக்கும் அகத்தியரிருக்கின்ற பொதியமலைக்கும் மத்தியிலே நிகராத்த ஒரு பெரியமேரு எழுந்ததென்று சொல்லும்படியாகப்போனான்-எ-று.

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

எழுந்தவனுமரகதநேர் தாரகதமாயிரம்பூண்ட விரதமேறி
தகரி மதக்கடலை யெழுந்தது எடிககவுமையவனத்திற் சென்ற

மூர்த்தகன் லீலைபார்வரவுகண்டு பலகோடிகுன்றம்வீசத், தழைந்தப
டைத்தாக்கணற்கு நோக்கணக்கும் பொருநதெதிரேதடுத்தாரன்றே.

இ-ள். இப்படி சிகும்பாசூரன் பச்சைக்குதிரை ஆயிரங்கட்டியதே ரிலேறிக்கொண்டு அப்பொழுது எழும்பிய சிறு அணுக்கள்முன்போகின்ற யானைகளின் மதஜலம் சமுத்திரமாகத் தேங்கியிருப்பதைவற்றச்செய்யப் பார்வதிதேவிசெய்யும் வனத்திற்குப்போனான் கொழுந்த விட்டெரியும் நெருப்பொத்த அசுரப்படைகள் அநேகமலைகளை விட்டெறிய இவர்கள்வருவதுகண்டு அம்மையிடத்திலிருக்கிற தாக்கணங்குநோக்கணக்கு எனனுமிருவரும் ஆயுதபாணிகளாகப்போய் எதிர்த்தார்கள்-எ-று.

சண்டனுருத்திரன்சோமன் கபாலிசிகர் சங்கரன்கோ தண்டன்
வீத, னெண்டரியசித்ராங் கதனென்னும்வயிரவர்க ளிருநால்வோரு
மண்டமுகவுடையநகத் தானைகளைத் தொலைத்திட்ட வரிகள்போலக்,
கண்ணுகனுஞ்சாரதியுந் தேருமன்றிச சேனையெல்லாங் கணத்திற்சாய்
த்தார.

இ-ள். சண்டனுருத்திரன் சோமன் கபாலிதனக்குத்தானே ஒத்த சங்கரன் கோதண்டன் வீதன் சித்திராங்ககன் இவ்வெட்டு வயிரவர்களும் அண்டகோளமுடைபட யானைகளைக்கொலலுகிற சிங்கங்கள்போலக கர்ச்சித்து சிகும்பாசூரனும் அவன்சாரதியும தேருந்தவிர மற்றச் சேனைகளையெல்லாம் நொடிபபொழுதிலே கொன்றார்கள்-எ-று

அட்டவயிரவர்படையா லணங்குகளாற் றனதுபடை யழிதனோக்கி
வட்டநெடுந் தேர்முடுக்கித் தசங்கணங்கின் முகத்திலெண்ணில் வா
ளிகோதரான், விட்டகணைகளைவிலக்கித் தேரோட்டுஞ் சாரதியைவீ
ழ்த்திவாளி, தொட்டகரங்களைபபிடுங்கி யவனுயிரைக் குடித்தந்தகு
ரமாது.

இ-ள். எட்டுவயிரவர்களுடைய ஆயுதங்களினாலும் இரண்டுபெண்களாலும் தன்னுடையபடைமுழுவது இறந்துபோவதைப்பார்த்து சிகும்பாசூரன் வட்டமாகிய நெடியதேரைவிட்டுககொண்டு தாக்கணங்கென்பவளுடைய முகததிலே கணக்கில்லாத பாணங்களை விட்டான் அப்பாணங்களை விலக்கித தேர்நடத்துகிற சாரதியைக் செ[redacted]று ஆம்புதொடுதக கைகளையறுத்து அவனுடைய தலையையும் அறுத்துக் கொன்றாள் தாககணங்கு எ-று.

ஓடினசெங்குருதி நதியுடலிழந்து விழுமவுணருயிர்கள் போல,
வாடினவெங் குறைத்தலைக ளனுதினமு ருருதுகின்ற வலமைபோலச்,
சூடினர்கள்வயிரவரும் தாக்கணங்கு நம்பையாகை, வீடினர்களவு
ணரென மகிழமுகத்தறைத்தனர்போய விரைந்துதூசர்.

இ-ள். வயிரவர்களாலும் இந்த இரண்டுபெண்களாலும் தேகமறுபட்டு சீக்கிரததிலபோகு மசுரருயிர்போல் இரத்தந்திஓடியது கித்திரிசத்தைத்தின்று கூத்தாடுகிற பேயபோல யோந்தார்கள் கூத்

கூடின வயிரவர்முதலானவர்கள் தம்மையவாகைமாலை சூடிக்கொண்டார்கள், அசுரர்களிறந்து போனார்களென்று மகிடாசுரனுக்குத் தூதர்கள் சீக்கிரத்தில் போய்ச்சொன்னார்கள்-எ-று. ௰௪

கேட்டளவில் மகிடமுகன் கயிடவன்ற முகநோக்கிக் கிளர்த்துவானோர், காட்டிலுறை சிறுபேயுங் கணங்களுநம் பெரும்படையைக்கடிந்ததென்றால், நாட்டநுத லவனயன்மா லெனக்கினிமேற்றிறைகொடுக்கநாணுவாரென், றீட்டிகைகை புரிந்தெழுந்தா னேறினவனாயிரங்கரிசூழ்ரதமீதில்.

இ-ள். மகிடாசுரன் இவ்வார்த்தையைக் கேட்டஅளவில் தன்னருகிலிருக்குங் கயிடவன்முகத்தைப்பார்த்துச் சொல்லுவான் ஒருகாட்டிற் சஞ்சரிக்கிற சிறியபேய்களும் கணங்களும் நம்முடைய பெரியசேனைகளைக் கொன்றனவென்றால சிவன், பிரமன், விஷ்ணு, முதலானவர்கள் சொன்னபடி கேட்பார்களோவென்று அதிகமாகிய கைகொண்டெழுந்திருந்து ஆயிரம்யானைகள்கட்டிய தேரிலேறிக்கொண்டான்-எ-று.

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

பதினொருகோடியானைப் பலத்தராய்க்காந்தனீலன்
முதுகரனகுருதியண்ட னீசகன்சண்டன்முண்டன்
மதுகயிடவனதீக்கண்ணன் புகைக்கண்ணன்மாலியென்னுந்
துதிகொளாறிரண்டுபேரு மதேர்களைத்தூண்டிச்சென்றார்.

இ-ள். மகிடாசுரன் தேறிலேறினவுடனே பதினொருகோடியானைப்பலத்தை யுடையவராகிய காந்தன், நீலன், முதுகரன, குருதி, அண்டன், நீசகன், சண்டன், முண்டன், மதுகயிடவன், தீக்கண்ணன், புகைக்கண்ணன், மாலியென்று துதிக்கப்பட்ட பன்னிருவரும் தங்கள் தங்கள் இரதங்களை நடத்திக்கொண்டு போனார்கள்-எ-று. ௰௫

கரிமுகத்தவர்நிவாத கவசர்கள்காலகேயர்
பரிமுகத்தவுணர்மேதிப் பனைமுகத்தவர்கள்பற்றி
எரிமுகத்தவுணரசீறி யெழும்புலிமுகத்துககளவ
ரரிமுகத்தவுணர்வெள்ள மாயிரஞ்சென்றவன்றே.

இ-ள். யானைமுகத்தையுடையவர்கள் நிவாதகவசர்கள் காலகேயர்கள் குதிரைமுகத்தையுடையவர்கள் எருமைமுகத்தை யுடையவர்கள் நெருப்பெரிந்துகொண்டிருக்கிற முகத்தையுடையவர்கள் புலிமுகத்தையுடையவர்கள் சிங்கமுகத்தை யுடையவர்களாகிய அசுரர்கூடிய ஆயிரம் வெள்ளம் நடந்ததுகள்-எ-று. ௰௬

பாய்பரியதனிற்பாதி பரிகளிற்கரிகள்பாதி
காய்கரியதனிற்பாதி கடும்பரிக்கொடிஞ்தேர்செல்லப்
பேய்கருங்கொடிகளாடப பிணங்கவெண்கொடிகளாட
வேய்களப்பறைகளார்ப்பக் குழுதினன்விக்தைகானில்

இ-ள். இப்படி ஆயிரம்வெள்ளங்காலாட்கள் புறப்பட்டவுடனே ஐந்நூறுவெள்ளங்குதிரையும் இருநூற்றைம்பதுவெள்ளம்யானையும் நூற்றிருபத்தைந்துவெள்ளம் தேரும்நடக்கப் பேய்களும் காக்கைக்கூட்டமும் விருந்தகப்படுமென்று களித்துக்கூத்தாட வெள்ளைக்கொடிகளாடப் புள்ளாங்குழல் பேரிகை இவைமுதலான வாத்தியமுழங்க மகிடாசுரன் தம்மையிருக்கிறகாட்டில் வந்துசேர்ந்தான்-எ-று. ௰௭

அடலவன்வரக்கண்டஞ்சி யடைந்துமைக்கபயமென்று
படருறுமுனிவர்கூற வுமையவள்பயங்கெடுத்து
விடலுடனருகுநின்ற விந்தையைவிரும்பிநோக்கிக்
கடகமொண்டெறிவாயென்றாள்விடைகொடுபெயர்ந்தாள்கன்னி

இ-ள். வல்லமைபொருந்திய மகிடாசுரன் வருவதைப்பார்த்து பயப்பட்டு ஓடிவந்து பார்வதிக்கு அபயமென்று முனிவர்கள் முறையிட்டுச்சொல்ல அம்மை அவர்களுடைய பயங்களைத்தீர்த்துத் தன்சமீபத்தில்நின்ற பெருமைபொருந்திய துர்க்கையைப்பார்த்து உன்னுடையசத்தியினாலே அவ்வசுரனைக் கொன்றுவிடென்றுசொல்ல உத்தரவுபெற்றுப்புறப்பட்டாள் துர்க்கை-எ-று. ௰௮

ஆளிமேற்கன்னிசெல்ல வருணநாயகிமுன்செல்ல
காளிதுந்துமிபின்செல்லச் சுந்தரிகணங்கள்செல்ல
ஞாளிமேல்வடுகர்செல்ல நான்முகிமுதலாமாதர்
தூளிமேற்செல்லத்தங்கள் விடையினமேற்றாசிச்சென்றார்.

இ-ள். துர்க்கை ஆளிவாகனத்திலேறிக்கொண்டுபோக அருணநாயகியென்பவள் முன்னேபோகவும காளி துந்துமி என்கிற இருவரும் பின்னேபோகவும பார்வதியின் கணங்களும் சுவானவாகனத்தின் வயிரவர்போகவும் அபிராமி முதலாகிய மாதரெழுவரும் தங்கள் தங்கள் வாகனங்களிலேறிகொண்டு தூசிப்படையாகத் தூளெழும்பப்போனார்கள்-எ-று. ௰௯

சென்றுதோமரத்திற்குன்றிற் சிலைகளிற்படையிற்கையிற்
கன்றிடமகிடன்சேனை பாதியைக்கணத்திற்சாய்த்தார்
வன்றிறன்மகிடன்சேனைத் தலைவருமமகிடன்றானுங்
குன்றெனவெதிர்ந்துகன்னி படையெலாந்துரத்திக்கொன்றார்.

இ-ள். இப்படித் துர்க்கைசேனைகள்போனவுடனே உலக்கையினாலும், மலைகளாலும் வில்முதலாகிய ஆயுதங்களாலும் கைகளினாலும் கோபத்துடனே போர்செய்கிற மகிடாசுரனுடைய பாதிசேனையையொரு நொடிப்பொழுதிலே கொன்றுவிட்டாள் மகிடாசுரனும் அவனுடைய சேனைத்தலைவர்களும் மலைபோலெதிர்த்து துர்க்கையின் சேனைகளையெல்லாந் துரத்திக்கொன்றார்கள்-எ-று. ௨௰

துந்துமிமுதலாநால்வ ருடைந்தனர்சூலியான
சுந்தரிவராகியாறு முகத்தவடிகிரிகையா

ளிந்திரமறையாளென்னு மெழுவருமறைந்தார்ஞாளி
யுந்தினருடைந்தாரகன்னி மனந்தளர்ந்துமையேயென்றாள்.

இ-ள். அசுரனதுபடைகள் எதிர்த்துயுத்தஞ்செய்த அளவில்துர்க்
கி,காளி,மதங்கி, சண்டி எனகிற நான்குசத்திகளுந் தோற்றார்கள், சூலி
நீலகண்டி, வராகி, சண்முகி,திகிரிக்கையாள்இந்திரைமறையாளென்கி
ற ஏழுமாதரும் யுத்தஞ்செய்யமாட்டாமல் காட்டிலொளித்தார்கள் சு
யானவாகனதகைதயுடைய வயிரவாகளும தோற்றார்கள் தூக்கையான
வள்மனந்தளர்ந்து உமாதேவியேயென்று தியானித்துநின்றாள்-எ-று.

உறுதுணையுமையேயென்னுப் பொழுதில்யோகினிகள்வானி
லறுபதுநாலுகோடி யதிர்தலெழுந்தழலின்மாரி
இறுதியாயுநளச்சேனை யிடிமழைசொரிகையாலே
குறுகியமகிடன்சேனைத் தலைவருமகொதித்துச்சென்றார்.

இ-ள். துர்க்கை அம்மையே துணையென்றபோது அறுபத்துநான்
குகோடி யோகினிகள் ஆகாசத்திலார்ப்பரித்தெழுந்து நெருப்புமழை
யும், இடிமழையும் சொரிந்தபடியினாலே மகிடாசுரனுடைய சேனைக
ளெறிந்துபோயின அப்பொழுது சேனைத்தலைவர்கள கோபித்துச்ச
ண்டைசெய்வார்கள்-எ-று. உஉ

கலிவிருத்தம்.

அருசிகன்றனைச் செற்றனளாரணி
மருவுகாந்தனை மாய்த்தனள்வாரணி
கரனைவென்றனள் வேலுடைக்காரணி
நரகனுருயி ருண்டனளாரணி.

இ-ள். அப்படி மகிடாசுரனுடைய சேனைத்தலைவர்கள் எதிர்த்தவு
டனே அபிராமியென்பவள் அருசிகனென்பவனைக் கொன்றாள் வார
ணியென்பவள் காந்தனென்பவனைக் கொன்றாள சண்முகியென்பவள்
கரனென்னும அசுரனைக்கொன்றாள் நாரணியென்பவள் நகரனெனும்
அசுரனைக்கொன்றாள்-எ-று. உங

சூலபாணி தொலைத்தனன்மிண்டனைக்
கொலமாமுகி சண்டனைக்கொன்றன
ளாலவுணி மதுனையழித்தன
ணீலனுருரு ரிந்திரைநீககினள்.

இ-ள். சூலக்கையாளென்பவள் மிண்டனென்பவனையும் வராகிசண்
டனென்பவனையும், நீலகண்டிமதுவென்னு மசுரனையும் இந்திரைநீல
னென்பவனையுங் கொன்றார்கள்-உ-று. உச

துந்துமிக்கொடி சோணிதவூணனைச்
சந்துமிக்கும் படிக்பதைகாட்டினள்

நந்துமிக்க நிகர்த்தருணாசலை
தந்துமிக்கெரிக் கண்ணனைவாட்டினாள்.

இ-ள். நந்துமிக்கொடியையுடையவள் சோணிதனுணனென்பவனை த்தலைபறும்படி தண்டாயுதத்தாலடித்தாள் சக்கரத்தைகையிலேதரித் த அருணாசலையென்கிறவள் அக்கினிக்கண்ணனைக்கொன்றாள்-எ-று.

கபிடவன்புகைக் கண்ணனிருவருஞ்
செயிரின்மாளுறச் சிந்தினள்சுந்தரி
நெய்மிமிக்க நிணம்பிடிவேலினண்
மயிடவன்முகங் கண்டெதிர்வந்தனள்.

இ-ள். சுந்தரியென்கிறசத்தி கபிடவனையும் புகைக்கண்ணனையுங் கொன்றாள் நெய்யைபொழிகின்ற நிணம்பொருந்தியவேலாயுதத்தை யேந்தியதுர்க்கை மகிடாசூரனைக்கண்டு எதிர்த்துவந்தாள்-எ-று.

வெங்கடாமுகன் மேவலுமாதர்க
ளங்களாயுதங் கொண்டுதடுத்தனர்
சிங்கவூர்தி யவனெதிர்சென்றுகை
சங்கையூதினன் மேருசலிக்கவே.

இ-ள். வெப்பம்பொருந்திய எருமைக்கடாமுகத்தையுடைய அசுரன் யுத்தத்துக்குநேரிட்ட அளவில் சத்திமாதர்களும் தங்களாயுதங்களினாலே அவன்விட்ட ஆயுதங்களை விலக்கினார்கள் அவ்வேளையில்சிங்க வாகனத்திலேறிவந்து துர்க்கையவளுக் கெதிரேபோய்த் தன்கையிலிருக்கிற சங்கத்தை மகாமேரு அசையும்படி வாயில்வைத்தூதினாள் என்றவாறு. ௨௭

செருவிலங்கவள் சங்கொலிசெய்திட
ஒருவரின்றி யவுணருறங்கினர்
பெருவரங்களிற் பெறுசரங்களை
இருவருஞ்சொரிந் தார்மழையென்னவே.

இ-ள். வல்லமைபொருந்திய சிங்காவனத்தையுடைய துர்க்கை சங்கத்தொனிசெய்ய அசுரர்களொருவரும் இல்லாமல் மயக்கத்தையடைந்தார்கள் அருமையாகிய தவத்தினாலே பெற்றுக்கொண்டபாணங்களை இருவரும் மழைபோலச்சொரிந்தார்கள்-எ-று. ௨அ

எந்தவெந்தக் கணையவனேவினும்
அந்தவந்தக் கணையாலறுத்தனன்
விந்தைமீண்டிரு வெம்பிறைவாய்க்கணை
சிந்தினளவன் சென்னியழுந்தவே

இ-ள். எந்தெந்தப்பாணங்களைத் துர்க்கைவிட்டாலும் அவைகளை அந்தந்தப் பாணங்களினாலே மகிடாசுரன் அறுத்துத்தள்ளினான் அதன் பிறகு இரண்டு அர்த்தசந்திரபாணங்களை அவனுடையசிரத்தில் அழுந்தும்படியாக விட்டாள்-எ-று. ௨௯

வெம்புசெம்புனல் வெள்ளமுறுக்கிய
செம்புபோலச் சிதறவிடுங்கணை
யம்புபோல விருக்கினுமாங்கவன்
கொம்புபோல விளங்கினகோடியே

இ-ள், இரத்தவெள்ளம் உருக்கினசெம்புபோல சிதறி விழவிட்ட அர்த்தசந்திரபாணங்கள் அம்பாகவிருந்தாலும் அசுரன்தலையிலே முளைத்திருந்த கொம்பிரண்டுபோல் தலையிலேவைந்து அழுந்திவளைந்து தோன்றின-எ-று, ௬0

வெற்றிகொண்டவள் வில்லைமுறித்தனை
னுற்றவம்பிற் சிலைநுதன்மோதினுள்
கொற்றவம்பின் குலங்கள்விடுத்தவ
னெற்றியிற்கண் ணழலினிமிர்த்தவே

இ-ள், ஜெயங்கொண்டவளாகிய துர்க்கைகையிலிருந்த வில்லையிரண்டாகமுறித்தான் அந்தவில்லினுலே அசுரனுடைய நெற்றியிலே அடித்தாள் மிகப்பலம்பொருந்திய அம்புகளைவிட்டவனாகிய அந்தமகிடாசுரன்நெற்றியிலே சுவாமியினுடையகண் நெருப்புப்போலச் சுறுக்கென்றுதாக்கியது-எ-று, ௬௧

சாபவெஞ்சிலை போகத்தரிப்பளோ
கோபமிஞ்சிக் கொதித்தெழுகூற்றத்திற்
தீபமென்னத திகிரியொன்றேவியே
பாபகாரி தலைவிழப்பண்ணினுள்

இ-ள், துர்க்கைவில்லொடிந்தும் பொறுக்காமல் அதிககோபங்கொண்டுகொதித்தெழும்பும் எமன்போல் பிரகாசிக்கின்ற ஒருசக்ராயுதமவிட்டுப் பாவியாகிய மகிடாசுரன் தலையறும்படிசெய்தாள்-எ-று, ()

கன்னியாழி யெறியக்கடாமுகன்
சின்னபின்னங்க ளாயுஞ்சிதைந்திலன்
முன்னைமாதவத் துண்மையின்மும்மதந்
துன்னுமால்கரி யாயெதிர்தோன்றினுன்

இ-ள், துர்க்கை சக்கராயுதத்தைவிட்டெறிய மகிடாசுரன் தேகஞ்சின்னபின்னமாயும் சாகாதவனுகிப் பூருவகாலத்திலேசெய்த தபோபலத்தினுல் மும்மதங்களைபபொழிகின்ற பெரியயானை யுருவங்கொண்டு எதிராகவந்தெதிர்த்தான்-எ-று, ௬௩

ஆளியேறுசென் றங்கவனுச்சியின்
மூளைவாரி நுகர்ந்ததுமொய்ம்பினுன்
மீளவுங்கதை கொண்டெதிர்வீசினுன்
கூளிநாயகி கூர்மைவேலைவிணுன்

இ-ள், அப்படியானை யுருவங்கொண்டெதிர்த்த அளவில்துர்க்கை யேறுகின்ற ஆளிபோல் அந்தயானையுச்சியிலிருக்கின்ற மூளையைக் கையினாலே அறைந்து தோண்டியெடுத்துத்தின்றது அதனாலேயுஞ் சாகாமற்கையினாலே திரும்பியுந்தண்டாயுதங் கொண்டெறிந்தான் மேன்மேலுக்குக் காரியாயிருக்கிற துர்க்கை கூர்மைபொருந்திய வேலாயுதத்தை விட்டாள்-எ-று, ௧௪

விடந்ததும்பிய வெல்படைவெஞ்சமர்க்
கிடந்ததும்பிய முகனுமிறந்தன
னடைந்ததும்பிக ளாயிரமாயிரங்
குடைந்ததும்பி மராமெனக்குன்றியே

இ-ள், விஷத்தைக்கக்கிக்கொண்டிருக்கிற வேலாயுதம் பாய்ந்தவுடனே யுத்தநிலத்தில்நின்றயானைமுகன அதைச்சகிக்கமாட்டாமல் இறந்துவிட்டான் அனேகமாயிரம்வண்டுகள்குடையவுள்ளேயொன்றுமில்லாமற்றொளையோடுகூடிய அத்திமரம்போல்-எ-று, ௧௫

வீழ்ந்தபின்பரி வேடமதாயெதிர்
போந்துவெங்கதை கொண்டுபுடைத்தனன்
சேர்ந்தவன்கதை யும்மவன்சென்னியு
மாய்ந்தகலகொண் டறுததனாரணி

இ-ள், அப்படிவிழுந்து இறந்துபோனவுடனே குதிரைமுகமுள்ள அசுரனாகி யெதிரேவந்து தண்டாயுதத்தினாலே அடித்தான் அடித்த தண்டாயுதத்தையும் தலையையும் கத்தியினாலே அறுத்துத்தள்ளினாள் துர்க்கையும்-எ-று, ௧௬

அங்கதன்பி னழலுருவாயினன்
கங்கையாயினன் காரிருளாயினன்
பங்கயாசன னாயினன்பங்கய
மங்கைநாயக னாயினனமாயையால்

இ-ள், அதன்பின்பு அசுரன்நெருப்புருவங்கொண்டுவந்தான் அதன்பின்பு சகலபிரளயரூபங்கொண்டும் அந்தகாரமாகியும் தாமரைப்புட்பத்திலிருக்கின்ற பிரமனாகியும் இலட்சுமிநாயகனாகிய விட்ணுவாகியும் எதிர்த்தான் மாயையினாலே-எ-று, ௧௭

ஈதுகண்டவ ளென்செய்வன்மாயையால்
வாதுசெய்தன னென்றுதளர்ந்துமை
பாதநெஞ்சினிற் பற்றினள்பற்றிய
போதிலோர்மொழி விண்ணிற்புகன்றதே

இ-ள், அப்படிஅசுரன் பலபலவடிவங் கொண்டவுடனே பார்த்து மாயையினாலே துன்பப்படுகின்றான் என்னஉபாயஞ்செய்தாலும் சாலே இதற்கென்னசெய்வேனென்று துர்க்கைபார்வதி தேவியி

னுடைய இரண்டுபாதங்களையும் மனதிலேதியானித்தாள் அப்படி பானித்தவுடனே ஆகாயத்திலின்றும அசரீரி ஒருவாக்கியஞ் சொல் லிற்று-எ-று, ௯௮

மாயவேடங்க ளன்றிமகிடமே
யாயபேதி லவன்றலைதள்ளியே
தூயதாளின மிதிக்கத்தொலைந்திடும்
தீயமாயை யெனச்சொலததேறினா்

இ-ள், அனேகவிதமான மாயவேஷங்களல்லாமல் சுபாவமான எருமைமுகரூபங் கொண்டபோது அவன்தலையையறுத்துக் கீழேதள்ளி உனதுபரிசுத்தமாகிய காலினாலேமிதித்தால் தீமைபொருந்திய மாயை தொலைந்துபோமென்று சொல்லத்துர்க்கை தேறினாள்-எ-று, ()



மட்டின்மாயை வடிவின்மலைந்தபின்
னெட்டிலைத்தலைச் சூலத்தினீக்கினாள்
துட்டன்மேதிய தாய்ப்படைதொட்டனன்
வெட்டிவீழ்த்தி யடியின்மிதித்தனள்

இ-ள், அளவில்லாதமாயரூபங்கொண்டுவர நெடுமையான தவளுடைய சூலத்தினாற்குத்திக்கொன்றாள் பின்பு அத்துஷ்டன் பழையஎருமைக்கடாமுகத்தையுடையவனாகி ஆயுதங்களைப்பிரயோகஞ்செய் அளவில் அவைகளை விலக்கிவாளாயுதத்லால் தலையைவெட்டித் ஸ்ரீக்காலினாலே மிதித்துக் கொன்றாள் துர்க்கை-எ-று,

ஒப்பிலாப்பத மூன்றிமிதித்திடில்
தப்பிமாயை தவிர்ப்பதுபாரமோ
வம்பதத்தை நினைக்கினுமாணவஞ்
செப்புகாமிய மாயையுந்தீர்க்குமே

இ-ள், துர்க்கைபாதத்தை நினைத்தாலும் அதைநினைத்தவருடைய ஆணவம்மாயைகாமியம் என்கிறமும்மலங்களையும் நீக்கிவிடும் அப்படிப்பட்ட ஒப்பில்லாத பதம்பரிசமாகும்படி ஊன்றிமிதித்தால் பொய்யாகிய மாயைமாத்திரம்பாரந்துதவிர்ப்பது பெரிதோ-எ-று, ௬௧

போதவானவர் பூமழைபெய்தனர்
மேதிமாமுகன் மெய்க்கதியுற்றனன்
தீதிலாதவன் சேங்களந்தன்னிலோர்
சோதிலிங்க மிருந்ததுதோன்றவே

இ-ள், தேவர்கள்மிகவும் புட்பவருஷம் பொழிந்தார்கள் மகிடாசுரனும் அம்மைகையினுலிறந்ததனுலே மெய்மையான மோட்சத்தைச் சேர்ந்தான் யாதொருகுற்றமுமில்லாத அவன்சிவப்பாகிய கண்டத்திலே ஒருபடிகலிங்கமிருந்தது-எ-று, ௬௨

கண்டமட்டிலக் காக்கொளக்கார்நவ
கண்டமட்டிற் புரந்தகடாமுகன்
கண்டமட்டி லிருந்தகடவுளைக்
கண்டமட்டி லெடுத்தனள்கன்னியே

இ-ள், நவகண்டமட்டும் ஆண்டமகிடாசுரனுடைய கழுத்தை இலக்காகவைத்துத் துர்க்கை அறுக்கஅக்கழுத்திலிருந்தபடிகலிங்கத்தைக்கண்டபோதே கையினுலெடுத்தாள்-எ-று, ௬௩

கொண்டுசென்றுமை கோகனகப்பதங்
கண்டுபோற்றிக் கடவுளையீந்தனள்
வண்டுவார்குழல் வாங்கினள்செங்கையி
லண்டநாயகன் விட்டிலனுசையால்

இ-ள், அப்படிப்பட்ட படிகலிங்கத்தை எடுத்துக்கொண்டுபோய் உமாதேவி பாதங்களைத்தொழுது நடந்தகாரியமெல்லாம் சொல்லிச் சுவாமியைக்கொடுத்தாள் வண்டுகள்சூழ்ந்திருக்கின்ற கூந்தலையுடைய கையினுலே பார்வதிவாங்கினுள் தேவர்கட்கெல்லாம் நாயகராக விருக்கின்றசுவாமியும் அம்மைகைமேல் வைத்திருக்கிற ஆசையினுலே கையை விடாமற் கெட்டியாகவிருந்தார்-எ-று, ௬௪

தாயுமங்கது கண்டுமகிழ்ந்திறை
யேயவென்கரம் பற்றியதேதென
வாயையங்கை புதைத்துமகபதிக்
காயிரங்கண ளளித்தவன்கூறுவான்

இ-ள், பார்வதி அந்த ஆச்சரியத்தைப்பார்த்து மகிழ்ச்சியடைந்து சுவாமி என்கையை விடாமலிருந்தது எதனாலே என்றுகேட்கத் தேவேந்திரனுக்கு ஆயிரங்கண்கொடுத்த கௌதமர்வாயைக்கையினாலே பொத்திக்கொண்டு அம்மைக்குச் சொல்லத்தொடங்கினார்-எ-று,

அறுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

முன்னமகத்தியன்முதலா முனிவர்களைப்பதின்மாவர முனிப செல்ல, வன்னவன்றன்றவமதிப்பா வவமதிப்பாயிருந்திடவு மவனை நோக்கிப், பொன்னனையதவமுனிவர் வெகுண்டுரைப்பா ரெனைமிக ழ்ந்த புன்மையாலே, உன்னரியகருவேரா யினிப்பிறக்கக்கடவாயென் றுளையச் சொன்னார்.

இ-ள், முற்காலத்திலே அகத்தியர் முதலான ஐம்பதுரிஷிகள் கூடி வரமுனியென்பவருடைய ஆசிரமத்திற்குப்போனார்கள் அந்தவரமுனிதம்முடைய தபோபலத்தினாலே மரியாதையாக உபசாரம்செய்யாமலிருந்தார் அப்போது அவரைப்பார்த்து பொன்போலும் அரியதவத்தையுடைய எல்லாமுனிவர்களும்கோபித்து எங்களை அவமரியாதை செய்தபடியினாலே யாவராலும் குறைவுசொல்லப்பட்ட கரியஎருமைக் கடாவாகப்பிறப்பாயென்று அவர்கள்வருந்தச்சபித்தார்கள்.

அருந்தவரைம்பதின்மருகன் றுரைத்தமொழிக் கொடுமையைக் கண்டச்சமாகி, யிருந்தவனுமெழுந்துபணிந் தெனதுபிழை பொறுத் தருள்வீ ரென்றனந்தப், பெருந்தவான்புடனுரைப்பார் மகிடமுகத் தவுணனெனப் பிறந்துபினனர், திருந்தவரனிடம்வேண்டித் தவம்புரி யுமுமைகணத்திற் றீர்ப்பாளென்றார்.

இ-ள், அரியதவத்தினையுடைய ஐம்பதுமுனிவர்களும் அன்றுசொல்லிய சாபத்தின்குரூரத்தைக்கேட்டு பயப்பட்டு பெருமைபொருந்தியதவஞ்செய்த வரமுனியும் எழுந்துவந்தனஞ்செய்து முனிவர்களே தெரியாமல் நான்செய்தபிழையைப் பொறுத்துக்கொள்ளுங்க ளென்றார் அதற்குமுனிவர்கள் நீர் எருமை முகம்பொருந்திய அசுரனாகிஅரசாளுங் காலத்தில் சுவாமி இடப்பாகம்பெறும்படி தவஞ்செய்து கொண்டிருக்கிற அம்மை உம்முடையசாபத்தை நொடிப்பொழுதில் தீர்ப்பாளென்று சொன்னார்கள்-எ-று. ௪௭

ஆங்கவர்சொற்படி யிலவனசுரர்பெருங் குலத்திலுதித்தரசனாகி, யோங்கியபேர்மகிடனெனக் கொடுங்கோன்மைபுரிகுதலு மொருநாள் வேட்டைத், தீங்குசெயவனத்திலடைந் தழற்பசியாலிளைத்தோடித்திரிந்தானங்கே, நீங்கரியவருச்சனைசெய் மன்னதனென ரொருமுனிவ னேர்ப்பட்டானே

இ-ள், அந்தமுனிவர்கள் சொன்னபிரகாரம் வரமுனி அசுரர் திற்பிறந்து அரசனாகி மகிடாசுரனென்கிறபெயரையடைந்து

முகாலரசு செய்துகொண்டுவருகையில் ஒருநாள்வேட்டையாடும்படி வனத்தில்வந்து மிகுந்தபசியினாலே இரையொன்றும் அகப்படாமல் ஓடித்திரிந்துகொண்டிருந்தான் அவ்விடத்தில் நீங்குதற்கரிய தவஞ் செய்கிற மன்னதரிஷியென்பவன் எதிர்ப்பட்டான்-எ-று. ௪௮

மன்னதனுமவனையிவளை கரத்திலிங்கத்துடன் விழுங்கி மகிழ்ந்து போனான், பின்னதனுலவன்மிடற்றிற் சிவனுருவமிருந்ததந்தப் பெருமையாலே, புன்னதமாயினன்சிவனு முருத்தரித்தவுடலுமிறை யுருவமன்றோ, வன்னதனுல்வினையடந்த ததுவிரும்பிநவதீர்த்தமாடி லென்றான்.

இ-ள். எதிர்ப்பட்ட அம்மன்னதனென்கிற ரிஷியைக் கையிலிருக்கும் இலிங்கத்தோடே இமமகிடாசுரன் எடுத்து விழுங்கிவிட்டுப்போனான்பின்பு அவன்கண்டத்திற் சிக்கிக்கொண்டு படிகலிங்கமிருந்ததனாலிருந்த பெருமையையடைந்தான் அந்த இலிங்கமிருந்த கண்டத்தை யுடையவனுமசிவசொரூபமன்றோ அவனைக்கொன்றபடியினாலே பாவம சம்பவித்தது, நீநவதீர்த்தங்களாடினால் அப்பாவம்போமென்றார் கௌதமர்-எ-று. ௪௯

அன்புமுநியுரைத்தளவிலொரு மொழியந்தரத்திலெழுந் தரிய தீர்த்த, மொன்பதுமவ்விடத்தில்வரு மவைவருமாறியற்றுமெனவுமையும்விந்தை, தன்பதும்முகநோக்கி யுனதுகைவாளெறிந்து கங்கைதருவாயென்றாள், வன்பணிலமெடுத்தாளுந் தொழுதுகைவாணிலத்தெறிந்துவாங்குமபோதில்.

இ-ள், மிகவும்பத்தியையுடைய கௌதமர் இப்படிசொன்ன அளவில் பாவந்தீர ஆடுதற்கு ஒன்பதுதீர்த்தமும் இவ்விடத்தில் வரும்படிச்செய்யென்று ஆகாயத்திலிருந்துஒருவார்த்தைபிறந்தது அதைக்கேட்டுப் பார்வதியும துர்க்கைமலர்போன்ற முகத்தைப்பார்த்து உன்னுடைய கையிலிருக்கிறவாளினாலே பூமியைப்பிளந்து கங்கைவரும்படி செய்யென்றுசொல்ல ஐயசங்கைகையிற்றரிதத துர்க்கையும் வணங்கிவாளாயுதத்தால் பூமியிலே வீசியெடுத்தபோது-எ-று. ௫0

நவநதியும்பிறவுளநன் னதிகளுமச்சோகந்தீர் நல்லதான, சுவையதிகமுதவுபலதடங்களுமங்கெழுந்தவச்சுனையினூடே, பலமகலவொருமாத முழுகியிருந்தாள்கரத்தைப் பற்றிநீங்காச், சிவவடிவுமகன்றது தன்னுளமகிழ்ந்துகரையில்வந் தாடேவர்போற்ற.

இ-ள், ஒன்பதுதீர்த்தங்களும் மற்றுமுள்ளநதிகளும் விடாயாறும்படி உதவிசெய்யும் நல்லருசியைக் கொடுக்கிற அநேகந் தடாகங்களும் உண்டாயின அந்நதிகளில் ஒருமாதவரைக்கும் அம்மைகுற்றமறுமபடி ஸ்நானஞ்செய்து கொண்டிருந்தாள் கையைப்பற்றிக் கொண்டிடாம லிருந்த இலிங்கமும்நீங்கிற்று அப்போது தேவர்கள்போற்றும்படி மனமகிழ்ந்து அம்மைகரையில்வந்து சேர்ந்தாள்.

அருவுருவாமொருசிவனை யதன்கரைமேற்புறத்திருத்தியருச்த்தாணம், விருவினையுந்தவிர்ப்பானுக் கெனபாவந்தீர்த்தாரென் றியற்பேரிட்டாள், திருமருவும் பெருஞ்சுனைக்குமினியகட்க தீர்த்தமெனத் திருப்பேரிட்டாள், குருமணியையருணகிரிப் பெருமானைத் தொழக்கைக் கோயில்சார்ந்தாள்

இ-ள், அருவமாயும் உருவமாயும் விளங்கும்ஒப்பற்றசிவனை அக்கரையிலே எழுந்தருளச்செய்து அர்ச்சனைசெய்தாள் நம்முடைய நல்வினை தீவினை இரண்டையும்நீக்குகின்ற சுவாமிக்கு என்பாவந் தீர்த்தாரென பேரைந்தரித்து அழகிய அர்ச்சுனைக்குக் கட்கதீர்த்தமென்று பெயரிட்டாள் நிறம்பொருந்தியமணியொத்தவரை அருணாசலத்தில் எழுந்தருளியிருக்கின்ற பரமசிவனைவணங்கும்படியாகப்பொன்மயமாகியகோவிலுக்குப் போனாள்-எ-று. ௫௨

முருகுமலரயன்றடத்திற் படிந்துவெண்ணீறணிந்து செங்கைமுடியிற்கூப்பி, யருகுவருங்கோதமனசொற்படி தொழுதுட்புகுந்து கண்ணாரமுதைக்கண்ணுற், பருகிநிலமுறவிழுந்து பணிந்தெழுந்து பரவசமாய்ப் பாடிபாடி, யுருகியுவந்தழுதுயிர்த்து "வலம்புரிந்து"தனது குறையுரைத்துப்போற்றி.

இ-ள். வாசனையுள்ள தாமரைமலரிலிருக்கிற பிரமதீர்த்தத்தில் முழுகி விபூதிதரித்துச் சிவந்தகைகளைச் சிரமேல்வைத்துத் தண்டனிட்டுத்தன்னருகேவருகிற கௌதமர் சொன்னபடி உள்ளேபோய்க் குளிர்ச்சிபொருந்திய அமிர்தம்போன்ற சுவாமியைக்கண்ணாலே தரிசித்துப்பூமியிலே தேகம்பொருந்த நமஸ்காரஞ்செய்து எழுந்திருந்து பரவசமாகிப் பாடியாடி உருக்கமடைந்துகளித்து ஆனந்தக்கண்ணீர்பெருகிப் பெருமூசசெறிந்து வலமாகவந்து தன்னுடைய குறையைச்சொலலி வணங்கினாள்-எ-று. ௫௩

கார்த்திகைத்திங்களிற் றிருநாளாகமத்தின்படி நடத்திக்கனற் கண்ணனைத், தோத்திரம்பண்ணுதலுமொரு சுடர்மலைமே லெழுந்தாரச் சுடரினூடே, யுத்தரியபலகோடி யிரவியெனவொருசோதியெழுந்துமின்னே, வாய்த்தமலைவலமாக நடத்தியென வுரைத்துடனே மறைந்ததன்றே.

இ-ள், கார்த்திகைமாதத்தின் ஆகமத்தின்படி திருநாள்செய்து நெருப்புக்கண்களையுடைய சிவபிரானைப்பணிந்த அளவில் மலைமேலே ஒருபிரகாசமுண்டாகி அதிற்சொல்லுதற்கரிய பலகோடிபாலசூரியப்பிரகாசமாய் சுவாமியெழுந்து பெண்ணே இம்மலையைவலமாக நடத்துவாவென்றுசொல்லி மறைந்துவிட்டார்-எ-று, உத்தரிய பலகோடியிரவி-என்பது, இளஞ்சூரியர் பலகோடி என்றறியவும்.

ரிதனைச்சிலையர்க்கு முனிவனுமப்படி வலமாநடத்தியென்முன் வாரியெனமறைபுகழுக் களகாரிகையுநடந்தனடம் மலர்க்கைகூப்பி பேரிகையுங்காகமுஞ் சல்லரியுமல்லரியும்பெரியவானிற் றாரியமுந்துந்துமியு மத்தளமுங்குடமுழவுந்துவைத்தவன்றே

இ-ள், அகலிகையாகிய பெண்ணைக்கல்லாக்கிய கௌதமரிஷியும் அம்மா அப்படியே வலமாகப்போவென்றுசொல்லச் சமுத்திரம்போல்வேதகோஷ்டமுழங்கவும் ஆகாயத்தில் பேரிகை காகளம் சல்லரிமல்லரி முரசு துந்துமி மத்தளம குடமுழா இவைமுதலான வாத்தியங்கள் முழங்கவும் பார்வதி இரணடுகையுங் கூப்பிக்கொண்டு நடந்தாள்-எ-று. ருரு

அரம்பை யூர்வசி முதலா மகபதிநாட்டரிவையர்களாடல்காட்டக்குரும்பையென நெருங்குமுலை வரையாமங் கையர்மலரின்குப்பைகொட்டக், கரும்புகனிந்தனையமொழிப்புனலரமங்கையரிரட்டுங்கவரியாட்ட, விரும்புருகநகைபுரியுமரவமினார்மணிவிளக்கமெடுத்துநீட்ட.

இ-ள், இப்படி பார்வதிவலமவரும்போது அரம்பை ஊர்வசி முதலான தெய்வலோகத்துப்பெண்கள் நாட்டியமாடத் தென்னங்குரும்பையொத்ததனத்தையுடைய மலையரமகளிர் அம்மை நடந்துவரும்போது பாதம்பூமியிலேபட்டு உறுத்தாமலிருக்கப் புட்பங்களைக் குப்பையாகக் கொட்டக் கருப்பஞ்சாறுபோலும் வார்த்தையையுடைய நீரமங்கையர்சாமரமெடுத்துவீச இரும்புமுருகும்படி நகைசெய்கின்ற நாகலோகத்துப்பெண்கள் இரத்தின தீபங்கையிலெடுத்துக் கொண்டுவர-எ-று. ருசு

இதுமுதலிரண்டுபாடல்குளகம்.

முண்டகமணடபம்பயிலும்புலோமிசையு முறுந்தவளமுளரிமானும், சண்டகமும்வழிப்பாலு மொழித்துவர நிலமகடன்கைக ணீட்ட, அண்டர்குலமடந்தையரு முனிவர்குலவனிதையருமருவிப்பூந்தேன், வண்டலிடுஞ்சேறகற்றி மலரினறுந்துகள்சொரிந்து வழிகளக்கா,

இ-ள், தாமரைப்புட்பமாகிய மண்டபத்திலிருக்கிற இலட்சுமியும இந்திராணியும் வெண்தாமரைபூவிலிருக்கிற சரஸ்வதியும் போகிறவழியிலிருக்கும முள்ளுகளையும் கல்லுகளையுந் தளளிக்கொண்டுவரப் பூமிதேவி கைகளைநீட்டிச் சாக்கிரதையாகத்தாங்க தேவஸ்திரீகளும் முனிவர்களுடைய ஸ்திரீகளும் புட்பத்திலிருக்கின்றதேனருவினாலே வழிச்சேற்றைநீக்கி புட்பத்துக்குள் ளிருக்கிற பராகப்பொடிகளைக் கொட்டி நல்லவழியாகச்செய்ய-எ-று. ருஎ

...ன்றினதுன் னிருச்சரணம்பொறுத்தருள்வாயென மங்கைகண் ...ப்ப, மன்றலத்திசை யனுகியமுற்கிரியை யெதிர்முக மாவண

ங்கிப்போற்றி, தென்றிசையு நிருதிபெருந் திசைவினையுங்கடந்து பூட திசையிற்சென்றாள், குன்றவிலாப்புகழாறு மழைவிடைமீ தினிற்க ட்சிகொடுத்துப் போனான்,

(இ-ள்) கங்கை யானவள் அம்மா பார்வதி உன்பாதமிரண்டும் பூமியிலேபட்டுக் கன்றிபோயவிட்டன, பொறுக்கவேண்டுமென்று இரண்டு கைகளையுங்கூப்ப அழகிய அக்கினி திசையிலேவந்து அக்கினிமலையை எதிர்முகமாகத்தொழுது தெற்குத்திசையும் நிருதிமூலையுந்தாண்டி மேற்குத் திசையிற்போனாள் குறைவிலலாத கீர்த்தியையுடைய சுவாமியும் இளமைதங்கிய ரிஷபவாகனத்தில் எழுந்தருளிவந்து தரிசனங்கொடுத்து நடந்தார்-எ-று. (ருஅ)

நாற்றிசையும் போற்றிசையும் புகழணியண்ணாமலையான் னடத்தாள்போற்றி, மேற்றிசையுங் காற்றிசையுங் கடந்துவடதிசையணுகி விரும்பியேத்தி, யேற்றிசையு மிறைதிசையு மகிழ்ந்துகுணதிசையடர்தாளிமயவெற்பிற, சேற்றிசையுமனவழலை வலம்புரிந்தசெயல் போலச்செறிந்ததனறே

(இ-ள்) நாலுதிக்கும வணங்குகின்ற கீர்த்தியையுடைய அருணாசலேசுரது நடனபாததைவணங்கி மேற்குத்திசையும் வாயுதிசையுந் தாண்டி வடதிசையில மறுபடியுந்தொழுது எருதிலேறுகின்ற ஈசான்னுடையதி சையைக்கடந்து கிழக்குத்திசைக்கு வந்தாள் அப்படிவந்தது இமோற்பர்வதத்தில சுவாமிகலியாணஞ்செய்தபோது ஓமாக்கினியை வலம்வந்ததுபோ லிருந்தது எ-று. (ருகூ)

கலிநிலைத்துறை

பானுகைம்பனகைச் சஙகொலிநெடியமாலபணிதல்
தானுகம்பலைநாரதாவீணையினரவம
வானதுந்துமிகம்பலைதிசையெலாமறைக்க
தேனிறைந்திமலாமழைபிமையவர்சிந்த

(இ-ள், பானுகம்பனென்பவன் தன்னுடைய ஆயிரங்கைகளினுஞ் சங்கத்தைவைதது ஊதுகிறஒலியுமவிட்டணுமதுசங்கத்தைவாயிலவைத்து ஊதுகிறசத்தமும நாரதாவீணையை வாசிக்கிற சததமும் ஆகாயதுந்துமியி னுடையசததமும திசைகளெல்லாஞ் செவிபெடச்செயதன தேனிறைந்த புஷ்பவருஷங்களைத் தேவர்கள்சொரிய-எ-று. (சுய)

இதுமுதன்மூனறுபாடலகளுங்குளகம்.

கற்றவாசடையிளம்பிறைநெடுநிலாககமழப்
புறறாமணியிளவெயிலவிரிததிடப்புவியைப்
பெற்றமாதினுக்கொருபுரமளிததிடபபிடித்த
வெறறுநூலெனப்புரிபூணூன்மார்பகத்திலங்க.

ா, கற்றையாகிய நீண்டசடையில் தரிக்கப்பட்ட இளமையாகி நெடுமையான சநதிரிகைபிரகாசிககவும ஆபரணமாகிய

யிருக்கின்ற சர்ப்பத்தின் சிலையிருக்கின்ற மணிக்காந்தியை விரிக்கவும் உலகமாதாவாகிய பார்வதிக்குப் பாதிசரீரத்தைக் கொடுப்பதற்காகப் பிடித்தளற்ற நூல்போல் புரியாகியபூணூல் மார்பிற்பிரகாசிக்கவும.எ-று. (சுக)

பிறப்பிலாவரனமறையெலாமளவிடாபெரியோ
னிறப்பிலாவிறைவிடையின்மேலினிகெழுந்தருள
வறத்திருகியயடிபணிந்திறைஞ்சினளனைதனுந்
துறகுலன்னனுமவளுடனிவையிவைசொல்லும்

இ-ள், பிறப்பில்லர்தமூர்த்தி அநேகவேதங்களாலும் அறியப்படாதவர் பிறப்பிலலாதபரமசிவன் ரிஷபவாகனத்தி லெழுந்தருளத் தருமம்வளாகின்ற பார்வதி அச்சுவாமி பாதத்தைத்தொழுதுவணங்கினுள் எலலாவற்றையும் நீக்கியகடவுள் அவவம்மையோடு சொலலுவார்-எ

பெண்ணுமாணுமாயுலகுயிர்ப்பொருளெலாம்பிரித்தோ
மண்ணிதாகியபீடமுமிலிங்கமுமானோ
மென்றுநீயெனநானெனவிரண்டிலைமரமு
முணணிலாவியவயிரமுகிர்தடனுறைவோம்.

இ-ள், உமையேநீயும்நானும்பெண்ணுமாணுமாகிஉலகத்தில்அநேகமிருவாகினோ வேறுவேறுண்டாக்கினோம் சமீபமாய் ஆவிடையாரும் இலிங்கமுமானோம நீயென்றும்நானென்றும் வேறுபேதமில்லைமரமுநற்குளவேயிருக்கிறவயிரமும்போல் ஒன்றாய்ச்சேர்ந்திருப்போம்

அங்கம்யாவுநமபொருட்டுவிட்டிமயவெற்படைந்தா
யிங்குநாமுனக்கொருபுறமளிப்பதேயிபறகை
மங்கையேநமதிடப்புறந்தனையெனமகிழவுற
நங்கையாளணைத்தருளினனுருகியொன்ருனர்

இ-ள் தேகத்தைவிட்டு நம்பொருட்டாக இமயபாவதத்திலேவந்து பிறந்தாய அவ்விடத்தில்நாம் உமக்குஒருபாகங்கொடுப்பதுசுபாவமே பெண்ணேநமமுடைய இடப்பாகத்திற்சேர்ந்திருவென்றுசந்தோஷமடைந்து கையிலே அணைத்துக்கொண்டார் இரண்டுதேகமும் உருகி ஒருதேகமானுர்கள் அம்மையுபசுவாமியும்-எ-று (சுச

அடுத்தசெஞ்சடையொருபுறமொருபுறமளகா
தொடுத்தகொன்றையோர்புறமொருபுறநறுந்தொடையல
வடித்தசூலமோர்பறமொருபுறமலர்க்குவளை
யிடத்திலார்கழலொருபுறமொருபுறஞ்சிலம்பை.

இ-ள், அப்படியிருவரும் உருகிச் சுவாமியினுடைய பாதியும் அம்மையினுடையபாதியும ஒருதேகமானபோது ஒருபக்கத்திற் சிவந்த மஞருபககம கூந்தலும் ஒருபக்கம் கொன்றைமாலையும் ஒரு

ம்புஷ்பமாலையும் ஒருபக்கம் சூலமும் ஒருபக்கம் நீலோற்பலபுஷ்பம் ஒருபக்கம் வீரகண்டாமணியும் ஒருபக்கம் சிலம்புந்தோன்றின.

பச்சைவன்னமற்றொருபுறமொருபுறம்பவளம்
கச்சுலாமுலை யொருபுறங்கவின்மார்
பச்சைநீங்கியவரமுமொன்றபயமொன்றங்கை
இச்சையாமிவருறுதலகண்டிறைஞ்சினரிமையோர்

இ-ள். ஒருபுறம் பச்சைநிறமும் பவளநிறமும் ஒருபுறம் கச்சணிந்தனமும் ஒருபுறம் அழகானமார்பும் ஒருபுறம் அபயமும் ஒருபுறம் வரதமுமாகிய கைகளாக ஆசையோடு இருவரும் பொருந்துதலைப்பார்த்துத் தேவருமவணங்கினார்கள்-எ-று.

இவ்வாறு இவாநின்ற கோலத்தைச் சேரமான்பெருமானும் வலந்தான் கழலிடம்பாடகம் பாம்புவலமிடமே கலநதான் வலநீறிடஞ்சாந்தெரிவலம்பந்திடமென் பலந்தார்வலமிடமாடகம் வேலவல மாழியிடஞ்சலந்தாழ் சடைவலந் தண்ணங்குழல் வலஞ்சங்காற்கே, எனப் பொன்வண்ணத்தந்தாதியில அருளிச்செய்தலானுமறிக. சூசு

இந்தமாக்கதைபடித்தவர்செவிகளிற்கேட்டோர
சந்தனசலமுனியினிற்றமிழ்க்கடல்கடப்பார்
மைந்தரோமுதறகிளையுடனுலகினில்வாழ்வார்
பநதபாசமற்றழிவிலாப்பரகதிபெறுவார்

இ-ள் இக்கதையைப் படித்தவர்களும் செவியிற் கேட்டவர்களும் சநதன விருட்சங்கள்சூழ்நத பொதியமலையி லிருக்கின்ற அகத்தியர் போல தமிழ்க்கடல கடபபார்கள சந்தன பாக்கியத்தோடுஞ் சுற்றத்தாரோடும் உலகததில வாழ்வார்கள் தங்களைப்பநதமாகச் சூழ்நதுக் கொண்டிருககிற தீவினையைத்தள்ளி மோக்ஷம்பெறுவாாகள்-எ-று.

முனிவனேயெனைப்பயந்தவனுரைத்ததிம்முறையென்
றனையமாமுனிக்குரைத்தலுமவனெழுந்திறைஞ்சிக்
கனகவச்சிராங்கதனுயர்கதிபெறுங்கதையை
வினவினன்முனிவினவலுமகிழ்ந்திவைவிளம்பும்

இ-ள். நந்திதேவர் மார்க்கண்டேயரைப்பார்த்து என்னைப்பெற்ற பரமசிவன் சொன்ன சரித்திரத்தின் முறையிதுவென்று அவருககுச் சொல்ல அம்மார்க்கண்டேயரிஷி எழுநது தெண்டம்செயது பினபு சுவாமி வச்சிராங்கத பாண்டியன உயர்வாகிய மோக்ஷம் அடைநத கதையைச் சொல்லுங்களென்றுகேட்க நநதிதேவர் சந்தோஷமடைந்து சொலலத்தொடங்கினார்-எ-று. சூஅ

ஐந்தாவதுஇடப்பாகம்பெற்றசருக்கம்

முற்றிற்று

ஆக - திருவிருத்தம் சா.







உ

கடவுள் துணை

## ஆறாவது

# வச்சிராங்கதபாண்டியன்சருக்கம்.

கலிவிருத்தம்.

தோடுகமழ்சந்தன வனத்திடைதிரிந்தே
நீடுதமிழின்சுவை யலைந்துநெடுநாளா
யாடுமயிலன்னவர்க ளன்னநடைபோல
வாடமிசைதென்றலபுகும் வையைவளநாடு.

இ-ள். பூவிதழ்மணக்கும் சந்தனவனத்தில் மத்தியிலே சஞ்சரித்து என்றுமுள தமிழின்மதுரம் அலைந்து நெடுநாளஆடுகிறமயில்போன்ற பெண்கள்நடைபோலே வாடைக்காற்றோடு சம்பந்தமாகத்தென்றற்காற்றுவருகின்ற வையையாறுபொருந்திய பாண்டியநாடு-எ-று.

வெவ்விழிகளாரிடையை மின்னெனமருண்டே
செவ்விபெருகேதகை செறிந்தலருநாடு
நவ்வினையராளக நள்ளிருளமென்றே
மல்லவருகேயலரும் வையைவளநாடு

இ-ள். வெப்பமதைச்செய்யும் கண்களிரண்டையுமுடைய பெண்களிடையைப்பார்த்து மின்னலென்றுமயங்கி அழகு பொருந்திய தாழைகள புஷ்பிக்கும்நாடு மான்போன்ற மாதாகள கூந்தலைப்பார்த்து இருளென்னு நினைத்து முல்லைச்செடிகள் கரையிலே புஷபிக்கும் வையை ஆற்றினால் வளம்பொருந்தியநாடு-எ-று. ௨

அந்தவளநாடர்பெரு மானரசர்கோமா
னிந்திரன்முடிக்கிடை யெறிந்தவனைவீர
னிந்தையதுதென்கயிலை நெற்றிவிழிபோல
முந்தியதிலசக்கரி முகத்தெழுதிவைத்தோம்

இ-ள். அத்தன்மையாகிய பாண்டிவளநாட்டாருக்கு அரசர்க்கரசனானவன் தேவேந்திரன்முடி சிதறும்படியாக வளையென்னும்ஆயுதம் பிரயோகித்தவன் குற்றமற்ற தென்கைலாயத்துக்கு நெற்றிக்கண்போய் அட்டதிக்கிலுமிருக்கிற யானைகள் முகத்திலே தன்னுடைய மீனக்கொடியை யெழுதிவைத்தவன்-எ-று.

முந்தியதிசைக்கரிமுகந்து எழுதிவைததோன் என்பதற்கு எலலாத்திசைகளிலுஞ்சிறந்த கீழ்த்திசையானையாகிய ஐராவதத்தின் முகத்திலே அத்திசைக்கிறைவனான இந்திரனைத் தன்வளையால் பொருது வென்றமை எழுதிவைத்தவனென்னலுமாம். ௩

ஆகமாதிமதனினழ்கிஞ
ஞகமாதிதெளிநதவறிவினான்
பாகனாரியப்பத்தின்னான்மொழிப்
பாகநாரியர்பற்றியதோளினான

இ-ள். தேகமுதலானவைகளால் மன்மதன்போ லழகுள்ளவன் ஆதிசேடனைப்போல தெளிந்த விவேகத்தையுடையவன பாகத்திலே பார்வதியையுடைய சிவன்மேல் பததியுடையவன் பாருபோல மதுரமாகிய சொறகளையுடைய ஸ்திரீகளவிரும்பாநின்றதேளையுடையவன்.

வானகத்திலுமண்ணிலுமெண்ணிம
வானகத்திலும்வைத்தபுகழினான்
கானகத்தொளியார்சடைக்கண்ணிதன்
கானகத்தொளியாமனைக்காப்பவன்

இ-ள். தெய்வலோகத்திலும் பூமியிலும் எண்ணத்தக்க இமய பருவதத்தினிடத்திலும் தன்கீர்த்தியை நாட்டினவன் சுவாமிதரிக்கின்ற சடைக்காட்டினிடத்தில பிரகாசிக்கும் ஆத்திமாலையினது வாசனையைத்தன்மனதிலேநினைத்துக்கொண்டுபூமியைக்காக்கின்றவன் எ-று.

தங்கணாயகனைத்தலைசூடிய
வெங்கணாதாடித்தலையேத்தினான்
பொங்குன்றயறிநததுபோற்றுவங்
ரிங்கிவாககிணையாவருமில்லையோ

இ-ள். தங்குலத்துக்குத் தலைவனாகிய சந்திரனை முடியில்புனைந்த எங்கள் நாதரது பாதங்களைத தலையினாலே வணங்குகிறவன மிருந்நன்றியையறிந்து அதைப்பாதுகாககின்றவர்களில இவனுக்கொப்பானவரொருவருமில்லை-எ-று. ௬

பத்துவார்திசைமீதும்படர்புகழ்
வித்துவாரியிறைக்கின்றமேன்மைபோல்
னத்துவாரியில்வாரினர்நல்கிய
முத்துவாரியிறைத்திடுமுன்றிலான்

இ-ள் நீண்டபத்துத்திக்கிலும்பரவக் கீர்த்தியாகிய விளைநிரியிறைக்கின்ற தன்மைபோல் சங்கங்கள் தவழ்கின்றகடலில்குளித்து வாரிவந்தவர்கள்கொடுத்து முத்துகள் இறைந்துகிடக்கின்ற முற்றத்தையுடையவன்-எ-று. எ

ஆடறந்தவரசன்புகக்கட
லோடுகின்றகலங்கதிரோட்டுதேர்
கூடுசெக்கர்பவளக்கொடிய
நீடுதிகளினர்கீரின்மனிதரோ

இ-ள். வெற்றியமைந்த அரசற்கீர்த்தியாகிய கடலுக்குள் ஓடுகின்ற கப்பல சூரியனோடுகிற தேர்கூடிய செக்கர்வானமே அக்கடலிற் படர்ந்த பவளக்கொடிகள் நீண்ட எட்டுதிக்கிலுமுள்ள மனிதர்களே அக்கடலிற சஞ்சரிக்கும நீர் மனிதர்-எ-று. அ

எச்சராசர முங்களிப்பெய்தவே
நச்சராவுலகாளுநலத்தின
கச்சராவுகழற்பொலு காலினான்
வச்சிராங்கதனென்றொரு மன்னவன்

இ-ள் அசையும்பொருள் அசையாப் பொருளாகிய எவையும் சந்தோஷத்தையுடைய விஷத்தையுடைய ஆதிசேஷன் தாங்கும் உலகத்தை ஆளும் நன்மையை யுடையவன சச்சி அராவிய வீரகண்டாமணியைத் தரித்தகாலையுடையவன் வச்சிராங்கதபாண்டியன் றொருவனிருந்தான்-எ-று. கூ

படையிற்றோற்றவரசரைப்பல்சிறை
யிடையிற்போட்டன னென்கைவியப்பரோ
கொடையிற்றோற்றிடுங் கொண்டலையுஞ்சிறை
யிடையிற்போட்டன னென்னன்றிருக்கவே.

இ-ள. அவன்யுத்தத்திலே தோற்ற அரசர்களைச் சிறையிலிட்டானென்பதென்ன ஆச்சரியம தன்கொடைக்குத்தோற்ற மேகத்தையுஞ் சிறையிற் போட்டானென்ப திருக்கும்போது-எ-று ௰

நாட்டுமவ்வரசனொருநாளிலே
வேட்டையாடவிருப்பினனாகிய
மூட்டுசேனைகரிபரிமொய்த்திட
வோட்டினான்பரியுத்தரதிக்கிலே

இ-ள். இப்படிசெயத்தைநாட்டிய வச்சிராங்கத பாண்டியவன் ஒருநாள் வேட்டையாடும்படி மனதிலெண்ணி யானைகுதிரை சேனைகள சூழக் குதிரையை நடத்திக்கொண்டு வடதிசையில்நடந்தான்-எ-று

துங்கவாம்பரிமீதிவன்றோன்றலு
மங்கைவேழமன்றகன்றோடின
திங்களின்குலச்செல்வனென்றஞ்சியே
யெங்குமோடுமிருட்கணமென்னவே.

இ-ள். சந்திரவமிசத்திற்பிறந்த அரசன்தாவும்சிறந்தகுதிரைமேலே மன மாத்திரத்தில் சந்திரனைக்கண்ட இருட்கூட்டம்போல துதிக்கையையுடைய யானைக்கூட்டங்களஞ்சியோடின-எ-று. ௰௨

வீறும்புலி யின்குலமேன்மையான்
வீறுமம்புலியினகுலமவீட்டிஞ
றுறிலொன்றுகடமைகொண்டாள்பவ
ஞறிலொன்றுகடமைகொண்டானரோ

இ-ள் சிறப்புள்ள அம்புலியென்னும் பேரினையுடைய சந்திரகுலத்திற்பிறந்த மேன்மையினாலே இறுமாப்படைநத அழகியபுலி புலிகளைக்கொன்றான் ஆறிலொருசடமைவாங்கிக்கொண்டு ஆள்கிறவன் வழியில்நேரிட்ட கடம்பைமிருகங்களைக்கொன்றான்-எ-று. ௰௩

சேரமானினந தன்னைச்சிதப்பவன்
சேரமானினாந தன்னைச்சிதைத்தனன்
வாரமாய்கலைச சங்கப்வளர்த்தவன்
வாரமாய்கலைச் சங்கம்வளைத்தனன்

இ-ள சேரமானென்னும் பெயரைபுடைய சேரனதுசேனையை செயித்தவன் ஒருமிக்க மானினங்களைக்கொன்றான் அன்போடு ஆராயகின்ற வித்தியாசங்கத்தை வளர்த்தவன் அநேககலையான்கூட்டங்களை வளைததுக்கொண்டான்-எ-று. ௰௪

சோனைபோலன்மதமாரிசொரிநதிடு
யானைதேர பரியாண்முதலாகிய
தானைபினனிடத்தானறனிவாசிமேற்
கானநாவியைக்கண்டுதொடர்ந்தனன்.

இ-ள் சோனைமழைபோல மதம்சொரிகிற யானை தேர் குதிரை காலாள் இவம் பின்னிட்டுப்போகத தானொருவனாகவே குதிரைமேற்கொணடவனாய ஒரு புனுகுபூனையைத தொடாநதான் எ-று. ௰௫

அந்தநாவியகன்றருணாசலத்
தந்தியேவளமாமவினைநதோடனு
முநதுவாசியதன்பின்முடுகினான்
கந்தநாவிவிழுந்தது கண்முனே.

இ-ள் அப்படி அரசனாலே துரததப்பட்ட புனுகுபூனை சீக்கிரத்திலே அருணாசலத்தை வலமாகச்சுற்றி யோடினவளவின் வேகத்தோடு குதிரையை நடததினான் அநதப்புனுகுபூனைவந்துசண்முனே-எ-று.

பச்சைநாவிபருகினர்போல்விழுந்
தச்சனாவிதன்னாகம்வுடுத்தெழில
வச்சைவேநதாதுதிங்கவிவாணமே
ச்சைமேனிகொணடேகியெழுநதேத.

இ-ள். நாவியாகிய விஷம் சாப்பிட்டவர்கள் போல் விழுந்துபயத்தை யுடையபுழுகுபூனைதன் தேகத்தைவிட்டு வித்தியாதரர் முதலானவர்கள் துதிக்கவிமானத்தின்மேல் திவ்வியதேகம் பெற்றுக் கொண்டெழுந்தது என்று. ௰௭

மேவுமங்க வரசன்விழுந்திட
மாவும்வீழ்ந்து வடிவுதனைத்துறந்தி
தோவியாக்கெழு தாவுருக்கொண்டரு
பூவிமானமே தேறிப்பொலிந்ததே.

இ-ள். தற்செயலாய்வாறின வரசன்விழவே குதிரை இடறிவிழுந்துதன் தேகமவிட்டுச் சித்திரக்காரரும் எழுதக்கூடாத திவ்வியரூபம் பெற்றுஓர் புட்பவிமானமேறிப்பிரகாசித்தது-எ-று. ௰௮

சைவிலிங்கனை யான்பரிக்காலின்வீழ்ந்
தவிலங்கை யரசனைப்போலவே
செவ்விலங்க வடியினிற்றேம்பினன்
வெவ்வியிகருட னோடிவீழ்ந்தார்களோ.

இ-ள் யானைபோல்பவனான வச்சிராங்கதபாண்டியன் குதிரைக்காலினாலே விழுந்து அந்த இலங்காபுரியையாண்ட இராவணனைப்போல அருணாசலத்தினடியிலே வருந்தினான் மிருகத்தினாயின ஓடினால்யார்தான்விழாதவர்கள்-எ-று. ௰௯

பாய்ந்தசாலி பரிபெயர்போய்ப்பழங்
காந்திசாலி கலாதரப்பேறுபடைத்
தாய்ந்தநண்பொட ருவியங்கண்ணராய்
மோந்தணைந்து மகிழ்ச்சியின்மூழ்கினார்

இ-ள் பாய்ந்துசெல்கின்ற குதிரைசாலியென்னும்பேர்போய் பழையகாந்திசாலிகலாதரனென்கிற பேறுபடைத்தவராய் மிக்கநண்பராய் அருவிபோல்கண்ணிலிருந்துநீர்பெருகவொருவர்க்கொருவர்கட்டியணைத்து உச்சிமோந்துசந்தோஷத்திலே முழுகினார்கள் எ-று. ௨௰

அன்னவீரர்க ளவ்விடைநின்றழி
யொன்னலர்க்கு முறுந்துயருற்றிடும்
மன்னர்மன்னவன் மறித்துவந்தவா
றென்னவென்னவென் றேங்கியிரங்கினான்.

இ-ள். அவ்வீரர்கள் அவ்விடத்தில்நின்றபோது தன்சத்துருக்களுக்கு வந்ததுக்கத்திலும் அதிகமாய்வருந்துகின்ற பாண்டியன் இதுவந்தவகையென்னவென்று இரங்கிவருத்தமுற்றான்-எ-று.

விஞ்சைமன்னர் விமானத்தராகியே
தஞ்சமில்லவன் றன்புடை சூழ்ந்துநீ
யஞ்சலஞ்சலென் றங்கையமைத்தனர்
பஞ்சவன்மகிழ் வோடும்பகருவான்.

இ-ள். வித்தியாதரர்களாகிய இருவரும்விமானத்திலேறிக்கொண்டு தஞ்சமில்லாதபாண்டியனிடத்தில் வந்து நீ பயப்படவேண்டாம்பயப்படவேண்டாமென்று கையமர்த்தினார்கள் அப்போதுபாண்டியன் மிகவுஞ்சந்தோஷத்தோடு சொல்வான்-எ-று. ௨௨

நீதியாய்வரு நீவிரொவொத்துயர்
காதிகாரணம் யாதில்வருந்துயர்
போதுமாறெது போதியுமென்றவ
னோதவோதக் கலாதரனோதுவான்

(இ-ள்.) நீதிபொருந்தியநீங்களிருவரும்யார்உங்களுக்கு இப்படிவந்ததுக்கத்திற்குக்காரணமென்ன அதுசென்றது எவ்விதத்தினாலேசொல்லுங்களென்றுகேட்ககலாதரனென்பவனசொல்லுவானஎ-று. ௨௩

வாந்தசாலி மதுரையின்மன்னனே
ஏய்ந்தவிஞ்சையர் யாங்களிவன்பெயர்
காந்திசாலி கலாதரனென்பெயர்
ஆய்ந்தநண்பர்க ளாய்விளையாடினோம்

இ-ள். நெல்விளைகின்றமதுரைக்குஅரசனேநாங்கள்ஒப்பீற்றவித்தியாதரர்கள் இவன்பேர்காந்திசாலி என்பெயர்கலாதரன நாங்களிருவரும மிகுந்தநேசராய் விளையாடிக்கொண்டிருந்தோம எ-று. ௨௪

மாரவேளு வசந்தனும்போலவே
யாரவேபிரி யாதுறைநாளிலே
சேரவூழ்வினை சென்றுதொடர்ந்திட
மேருமால்வரைச் சாரலின்மேவினோம்

இ-ள் மன்மதனும்அவன்சிநேகனாகிய வசந்தனும்போலஒருவர்கொருவர்பிரியாமல் வாசஞ்செய்யுநாளையிலேமுன்செய்தஊழ்வினைவந்தடையமகாமேருவின்சாரலிலேபோய்ச்சேர்ந்தோம்-எ-று. ௨௫

மாச்சரியமிக்கதுருவாச முனிவாழு
மாச்சிரமமேலருகி லந்தமுனிவோனே
நீச்சொரியநெஞ்சுருகி நின்றமரமெல்லா
பூச்சொரியுநந்தவன மீதினிடைபுக்கோம்

இ-ள். கோபமிக்க துருவாசரிஷிவாழ்கின்ற ஆச்சிரமத்தினருகிலே அ. கரிஷிமனமுருகித் தண்ணீர்சொரிய வளர்ந்த விருட்சங்களெல்லாம் புஷ்பங்களைச்சொரியும்நந்தவனத்திற்புகுந்தோம்-எ-று. ௨௬

புக்கவனிருஞ்சிறு புதற்களைமிதித்தான்
மிக்கவினையேனுமதின் மென்மலர்பறித்தேன்
அக்கணமுணர்ந்துமுனி யங்கிவிழியாலே
கக்கவொளிமிக்கசடை கட்டவிழ்வந்தான்,

(இ-ள்.) அப்படிப்புகுந்தவனுகிய இக்காந்திசாலி ஆங்குள்ள சிறுபுதற்களைமிதித்தான்மிகுந்தவினையையுடையநானும் அவைகளிலிருக்கும் மேன்மையாகியபுட்பங்களைப்பறித்தேன், அக்கணமே தூருவாசரிஷியறிந்து விழிகளாலே நெருப்பைக் கொட்டிக் கொண்டுசடையவிழ்ந்துவிழக்கோபித்துவந்தார்-எ-று. (உஎ)

முதுமணியாமென முகத்தினில்வியர்ப்ப
வித்துருமம்வைத்தனைய மெல்லிதழ்துடிப்ப
வுத்தரியம்வீழ்வதை யடிக்கடியுயர்க்திச்
சித்திரவழற்பொரி தெறிக்கவிவைசொன்னுன்.

(இ-ள்.) முத்துகள்போல் முகத்தில் வேர்வையுண்டாகவும், பவளம் போன்றமேன்மையாகிய இதழ்துடிக்கவும் நழுவிப்போகின்ற வஸ்திரத்தையடிக்கடியுயர்த்திக்கொண்டு சித்திரமாகியஅக்கினிப்பொறிதெறிக்க இவைகளைச்சொன்னார்-எ-று. (உஅ)

செந்தபனர் தங்கதிர் வராதுசிறுகாலு
நந்துமறுகாலுமொருகாலுமினைதநண்ணு
முந்திலையுதிர்ந்துபுல ராதுமுடிவெய்தா
திந்தவனமீதொருவ ரெய்தவெளிதாமோ.

இ-ள். சிவப்பாகியசூரியகிரணமும் என்னுடைய பயத்தினலே வரக் கூடாது, தென்றற்காற்றும் வண்டுகளும் ஒருபோதும் இவ்வனத்தையடையமாட்டாது, இலையுதிராது வாடாது, நாசமடையாது இவ்வனத்தில்ஒருவாவருவதற்கு எளிதோ-எ-று. உகூ

அறுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

சேவினூர்க்கினிய பூசைக்கணிமலர் செலுத்துங் காவில்
பாவிகாள்புகுந்தென் கோபக்கனலிடை பஞ்சதானீர்
மேவியதுரங்கமா கென்றிவர்க்குறை விடத்தையீந்தா
னுவியாய்ப்பிறப்பா யென்றூணமலர் பறித்தவென்னை.

இ-ள். ரிஷபவாகனராகிய சிவபிரானுக்கு இனிமையாகியபூசைக்காகச் சாத்தும்புட்பங்கள் இருக்கும் சோலையில்பாவிகளே நீங்கள்புகுந்துஎன்னுடைய கோபமாகிய நெருப்பினிடத்திலே அகப்பட்ட பஞ்சானீர்கள், குதிரையாய்ப்போவென்று விஷம்போல்இக்காந்திசாலிக்குசாபங்கொடுத்தார், புட்பம்பறித்தஎன்னைப் புழுகுபூனையாய்ப் போவென்று சபித்தார் தூருவாசரிஷி-எ-று. (கூம)

கோதமேதவமதாகப் பலித்திடுங்கொடியோனிட்ட
சாபமேவரவேநாங்க ளிருவருந்தளர்ந்துஞான
தீபமேயருளேயன்பர் செல்வமேயெனச்சென்றேத்தி
பாவமேலிடுமிச்சாப மொழியுநாளியதென்றோமே.

இ-ள். கோபமேதவமாகப் பலித்த பொல்லா தரிஷியிட்டசாபம் எங்கள் மேல்வரநாங்களிருவருந்தளர்வடைந்து ஞானவிளக்கே, அருளுடையயே, பத்தருடையசெல்வமேயென்று வணங்கிப் பாவம் உண்டான இம்மலையெங்கள் மேல்வந்தசாபம்ஒழியும்நாள் என்றைக்குச்சொல்லுமென்று கேட்டோம் எ-று. ௬௧

முனிவதுகவர்ந்துசாப முனிவனுமொழிவாளித்த
தனிவருஞ்சாபஞ்சோணா சலத்தினைவலஞ்செய்தாற்போம்
மனிதருஞ்சுரரும்போற்று மலைவலம்புரிகைதானு
முனிமைபாம்பாணடிநாட்டி னிறைவனுமெய்துமென்றார்.

இ-ள். அருவாசரிஷிக்குக்கோபம்நீங்கினானிட்ட இவ்வொப்பற்றசாபம் திருவண்ணாமலையை வலமாகவந்தாற்போம் மனிதருந்தேவருமவணங்குமிந்தமலையைப்பிரதக்ஷணஞ்செய்தல் சிறந்தபாண்டியதேசத்தரசனுலே கிடைக்குமெனறார்-எ-று. ௬௨

எனவொருகதையுஞ்சொல்வா னெரியழற்கிரியதாக
நின்றவெம்பிறைவனமுனனொனடு* வணக்கடவுளீந்த
மன்றல்பசர்கனியைந்தன் சேயிருவரும்வருந்திக்கேட்க [ன
வின்றுலகனைத்துஞ்சூழ்ந்தோர்க்களிப்பனென்றிறையுஞ்சொன்ன

இ-ள். இப்படிச்சொல்லி ஒருகதையுஞ் சொல்வார் அக்கினிமலையாய் நின்ற சுவாமிமுன்னே வருணன் கொடுத்தவாசனைபொருந்திய மாம்பழத்தைத்தமது பிள்ளையாகிய விநாயகர், சுப்பிரமணியர் இருவரும் வருந்திக் கேட்க இன்றைக்குள் உலகமுழுதுஞ் சுற்றிவந்தவர்க்கு இப்பழங்கொடுக்கிறேனென்றுசொன்னார். ௬௩

கந்தனுமயிலிலேறிக் கடலுலகனைத்துஞ்சூழ
முந்தினன்கரிடவானை முகத்தவனெழுந்தெல்லோர்க்கும்
தந்தையாந்தனதுதாதை தனைவலம்புரியத்தந்தை
மைந்தனைத்தழுவிவேண்டும் வரத்துடன்கனியுமீந்தான்

இ-ள். சுப்பிரமணியர்மயில் வாகனமேறிக்கொண்டுசத்த சமுத்திரஞ் சூழ்ந்தபூமிமுழுதுஞ்சுற்றிவருகுகார் யானைமுகமுடைய விநாயகர் எழுந்திருந்து சுவாமிதானே உலகமாயிருக்கிறார், அவரைச்சுற்றிவந்தால் உலகத்தைச்சுற்றி வருதலொக்கு மென்றுயர்க்குந்தகப்பனாகிய தன்னுடைய

* வணக்கடவுளென்பது வருணபகவான்.

பதகப்பானைப்பிரதக்ஷணஞ்செய்தார், சுவாமிமகனை தழுவிக்கொண்டு
ண்டியவரங்களும்பழமுங்கொடுத்தார்-எ-று.

மேலைநாள்கடிதுமேவிக் கனிதரவினவந்தம்மைக்
காலினைவலமாயிந்தக் கரிமுகன்வந்தானேழு
தாலமேவலஞ்செய்தாலும் பலபலதவஞ்செய்தாலும்
பாலகாநமைச்சூழ்தெய்வப் பலத்தினுக்கிணையோபார்க்கில்

(இ-ள்.) முன்னாள் சுப்பிரமணியர் சீக்கிரத்தில்பூமியைச் சுற்றிவந்து பழங்கேட்கச்சுவாமி நம்மையிக்கணேசன்காலால்நடந்துசுற்றிவந்தான ஏழுலகத்தைவலஞ்செய்தாலும் பலபலவாகியதவத்தைச்செய்தாலும்மகனே நம்மைச்சுற்றிவருநம்பலனுக்கீடாகுமோ பார்க்குமிடத்தில்-எ-று

செம்மலையுருவநம்மைத் தினம்வலம்புரிந்தோர்மேவுதன்
தம்பியிலுமதிகராயோன் றனக்குமேலதிகமாய்ப்பார்க்கி
லும்பியினுமதிகரிக்க வுமையிலுமதிகர்மைந்தர்
எம்பியிலுமதிகமென்று னெவர்க்குமேலதிகமானேன்

இ-ள். சிவப்பாகிணமலையுருவமாகிய நம்மைதினம்வலம் வந்தவர்கள்பிரமனிலும்அதிகராவர் விஷ்ணுவிலும்அதிகாரவர்பார்க்கில் உம்பியிலும்அதிகாரர்பார்வதியிலுமதிகராவர் மகனேஎம்மைப்பார்க்கிலும்அதிகராவர் என்றார்எல்லார்க்குமேலாகியசிவபிரான்-எ-று. கசு

மாசிலாநாதமேனி வரைதனக்கமரர்தாமும்
பூசனைபுரியமாட்டா ரதைவலம்புரிந்தோருக்
காசையாயளிக்கும்பூசை நமக்கினிதளிக்கும்பூசை
கூசுமாறிழைத்ததீங்கு நமைச்செயுங்கொடுமையாகும்

இ-ள். குற்றமில்லாதநம்முருவமாகிய அம்மலைக்குத்தேவர்களும் பூசைபண்ணமாட்டார்கள், அதைவலமாகச் சுற்றிவந்தவருக்கு ஆசையுடனேசெய்கிறபூசைநமக்கு இனிதாகச்செய்கிற பூசையேயாம் அவர்களுக்குக்கூசும்படிசெய்ததீமைநமக்குச்செய்ததீமையேயாமென்றுசுவாமிசுப்பிரமணியருக்குஅருளினார் எ-று. கஎ

என்பதுமொழிந்தானந்த னெனச்சொலிமுனிவன்போனான்
பின்பதன்படியேநாவி புரவியாய்ப்பிறந்தோமென்று
தென்புவியுடையாய்நின்றன் றிருமலைவலமும்செய்தோ
மின்பொலிபுதியகோலம் படைத்தெழில்விமானத்தானோம்

இ-ள். இப்படி சுவாமிசொன்னாரென்று தூருவாசரிஷி சொல்லிப்போனார், பின்புஅப்படியேகுதிரையாகவும் நாவியாகவும்பிறந்தோம் இனை

நப்பாண்டியதேசத்தையுடைய அரசனே உன்னால் திருமலையைப்பிர
தக்ஷணஞ்செய்தோம்மின்னல்போல்பிரகாசிக்கின்றபழையஉருவம்பெற்
றுவிமானத்திலேறினவர்களானோம்-எ-று. ௧௮

எங்கட்கும்வரவிதுன்பம் விடுக்கண்வந்தடைந்ததிந்த
வெங்கனல்வரையை மாவின் றிசைவலஞ்செய்கையாலே
பொங்கியகதுவும்பூசை புரிந்திடற்போமென்றோதித்
தங்களூர்புகுந்தார்காந்தி சாலியுந்தானுமாக

இ-ள். எங்களுடையசரித்திரம்இது அக்கினிசொரூபமாகிய இம்மலை
யைக்காலினாலேவலஞ்செய்யாமல் குதிரையிலேறிவலஞ் செய்தபடியினா
லுனக்குத்துன்பம்வந்துநேர்ந்தது அதுவுஞ்சுவாமியைப்பூசைசெய்தாற்
போமென்றுசொல்லிகாந்திசாலியுங்கலாதரனுந்தங்களூருக்குப் போனா
ர்கள்-எ-று. ௧௯

வேழமும்பரியுந்தேரும் வீரருஞ்சுவடுநாடிச்
சூழமந்திரிகளோடுஞ் சூழ்ந்தனர்துயரந்தீர்ந்தான்
தாழையின்கமுகின்காடுந் தவளவான்கதிரைத்தீண்டும்
வாழையுங்கரும்பின்சாற்றின் வளர்ந்திடும்வையைநாடன்

இ-ள். அதன்பின்புயானையும் குதிரையும்தேரும் காலாள்களும்அடிப
ற்றிக்கொண்டுமந்திரிகளுடனே அரசனைசுற்றிக்கொண்டார்கள், அப்பொ
ழுதுவிசனம்நீங்கினான் தென்னமரங்களும்கமுகவளமும்சந்திரனைதழு
வும்வாழைமரங்களும் கரும்பின்சாற்றினாலே வளர்ந்திடும்பாண்டியதேச
த்துக்கரசனாகிய சிராங்கதபாண்டியன்-எ-று. ௨௰

அரதனாங்கதனைமைந்தன் றனைக்கடிதழைப்பித்தாதி
பரதனுமெனவிப்பாரைப் புரவெனப்பகர்ந்தார்கலை
விரதனாங்கதனைக்கேளா வதன்முனம்விடைபெற்றானை
யிரதமாமருங்குஞ்சூழப் பதிபுகுந்திறைமைசெய்தான்

இ-ள். வச்சிராங்கதபாண்டியன் தன் பிள்ளையாகிய இரத்தினாங்கதபா
ண்டியனைச் சீக்கிரத்தில்வரவழைத்து முன்னால்ஈமதுவம்சத்திற் பிரபல
னாயிருந்த பரதன்போல் இராச்சியத்தைக் காப்பாயென்றுசொன்னான்
அவ்வார்த்தையைக் கேட்பதற்குமுன்னமேவிடைபெற்றுக்கொண்டு ம
தயானை தேர்முதலாகிய சேனைகள்சூழமதுரைக்குப்போய் இராச்சியப
ரிபாலனஞ்செய்தான் எ-று.

முறையினாலிறையின்வந்த கனகமுமுத்துந்தேவர்
திறையிலுலவாதபொன்னுந் தினந்தொறுங்களிற்றின்மேலே
இறைவனுந்தனதுதாதைக்களித்திடவிறைவன்பேணிப்
பிறையினற்கினியபூசை திருப்பணிபெரிதுஞ்செய்தான்

இ-ள். நியாயமாகஆறிலொருகடமைகொண்ட திரவியமும் கடலிற்கு ளித்துவொரிவந்தமுத்துக்களும்சத்துருக்களாலிறைவிட்டபொன்னும்தி னந்தோறும்யானையின்மேலேற்றி அரசனாகியதன்தகப்பனுக்கு அனுப்பு விக்கவச்சிராங்கதபாண்டியன் சடையில்சந்திரனைத்தரித்தசுவாமிக்கு இ னிமையாகியபூசைதிருப்பணிபெரிதாகசெய்தான்-எ-று. சஉ

செய்தபின்றவமதாகிக் கவுசமாச்சிரமத்தோர்பா
லெய்தியபன்னசாலை யிபற்றிநம்பாவந்தீர்க்கு
மைதவழ்மிடற்றுறத்தன் பாய் மலைவலஞ்செயுநாளந்தக்
கைதவற்கெதிரேவந்தான் கைதவர்க்கெதிரேவாரான்.

இ-ள் அருணாசலேசருக்குத் திருப்பணியும் பூசைமுதலானவைகளு ம்சிறப்பாகநடந்தபின்பு கஞ்செய்வதற்குநினைந்துகௌதமருடையஆசி ரமத்திலொருபக்கத்திற்சேர்ந்து பன்னசாலைகட்டிநம்முடையபாவங்களை தீர்க்கின்றநீலகண்டமுடைய சுவாமிக்கு அன்பாய்க்கிரிப் பிரதட்சணஞ் செய்கின்றநாளில்கைதவனாகியபாண்டியனுக்கெதிரே தோன்றினா வஞ் சம்பொருந்தியமனத்தையுடையவர்களெதிரே வாராதபரமசிவன்-எ-று.

அணிச்சிறுபிறையம்போத வருள்பொழிவிழியுநீல
மணிக்கறைமிடறுநாலு கரங்களுமலர்க்கைமானுங்
கணிச்சியின்விடையின்மீதிலிருப்பதுங்கண்டென்பாவப்
பிணிச்சிறைவிடுப்பதென்றோவெனச்சொலிப்பெரிதுந்தாழ்ந்தான்

இ-ள். அழகுஅமைந்தசிறியசந்திரனையும் மிகவும் கருணைபொழிகின் றகண்களையும் நீலமணிபோல்பிரகாசிக்கின்றகண்டத்தையும்நான்குகை களையுமலர்போன்றகையில்மானுமழுவு முடையவராய் ரிஷபவாகனத்தி ன்மேலிருப்பதுபார்த்துஎன்னுடையபாவப்பிணிப்பு என்னைவிடுவது எ ன்றைக்கோவென்றுசொல்லிமிகவும்பாண்டியன்வணங்கினான் எ-று.

கலிவிருத்தம்.

அண்ணாமலையுடையாய் மழுவிடையாய்பணிசடைசேர்
தண்ணாமலையுடையா யுமையுடையாய்நுதல்தழுவுங்
கண்ணாமலையுடையாய் வினைகடவாரறிவரிதற்
கொண்ணாமலையடையா யமையண்ணாமலைதலைவா

இ-ள். அண்ணாமலையென்னும் பெயரையுடையவரோ இளமையாகியரி ஷபவாகனத்தையுடையவரோ அழகுள்ளசடையில் குளிர்ந்தகங்கையையு டையவரோ எங்களை யாட்கொள்ள உடையவரோ நெற்றியிற்கண்ணுடை யவரோ பாவிகளறியப்படாதகைலாயத்திலிருக்கின்றவரோ உண்ணாமுலையா கியபார்வதியினதுதலைவரோ-எ-று. ௪௫

மையாரியவினையேனை யொருமாவினில்லவலமாய்ச்
செய்யாததுசெய்தேனிதுநீரென்னுரைசெய்தான்
பொய்யாதவன்பொழிகின்றது கண்டேயருள்பொழிவுந்
ஐயானனமுடையான்மழ விடையானிவையருள்வான்.

இ-ள். தீவினையையுடையவனாகிய நான் உம்மை ஒருகுதிரையாயிவேறிவ மாகலாநான்செய்யத்தகாதகாரியம்செய்ததனாலேபொறுத்தருளவே ண்டுமென்று பொய்யல்லாத பாண்டியன்சொல்ல அதைக்கேட்டுகிருபை யுண்டாகிஇளமைபொருந்திய ரிஷபவாகனராகியஐந்து திருமுகத்தையு டையபரமசிவன அருளிச்செய்தார்-எ-று.

வன்னாடகபதிநீயெமைமதியாதெருகுசலி
மன்னாள்விடலுற்றாயத னாலேநரர்வடிவா
யின்னாதனபெற்றாயினியிமையோரதிபதியாய்ப்
பொன்னாடணையென்றே வரமொழிந்தேயிறைமறைந்தார்.

இ-ள். வச்சிராங்கதபாண்டியனே நீ பூர்வஜன்மத்தில் தேவேந்திரனாயி ருந்தாய் அந்நாளிலநம்மைஅலட்சியஞ்செய்துவச்சிராயுதத்தைநம்மேல் பிரயோகஞ்செய்தாய் அதனாலேபூமியில் மனிதனாகப்பிறந்து துன்பம டைந்தாய்அதனபினபு நம்மைப் பூசித்துவலம் வந்தபடியினாலே இனித் தேவர்களுக்கு அதிபதியாகிய தேவலோகத்துக்குப் போவென்று வரங் கொடுத்துசுவாமிமறைந்தார்-எ-று. ௪௭

அருணைப்பதிவலமிப்படி யருணைபுரிநினைவோர்
மரணத்துகளடையார்சிவன் வடிவாகுவரொன்றான்
கருணைக்கொருகடலேபரகதிபெற்றனமென்றே
சரணத்திடைபணிந்தார் நமனறனைவாட்டியதவத்தோன்.

இ-ள். அருணாசலத்தின்வலமிப்படி இத்தலத்தை நினைப்பவர்கள்மர ணத்துன்பமபொருந்தாமல்சிவசாரூபம் பெறுவார்களென்றுநந்திதேவர் சொல்லஎமன்வ டுமபடிசெய்ததவமுடையமார்க்கண்டேயர்கேட்டுகி ருபாசமுத்திரமானவரே உம்மாலேபரகதியடைந்தேனென்று அவர்பாத ௪௮

இக்காதையின்பொருளானதோரெழுத்தாகிலுந்தெளிந்தோ
தக்காருடன்படிததோர்சிவசாயுச்சியம்பெறுவார்
முக்காலமுமிதுகற்றவர்வினவிப்பொருண்முடிப்பரா
புக்கார்சிவகதியென்பதுபுதுமைப்பொருளன்றே.

இ-ள் இக்கதையில் ஒருஎழுத்தினது பொருளாயினும் அறிந்தோர்களும் பெரியோர்களோடு படித்தவர்களும் சிவசாயுச்சிய மடைவார்கள் திரிகாலத்திலு மிதைக்கற்றவர்கள் இதின் அருத்தத்தைக்கேட்டு முடிப்பவர்கள்'சிவகதியிற்சேர்வார்களென்பதுஆச்சரியமாமோ-எ-று

ஆறுவது

வச்சிராங்கதபாண்டியன் சருக்கம்

முற்றிற்று.

ஆகதிருவிருத்தம்-௪௪௯.

---




ட

சிவமயம்.

## ஏழாவது,

## வல்லாள மகாராஜன் சருக்கம்.

### கலிநிலைத்துறை.

பாசமுற்றவச்சிராங்கத பாண்டியன்சீரை
வாசமாய்நவின்றோமினி நம்வல்லாளனுக்கு
ஈசனேமகவாகவந் தெய்திப்பின்னுமுதி
ஓசையாயருள்செய்ததை யுமக்குரைசெய்வாம்.

இ-ள். சந்திரஜடாதரமூர்த்தியாகிய பரமசிவனுடைய பாதபதுமங்களில மிகவும் அவாவினையுடைய வச்சிராங்கதபாண்டியன் சரிதையைச்சொன்னோம், இனிவல்லாளமகாராஜனுக்கு பரமசிவமே புத்திரனாகத்தோன்றி மறைந்துபின்னர் அக்கடவுள்விசும்பின்கண்வெள்விடையின்மீதெழுந்து அவ்வரசனுக்கு அருள்சுரந்ததையும்மார்க்கண்டேய முனிவரோஉமக்குச்சொல்லுகிறோமென்று நந்திதேவர் திருவாய்மலர்ந்தருளுகின்றார்-எ-று.

மணிகொழித்திடுமாடமா ளிகைதவழ்சோலை
திணிகளம்பரத்தினையுறு சிறப்பினையார்ந்த
கணிகையாமவர்கற்பினை யருந்ததிதனக்கே
யிணையெனச்சொல விசைக்குமாவருணையம்பதியாம்.

இ-ள். மாணிக்கம் மரகதம் வயிரம் வைடூரியம் கோமேதகம் புட்பராகம்இந்திரநீலம் முத்துபவளமென்னும்நவமணிகளால்அலங்கரிக்கப்பட்டமாடமாளிகைகளும்ஆகாயத்தையளாவியுயர்ந்து தீஞ்சுவைக்

---

ஆதியில், விஜயநகரத்தையரசாண்ட கிருஷ்ணதேவராயர்விஜ
தாலும்பிரதாபஉருத்தியத்தாலும் மேற்படிவல்லாளமகாராஜன்னை
ந்தெரிந்துக்கொள்ளலாம்.

லாஉதிர்க்குஞ்சோலைகளும்மலர்ச்சோலைகளெங்கும் நிறைந்துபரி மிக்கவும் அருந்ததிக்கொப்பான வடிவமும் கற்பும்வாய்ந்தகணிகை யர்கள்வசிக்கும் அருணாசலமென்னுந்தலமாம்-எ-று. உ

எழுசீர்கழிநெடி லாசிரியவிருத்தம்.

இத்தகைசிறப்பை வகித்திடுநகருக்கிறைவன்வல் லாளனென்றி சைக்கும்,சத்தியமொழியனற்குண-முடையான்தன்னுயிர்மன்னுயிரா கப்,பத்தியாய்நாளும்பாதுகாத்திடுவோன்பகருஞ் சோநற்குதைதோ ன், அத்தனாரடியைநித்தமுந்துதித்தேயவர்திருப்பணிசெயவந்தோன்.

இ-ள் இத்தன்மைபொருந்திய புகழினையுடைய அவ்வருணாசலம் எ ன்னுந்தலத்திற்கு அரசனாகிய வல்லாளமகாராஜனென்பவன் மிகவுஞ் சத்தியவாக்கியமுடையவன் நற்குணமுடையவன் சகலவுயிர்களையுந்த ன்னுயிர்போற்பாதுகாப்பவன் அக்கினிவமிசத்தில உதித்தவன் சகதீ சனாகிய பரமசிவனுடைய உபயசரணம்புயங்களைத் தினந்தினந்திரிகா லமுநதுதிசெய்பவன அக்கடவுளினது திருப்பணி செயயும்பொருட் டோர்வடிவாயுதித்தவன்-எ-று ௩

பிறாபொரு ளாசையற்றவன் றனதுபெண்டிரை யன்றிமற்றோ ரை,முறையுடனறமக்கை தங்கைய ரென்னமொழிந்திடு நன்னடையு டையான்,நெறியுடனாறிலொருபங்கு குடிகணியுடன் தரப்பெறும் நெறியோன்,கறைமிடற்றண்ணலாலயப் பணிக்கேகருத்துகந்தியறறுந ல்லன்பன்.

இ-ள் ஒருவனபொருளின்மீது இச்சையென்பதைமறந்தவன்தன் மனைவியாரையன்றிமற்றஸ்திரீகளைத் தமக்கைமார்களைப்போலவும்தங் கைமார்களைப்போலவு மனததிறபரிவுகொண்டு வசனிப்பவன்குடிகளி டத்தில்ஆறிலொருபங்கு பகுதிபெறபபட்டவன் ஆலாலமுண்டகண் டராகியஸ்ரீஅருணாசலேசரதுஆலயத்திருப்பணியைமனக்களிப்போடு ம்நடத்தும்மேனமைபொருநதிய பததியையுடையான்-எ-று ச

நீதியாய்ப்புலியும் பசுவுமோர்துறையினெருங்கியே புனலுண்டு வசிக்கும்,போதனையருளும்வேதியாமறைவைப்புகன்றிடயாம்வருகே ட்பார்,ஆதியாக்கடவுளருள்பெறநகரையலங்கரிததற்புதஞ்செய்வார்வீ தியிற்புனலைத்தெளித்துமின்னார்கள்மேம்படுகோலமுமிடுவார்.

இ-ள். அரசன் ஆணையால் புலியும்பசுவும்ஓர்துறையிற்சேர்ந்துதண் ணீருந்திக்களித்து விளையாடிவாசஞ்செய்துவரும் வேதாகமங்களை யு ரைந்துஉபதேசிக்கும் அந்தணர்கள்செய்யும் வேதபாராயணம் யாவரு ம்நியோடுங் கேட்பார்கள் ஆதியாகவும் ஒப்பற்றதாயும்விளங்குங் ாகியஸ்ரீஅருணாசலேசருடைய திருவருளைப் பெறும்பொருட்

டுஅந்நகர்முழுவதும் வீதிகடோறும் வரிசைவரிசையாய் மகரத
ணங்களும்மாவிலைத்தோரணங்களும் விருஷபத்துவசங்களுந் தூக்க
ங்கும்சுகந்தபரிமளம் வீசும்புட்பங்களால் அலங்காரஞ்செய்து வீதி
ளிலமங்கையர்கள்வாசனைகமழுஞ்சலநதெளித்து விசித்திரங்களாகிய
கோலங்களையிடுவார்கள்-எ-று. ௫

மாதமும்மாரிசொரிந்துவேளாண்மைமாறிலாச்செழிப்புறவிளை
யும், சாதமென்போரையக்கணமழைத்தே தழைக்கவோராறுசுவைய
ளிப்பார்,மாதவர்க்கேவல்புரிந்தவர்கேட்கும்வகையெலாநதந்தருள்பெ
றுவார்,நீதறுலயத்திநெய்விளக்கமைத்துநிரந்தரம்பூசித்துவருவார்.

இ-ள். அவ்வருணையம்பதியென்னுந்தலத்தில் மாதமும்மாரிபொழி
ந்து வேளாண்மைஎந்நாளுங்குறையாதுசெழித்தோங்கி விளைந்துவரு
ம் அல்லாமலும் அநநகருள்யாரேனும் பசிப்பிணியால் மெலிநதுவந்
துபுசிப்புவேண்டுமென்று வினவுபவர்களை அக்கணமேயழைத்து சயி
த்யோசாரஞ்செய்து கைத்தலபுளிததல்கார்த்தல் உவர்த்தல்துவர்த்தல்
தித்தித்தல என்னும் அறுசுவையோடுங்கூடிய உணவைதிருப்தியாக
க்கொடுதது உபசரிப்பார்கள மேலும்தபோமகிமையையுடைய குண்
முடையவர்கள் சொலலுங்குற்றேவல்களைப்புரிநது இச்சித்துக் கேட்
டவஸ்துக்களையெலலாங்குறைவில்லாமல்ாந்து அவர்கள்அருளைப்பெ
றுவார்கள் இதுதல்லாமலும் நீதறுகிய ஸ்ரீஅருணசலேச ராலயத்தில்
எங்கும்பிரகாசம்பொருந்தத்தக்கதாகத் திருவிளக்குகள்அமைத்து அ
க்கடவுளை என்றும் பத்தியோடுபூசிததுப் பணிந்துவருவார்கள்-எ-று.

கலிவிருத்தம்.

இந்தவண்ணமிறைவன்விதிப்படி
அந்தமாநகராணதிலங்குநாள்
எந்தச்சீருமிருக்கமன்பேர்சொல
சந்ததிசிறிதிலையென்றுதாழ்ந்தனன்

இ ள். இத்தன்மையாய் அரசன்செங்கோன்முறைப்படி யாதுங்கு
றைவில்லாமல் அந்நகரம்செழித்தோங்கியிருக்கையில் ஓர்நாள்மன்ன
ஞகிய வல்லாளமகாராசன் தனக்கு ஆண்டவனருளால் எல்லாச்சிறப்
பும்பொருந்தியிருக்க நாம்எடுத்தணைத்து உச்சிமோந்துமுத்தமிடவும்
அவைகூறும் இனியமழலைச்சொற்களாற் சிறவணைந்தமுறவும் பின்
னர்நம்பெயரைச்சொல்லவும் பிள்ளையில்லாமல் போயிற்றேயென்று
மனம்வெதும்பி மிகவுநதுன்பமுற்றான்-எ-று. ௬

ஐயன்பூசையதிற்குறைவோவிந்த
வையநீதியின்மாறுளதோவன்றிக்
கொய்யுமலர்க்களிற்கோதுறச்செய்தெனோ
செய்யும்வண்ணமெனசெப்புமமைச்சரே.

-ள். ஜகதீசனாகியும்உமாமகேசனாகியும்எனையாட்கொள்ளும்பொருட்டு எழுந்தருளியிருக்கும் ஐயனாகிய ஸ்ரீ அருணாசலேசருக்குப் பேதையேனாற்செய்யப்பட்ட பூசையில்ஏதேனும் குறையுளதோ அல்லது இவ்வுலகநீதிநடத்துவதில்மாறுபாடாகிய குற்றங்களுண்டோ இதுவல்லாமலும் நங்கடவுளை அர்ச்சித்துப்பணியும்பொருட்டு கொய்தமலர்களிலேதேனுங்குறையுண்டோ என்செய்வேன் அறியேன் இனியான் செய்யும்விதியாது கூறுவீர்கள்மந்திரிகளே என்றான்வல்லாளமகாராஜன்-எ-று. அ

அண்ணலேநமையாதரித்தாண்டிடுங்
கண்கள்மூன்றுடையானற்கருணையால்
கண்ணுமாதுலர்யார்க்குநல்லன்புடன்
திண்ணமாயறஞ்செய்யின்மகவுண்டாம்

இ-ள். எங்களிறைவனே நம்மையாட்கொள்ளும்பொருட் டெழுந்தருளிய சகலபுவனகர்த்தாவாயுஞ் சர்வாந்தரியாமியாயும் திரிநேத்திமுடையவராயும் அடியார்களிருதயத்தில் விளங்கும் ஸ்ரீ அருணாசலேசரது மேன்மைபொருந்திய கருணையினாலே நம்பதியைநாடிவரும்ஆதுலர்முதலிய அந்தணர்களும்இன்னும்மற்ற எவர்களும் எதைக்கேட்டபோதிலும் அவைகளையில்லையென்னாது அவர்மனங்களிப்புறும்படி உள்ளன்போடும் நல்குவோமாயின் புத்திரனுண்டாமென்று சொன்னார்கள் மந்திரிகள்-எ-று. சு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுந்தரவருணைநாதர்துலங்குமிந்நகரினுள்ளே
வந்தவரொதுகேட்டாலும்வழங்குதுமெனவிப்போது
அந்தரமளாவநீங்களழகியதுவசநாட்டி
நந்தலிலென்பேரோங்க நன்முரசறையச்செய்மின்

இ-ள். சோமசுந்தரக்கடவுளாகிய ஸ்ரீஅருணாசலேஸ்வரரும் இப்பதியின்கண்வந்தவர்கள் எந்தப்பொருளைவிரும்பிக்கேட்டாலும் குறைவின்றித் தருவோமென்றுங்கள் நற்றவர்களேஎன்று கரங்களைநீட்டியழைப்பதுபோலும் அவ்வெல்லையுட்புக்க மாந்தர்களைக் கலியென்னும் பிணியணுகாமற்றுரத்த ஆகாயபரியந்தமளாவியுயர்ந்து படபடாகாரஞ்செய்யும்படியாய் அழகியஒர்துவசம்நாட்டி என்பெயர்எங்கணுஞ்சிறக்கும்பொருட்டு ஏழுகடலொலிகளையுங்கலவிகரித்து இடிமுழக்கம்போற் பேரொலிகாட்டும் முரசமார்ப்பச் செய்யுங்களென்றான்வல்லாளராஜன்-எ-று. ௰

தாத்திரமுற்றுநற்சீர்தழைக்குமெங்கோனேகேண்மோ
சாத்திரம்புகழுமீசர்தாடொழுந்தொண்டர்மூப்பர்
தோத்திரவிரவலோர்கள்தோன்றியவண்ணமீயப்
பாத்திரோநாமென்றுபகர்ந்தனரமைச்சரானோர்

இ-ள். நெடியகடல்சூழ்ந்த உலகமெங்கும் மிகுந்தகீர்த்தியைச் செய்த எங்களரசே இருக்கு, சுசர், சாமம், அதர்வணம், என்னுமி ன்குவேதங்களும் ஆறுசாஸ்திரங்களும் புகழத்தக்க உமாமகேசனு ய ஸ்ரீஅருணாசலேசருடைய உபயசரணாரம்புயங்களைப் பணியும்மெ ய்யன்பர்கள்தபோமகிமையைப்பெற்ற விருத்தர்தோத்திரஞ்செய்யும் பாவலர்முதலியவர்களின் மனத்திற்றோன்றியவண்ணம் அளித்துகளி ப்படையச்செய்விக்கும்படியாகிய பாத்திரரோநாம் இறைவனேயென் றுமொழிந்தார் மந்திரிமார்கள்-எ-று. கக

பூவிலப்பொருளைக்கேட்கப்போகுமோபோகிலவ்வா
றியாவராயினுந்தானல்காராதலாற்புகன்றவண்ணந்
தீவிரமாகச்செய்வீரெனத்துவசத்தைநாட்டிற்
றேவர்நாடளவுமோங்கச்செயமுரசறைவித்தாரால்

இ-ள். இவ்வுலகிலில்லாத பொருளைக்கேட்கப்போகுமோ அவ்வாறு கேட்டபோதினும் யாவரேனும் எத்தன்மையாய் வாய்ந்தவராலுங் கொடார்கள் ஆகையால்யான் உங்களுக்குரைத்தவிதியின்படி கொப் பெனசெய்வீர்களென்றமைத்த மொழியைக்கேட்டு மந்திரிகள் துவச த்தைநாட்டி வானுலகளவும் பேரொலிமுழக்கமெட்டும்படி ஜெயமுர சறைவித்தார்கள்-எ-று. கஉ

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

நாதன்வாழருணைநகரினிலவேந்தனட்டியதுவசத்தையோர்ந்து
பூதலத்துள்ளவிருத்தர்காவடிகொள்பூரியருடன்மிகச்சிறந்த
மாதவர்மறையோராதுலரேனைமாந்தர்வந்தணுகின்மற்றன்னோர்,ஏதமி
வ்வேண்டும்பொருளடைந்தென்றுமிலகுவாழ்வுறுமமென்றியைவார்.

இ-ள். நாதனாகியஜகதீசன் ஸ்திரிஅருணாசலீஸ்வரர்வாழும் அரு ணையம்பதியின்கண் வல்லாளமகாராஜனால தருமக்கொடிநாட்டி யிரு ப்பதாய்கேள்வியுற்று நெடியகடல்சூழ்ந்த வையகத்திலிருக்கும் விருத் தர், பிராமணர்,தபோதனர்,முனிவரர், கழைக்கூத்தர், யாசகர்முதலிய யர்வரும் பத்தியோடுகூட்டங்கூட்டமாய்க்கூடிவந்து தங்கம்வறுமை நீங்கும்படியாய் வேண்டியவைகளைப்பெற்று குறைவின்றி வாழ்வோ மென்று அரசனிடம்வருவார்கள்-எ-று. கங

வதுவைசெயப்பொன்வேண்டிவந்தோருக்காயிரம்பொன்வழங்கி ப்பின்னுங், கொதுவைமணிசிலம்பணிதி கொற்றவனேயகைமீட்டு கொடுமென்றோர்க்கத், ததியிலீராயிரம்பொன்றநதவரைமகிழச்செ ததன்பின்னுங்கு, முதுமறையோருபநயனமுடிக்கவென்றாலவர்க்கு திமுன்னூறீவார்

இ-ள். விவகாசஞ்செய்துக்கொள்ளவேண்டுமென்றுஆவலோடு ரசனைநாடிவந்து கேட்டவர்கள்மனந்திருப்தியடையும்படிஆ

ப்பொன்கொடுத்தும் பின்னர்ஆபரணாதிமுதலிய மண்மனையாவு
காதுவைவைத்து மீட்டுக்கொள்வதற்கு ஏதுவில்லாமல் மூழ்கி
போகின்றது அரசர்க்கரசனாகியஎங்கள்கோவே தேவரீர்அவற்றைமீ
ட்கும்பொருட்டுத் திருவருள்சுரப்பிராயின் மிக்கப்புண்ணியமாமென்
றுபணிந்துவினவியவர்களுக்கிரங்கி அக்கணமேஇரண்டாயிரம்பொன்
கொடுத்து அன்னவர்மனமகிழச்செய்வித்தும் அதன்பின்பு வேதாகம
ங்களையுணர்ந்த பெரியோர்களாகிய அந்தணர்வந்து அரசனைஆசீர்வதி
த்து மகாராஜனே உபநயனம்நடத்தவேண்டியிருக்கிறதென்று அறிவி
ப்பார்களாயின் அவர்களுக்குமுந்நூறுபொன்கொடுத்து மகிழச்செய்
விப்பார்-எ று. கச

ஆலயத்திலுற்றமணிமண்டபமுஞ் சூழ்மதிலுமவமாமென்னிற்,
கோலமுறைவமைப்பதனுக்கிறையவனே திரவியங்கள்கொடுப்பாயெ
ன்னச், சிலமுடனிருபதினாயிரம்பொன்னுந்தந்துசீர்செய்யென்றான்பி
ன்,ஞாலமதின்மடந்தருமஞ்செய்யமைம்பதாயிரம்பொன்நல்கினானால்

இ-ள். ஸ்ரீஅருணாசலேசர் எழுந்தருளியிருக்கும் கோயிலினுள்நவம
ணிகளினாலுஞ்சந்திரகாந்தக்கற்களினாலும் அமைத்துப்பிரகாசம்பொ
ருந்தியிருக்கும் மண்டபங்களும் செஞ்சுடராகியசூரியனுஞ்சாய்ந்தூடு
துங்கிப்போகும்படி ஆகாயத்தையளாவி மேகங்கள்தவழுஞ்சுற்றுமதி
ல்களுங்கிலப்பட்டிருக்கின்றமையால் அவைகளைத் திருத்தச்செய்யும்
பொருட்டு பொருளுதவிசெய்யவேண்டும்மகாராஜனேயென்று கேட்
குங்கால் அரசன்மிக்கபத்தியோடும்ஜகதீசன்திருப்பணிநிறைவேறும்
பொருட்டு இருபதினாயிரம்பொன்கொடுத்துச் சீர்திருத்தஞ்செய்தும்
பின்புஉலகின்மடம் புதுக்கவேண்டுமென்று லவைகளுக்கு ஐம்பதினா
யிரம் பொன்னுங்கொடுப்பான்-எ-று. கரு

அந்தகர்க்குஞ்சங்கமர்க்குமுடவருக்கு மேழைகட்குமாபத்தென்
று, தந்தவர்க்குமாதுலர்க்குமாறுதசஞ்சலமும்வறுமைநோயால், நொ
ந்தவர்க்குஞ்சொலுமின்னமற்றவர்க்குந் தினந்தினமும்நவன்றவாறு
சந்தமொடுபரிசளித்தல்ஈரதருமோர்ந்தங்குஞ்சார்ந்திட்டாரால்

இ-ள். கண்ணிலாதவர்களுக்கும் ஜோகிஜங்கமர்களுக்கும் கரசர
ணாதிகளற்றவர்களுக்கும் வினைவழியால்வெவ்விய ஆபத்துநேர்ந்துவ
தவர்களுக்கும், ஆதுலர்களுக்கும், கெடாததுன்பத்தை அடைந்துத
கதிரமென்னும்பிணியாலமெலிந்து மனநொந்தவர்களுக்கும், பின்
மம்சொலலும் சகலயாசகர்களுக்கும் சதாகாலமும்அவரவர்கள்விரு
ம்பியவண்ணம் மனக்களிபபோடும் உதவிசெய்வதைநாரதமுனிவர்கே
ட்ப்பட்டு வல்லாளமகாராஜனிடத்திற்கு மிகுந்தகருணையோடும் எ
ழுந்தருளிவந்தார். கசு

